INSCRIBED

TO

THE BELOVED MEMORY OF

**MY PARENTS.**

P. VIJIARANGA MUDALIAR

AND

P. MANICKAVELU AMMAL,

# PREFACE.

A somewhat rough translation of Cymbeline was written by me several years back and even acted on the stage. But it is only recently that I have been able to revise same completely; hence the delay in printing this book. Besides, a few obscene passages I have thought it fit to omit all those portions in the dream scene in the 5th act, which in the opinion of competent critics is not from the pen of the great master.

I shall always be thankful to my readers for any suggestions for improving any line or passage in these adaptation.

All persons desirous of staging this adaptation will do well to get my permission in time.

PAMMAL LODGE,
*4th June 1914.*

THE AUTHOR.

# சிம்ஹளநாதன்.



## நாடக பாத்திரங்கள்.

| | |
|---|---|
| சிம்ஹளநாதன் ... | ... சிம்ஹளத்தரசன். |
| கலாபரன் ... | ... அரசரின் தம்பி. |
| கேசரிநாத பாசதாமன் | ... ஹேமாங்கியின் கணவன். |
| பாலராயன் ... | ... மார்க்கன் என்று பெயர்பூண்ட, நாட்டை விட்டுத் துரத்தப்பட்ட ஓர் மந்திரி. |
| ஸ்ரீதரன் ... | ... சிம்ஹளநாதன் குமாரன், பாலராயனால் அபகரிக்கப்பட்டு, பாலதரன் என்னும் பெயருடன் வளர்க்கப்பட்டவன். |
| ஆர்வராகன் ... | ... சிம்ஹளநாதன் குமாரன், பாலராயனால் அபகரிக்கப்பட்டு, கடுவேலன் என்னும் பெயருடன் வளர்க்கப்பட்டவன். |
| பல்லாரியர் ... | ... ஓர் பாண்டிநாட்டான். பாசதாமன் நேசன். |
| ஈயாகாமன் ... | ... ஓர் பாண்டிநாட்டான். பாசதாமன் நேசன். |
| காயார் லோகசேனன் | ... பாண்டிநாட்டு சேநாதிபதி. |
| விசாகன் ... | ... பாசதாமன் ஆள். |
| கருணையர் ... | ... ஓர் வயித்தியன். |
| அரசி ... | ... சிம்ஹளநாதன் மனைவி. |
| ஹேமாங்கி ... | ... சிம்ஹளநாதன் முதல் மனைவிக்குப் பிறந்த பெண். |
| நீலா ... | ... ஹேமாங்கியின் பாங்கி. |

ஓர் சோழ நாட்டான், பாண்டிய தளகர்த்தன், இரண்டு சிம்ஹள தளகர்த்தர்கள், சிம்ஹளநாதன் மந்திரிகள் இருவர், கனவான்கள், பாங்கிகள், பாண்டிய சபைத்தவர், அருவங்கள், ஓர் ஜோசியன், சங்கீதக்காரர்கள், உத்தியோகஸ்தர்கள், சைனியங்கள், தூதர்கள், வேலைக்காரர்கள் முதலியோர்.

---

கதை நிகழிடம் :—சில சமயம் சிம்ஹளத்திலும், சில சமயம் மதுரையிலும்.

# சிம்ஹளநாதன.

## முதல் அங்கம்.

### முதல் காட்சி.

*இடம்—சிம்ஹளம். சிம்ஹளநாதன் அரண்மனைக்குட உள்ள தோட்டம்.*

*இரண்டு பெரியமனிதர்கள் வருகிறார்கள்.*

**மு. பெ.** நீர் எவனைச் சந்தித்தபோதிலும் முகத்தைச் சுளித்தவனா யிருக்கிறான்; அரசன் துயருறுவதைக் கண்டு, நமது மந்திரிகள் தாமும் துக்க முற்றவர்களாக நடிப்பதுபோல், நமது சுபாவங்களும் கிரஹங்களின் பலனை அவ்வளவு அதிகமாய் அனுசரிக்கக் காணோம்.

**இ. பெ.** ஆயினும், விசேஷமென்ன ?

**மு. பெ.** தனக்குப் பிற்காலம் இவ் வரசினுக் குரிய தன் மகளை, தான் சிலகாலத்திற்கு முன் மணம் புரிந்த மனைவியின் சகோதரனுக்குக் கொடுக்கத் தீர்மானித்திருந்தார் ; அப் பெண்ணோ நற் குணம் வாய்ந்த எளியவனை ஒரு சீமான்மீது காதல் கொண்டு அவனை வரித்தாள். அவளுக்குக் கலியாணமானவுடன், அவளது கணவன் நாட்டைவிட்டுப் போகும்படி ஆக்ஞாபிக்கப்பட்டான் ; அவளைச் சிறைப்படுத்தி யிருக்கிறது ; மேலுக்கு எல்லாம் துக்கமா யிருக்கிறது; ஆயினும் மன்னன்மாத்திரம் உள்ளுக்குள் உண்மையில் வருத்தப்படுவதாக எண்ணுகிறேன் நான்.

**இ. பெ.** அரசன் அன்றி மற்றெவரும் அங்ஙன மில்லையா ?

மு. பே. அப் பெண்ணை யிழந்தவனும் வருந்துகிறான்; அந்த விவாஹம் நடந்தேற வேண்டுமென்று அதிக ஆவல் கொண்டிருந்த அரசியும் அங்ஙனமே. அரசன் முகத்தைப்போல் தங்கள் முகங்களை மேலுக்கு வைத்திருந்தபோதிலும், எதைக் கண்டு கடிந்து நோக்குகிறார்களோ, அதே விஷயத்தில், உள்ளுக்குள் உண்மையில் சந்தோஷியாத மந்திரி, ஒருவனு மில்லை.

இ. பே. அது ஏன் அப்படி ?

மு. பே. ராஜ குமாரியைப் பெருது தவறினவன், குற்றங்களை எடுத்துக் கூறிடவும் யோக்கியதை யற்றவன்; அவளைப் பெற்றானே—அதாவது அவளை மணம் புரிந்தவன்—ஐயோ பாபம் உத்தம புருஷன்.—ஆகவே நாட்டைவிட்டுத் துறத்தப்பட்டான்—உலகெங்கும் அவனுக்குச் சமானமான மற்றொருவனைத் தேடிக் கண்டுபிடித்தாலும், அம் மற்றொருவனிடம் எதாவது குறை அகப்படும்; அப்படிப்பட்ட அருங் குணமுடையான் அவன். வெளிக்கு அத்தனை அழகும், உள்ளுக்குள் அத்தனை அருங் குணமும், வாய்த்த மனிதன் அவனை யன்றி மற்றொருவன் இம் மண்ணி லில்லையென மதிக்கிறேன்.

இ. பே. அவனை மிகவும் அதிகமாய்ப் புகழ்கிறீர்.

மு. பே. அவனது அருங் குணங்களை உள்ளபடிக்குக் குறைவாக உரைக்கிறேன். தக்கபடி விரித்துக் கூருது குறைத்தே கூறுகிறேன்.

இ. பே. அவன் பெயர் என்ன ? குடிப் பிறப் பெங்ஙனம் ?

மு. பே அவனது பரம்பரை யெல்லாம் பகுத் துரைக்க ஏலாது மன்னால்; அவன் தகப்பன் பெயர் சுசிலன், கேசபாலனுடன் வீரனாய்ச் சேர்ந்து பாண்டியர்களை எதிர்த்தவன்; அன்றியும் தேனுதாசனுக்கு கீர்த்தியுடன் உதவி புரிந்து பலர் புகழும்படி வெற்றி பெற்று, அவனால் பல பட்டப் பெயர்களையும் பெற்றான்; அதனால் அவனுக்கு கேசரிநாதன் என

னும் பட்டமும் கிடைத்தது. அவனுக்கு இப்பொழுது நாம் எடுத்துப் பேசும் இவனையன்றி, இன்னும் இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். அவர்கள் அக்காலத்திய யுத்தங்களில் கையில் கட்கத்துடன் மடிந்தனர். அதனால் பிள்ளைகள்மீது அதிக பிரீதிவைத்திருந்த வயோதிகனான அவர்கள் தகப்பன், புத்திர சோகம் மேலிட்டவனாய், உயிர் நீத்தனன். அச்சமயம் குணவதியான அவன் மனைவி, நாம் பேசும்படியான இவனை வயிற்றில் தரித்திருந்து, பிறகு பெற்றவுடன் மரித்தாள். அரசர் அக் குழந்தையை எடுத்து சவரட்சணை செய்து, கேசரிநாத பாசதாமன் என்கிற பெயரிட்டு, தன் பக்கத்திலேயே வைத்து வளர்த்து, வயதுக்கு வாய்த்தபடி சகல கல்விகளையும் கற்பித்தார். அவனும், நாம் காற்றை உட்கொள்வதைப்போல், அக் கலைகளையெல்லாம் அதி சீக்கிரத்திலும் அதி சுலபமாயும், கற்றுணர்ந்தவனாய், பருவ காலத்தில் முதிர்ந்தவனானான். இளைஞர்களுக்கோர் உதாரணமாயும், பருவம் வாய்ந்தவர்களுடைய நன்னடைக்கோர் கண்ணாடியைப் போலவும், கிழவர்களுக்கு வழி காட்டும் குழவியைப் போலவும்—எவளுக்காக நாட்டை விட்டுத் துறத்தப்பட்டானோ அந்த காதலிக்கோ—அவளது உயர்குணமே அவனையும் அவனது அருங் குணங்களையும் அவள் எங்ஙனம் மதிக்கின்றாள் என்பதை வெளிப்படுத்துகிறது—அவள் அவனை வரித்ததைக்கொண்டு அவன் எப்படிப்பட்ட மனிதன் என்பதை நாம் கற்றுணரலாம்.—இங்ஙனம் எல்லோருடைய பிரீதியையும் புகழையும் பெற்று அரண்மனையில் வசித்து வந்தான்.—அங்ஙனமிருப்பது மிகவும் அருமையன்றோ?

இ. பே. உம்முடைய விர்த்தாந்தத்தைக் கொண்டே அவனை நான் மதிக்கிறேன். ஆயினும் இதைக் கூறும்படி உம்மை வேண்டுகிறேன். அவனையன்றி அரசருக்கு வேறு குழந்தையில்லையா?

௭

மு. பே. அவருடைய ஒரே குழந்தை அவள். ஆயினும் உமக்குக் கேட்க விருப்பமாயின் இதையும் கவனிக்கலாம், அவருக்கு

இரண்டு பிள்ளைக ளிருந்தனர். மூத்தவன் மூன்றுவது வட திலும், இளையவன் இளங் குழவியாயிருந்தபொழுது அந்தப்புரத்தினின்றும் திருடிக்கொண்டு போகப்பட்டனர்; இன்றுவரையில் அவர்கள் எவ்வழி போயினர் என்பதை ஊகித் தறியக் கூடாமையா யிருக்கிறது.

இ. பே இது எத்தனை நாளைக்குமுன் நடந்தது ?

மு. பே. சுமார் இருபது வருஷங்களுக்கு முன்.

இ. பே. அரசனது குமாரர்களையே இப்படி எடுத்துக்கொண்டு போவ தென்றால்! எவ்வளவு அஜாக்கிரதையாய்க் காத்திருக்க வேண்டு மவர்களை! என்ன அசட்டையாய்த் தேடியிருக்க வேண்டும், இன்னும் கண்டுபிடிக்காதபடி!

மு. பே. அது எவ்வளவு ஆச்சரியகரமா யிருந்தபோதிலும், அந்த அஜாக்கிரதையைப்பற்றி நாம் எவ்வளவு நகைத்தபோதி லும், நடந்த தென்னவோ உண்மைதான், ஐயா.

இ. பே. நீர் கூறுவதை என்னவோ நான் நம்புகிறேன்.

மு. பே. நமது பேச்சை நிறுத்தவேண்டும். இதோ அக் கனவானும் ராணியும், ராஜகுமாரியும் வருகிறார்கள்.

[போகிறார்கள்.]

அரசி. பாசதாமன். ஹேமாங்கி வருகிறார்கள்.

அ. அப்படியன்று, குழந்தாய்; உறுதியாய் நம்பு. மண்ணிலுள்ள மற்ற மாற்றாந் தாய்களைப்போல் உன்மீது பொறாமையோ கூடிய கண்களை யுடையவளாய் என்னைக் காணமாட்டாய் நீ என்னுடைய கைதியே; ஆயினும், உன் காவலாளி, உன்னை அடக்கி வைக்கும் சிறையின் சாவிகளை உன்னிடமே ஒ புவிப்பாள்.—பாசதாமா, உன்பொருட்டோ, கோப மடை துள்ள கோமகனை நான் சாந்தப்படுத்திய உடன், நா உன் பட்சமா யிருப்பதை வெளியிடுவேன். பொறு, இ னும் கோபத் தீயானது அவரிடம் குடி கொண் டிருக்

றது. உன் புத்தி எனக் கறிவிக்கும் பொறுமையுடன் அர
சரது ஆக்கினைக்கு அடங்கி நடத்தல் நலமெனத் தோற்று
கிறது.

பா. மஹாராணி, தம் மனம்போல்; இன்றைத்தினமே இவ்விட
மிருந்து புறப்படுகிறேன்.

அ. ஆபத்தை அறிந்திருக்கிறாய் நீ; தடுக்கப்பட்ட ஆசையின்
தாபத்தைக் கருதி, தயை யுடையவளாய், தோட்டத்தில்
ஒரு முறை சுற்றி வருகிறேன், அரசர் நீங்க ளிருவரும்
ஒருங்கே பேச லாகாதென ஆக்கினை யிட்டிருந்தபோதிலும்.
[போகிறாள்.]

ஹே. ஆ! என்ன மாறுவேடம் பூண்ட மரியாதை! புண்படுத்தி
விட்டு அதைப் போக்கவும் வழி யுரைக்கும் நட்பறிந்த
நீலி!— என் மனதுக் கினிய மணாளா. என் தந்தையின்
கோபத்தைக் கருதுங்கால் கொஞ்சம் நான் அஞ்சுகிறேன்.
தெய்வ விதிப்படி அவருக்கு நான் உட்படுவது தவிர, அவ
ரது குரூரமான கோபமானது எனக் கொரு கெடுதியையும்
செய்யாது. நீர் போக வேண்டியதே! என்னைச் சுட்டெரிக்
கும் கோபப் பார்வையைப் பொறுத்தவண்ணம், கழிக்
கிறேன் என் காலத்தை இங்கு நான். உயிர்ப்பெற்ற காத
லா லன்றி, இவ் வுத்தம பூஷணத்தை மறுபடியும் இவ் வுல
கில் காண்போம் என்னும் உறுதியினால் உயிர் தரிக்கிறேன்.

பா. என் காதற் கரசியே! கண்ணே! கண்ணீர் விடேல் இனி. இல்
லாவிடின் மனிதர்களுக் குரிய மன உறுதி யற்றவன் என்று
மற்றவர் சந்தேகிப்பதற்கு இடங் கொடுப்பவனாவேன். கடி
மணத்திற் செய்த கட்டுறுதியினின்றும் கணமும் பிறழாக்
காதலனாய்க் கழிப்பேன் என் காலத்தை. என் உறைவிடம்
ராமாபுரத்தில், பல்லாரியன் என்பான் மனையில்; என் தந்தை
யின் தோழனா யிருந்தவர் அவர்; கடித மூலமா யன்றி
நேரில் அறிந்திலன் அவரை. காதற் கரசியே! நிருபம் அவ்
விடம் வரைகுவாய் நீ; கரு மையானது கடு விஷத்தா லான

தாயினும் நீ அனுப்பிடும் கடிதங்களி லுள்ள பதங்களை என் கண்களாற் பருகுவேன்.

அரசி மறுபடியும் வருகிறாள்.

அ. சுருக்கமா யிருக்க வேண்டுவேன் நான். அரசர் வந்திடின், அவரது அதிர்ப்திக்கு எவ்வளவு பாத்திர மாவேன் என்று பகர முடியா தென்றால்! [ஒரு புறமாய்] ஆயினும் அவர் இவ்வழி வரும்படி வலிக்கிறேன். நான் அவருக்குத் தீங்கு சூழும் சமயங்களி லெல்லாம், அவைகளை நன்மைகளாக மதித்து, விலை கொடுத்து வாங்குகிறார்; நா னிழைக்கும் தவறுகளுக்கு அதிக விலை கொடுக்கிறார்.

[போகிறாள்.]

பா. மண்மீது வாழ்விருக்கும் மற்றக் காலமெல்லாம் நாம் விட்டுப் பிரிவதற்கு விடை கேட்கினும், நமது பிரிவாற்றாமை பெருத்திடுமே யொழிய குன்றாது! நான் போய் வருகிறேன்.

ஹே. இல்லை, இன்னும் கொஞ்சம் பொறும்; காற் றருந்தும் பொருட்டு கடிமா ஏறி, தாம் செல்வதாயினும், இவ்வளவு விரைவிற் பிரிதல் எவ்வளவும் ஒவ்வாதே. இதோ பாரும், காதலா, இக் கமலமானது கற்பிற் கரசியாம் என் அன்னையுடையது. என் னிதயமே! இதைப் பெற்றுக்கொள்ளும்; ஹேமாங்கி மடிந்து, மற்றொரு மனைவியை தாம் மணக்கும் வரையில், இதை வைத்திரும்.

பா. எப்படி! எப்படி! மற்றொரு மனைவியா?— கருணைக் கடவுளே! எனக் கிருக்கும் இது ஒன்றே போதும். வேறொன்றைக் கட்டி யணைக்கக் கருதாவண்ணம் சாக்காடெனும் சங்கிலியால் எனைக் கட்டிடும். [மோதிரத்தைக் கையி லணிந்து] இவ்விடம் இருப்பாய் நீ, அறிவானது அவ்விடம் காத்திடச் சக்தியுள்ளவரை.—கட்டிக் கரும்பே! காதற்கிளியே! உனக்குப் பெரும் நஷ்ட மாகும்படி எங்ஙனம் எளிய என்னைக் கொடுத்து விலை யிலா உன்னைப் பெற்றேனோ, அங்ஙனமே

இச் சிறு விஷயங்களிலும் உன்னிடமிருந்து லாபத்தையே பெறுகிறேன். என் பொருட்டு இதை யணிவாய், காதலைக் குறிக்கும் கனகத் தளை இது; கட்டழகியாம் தைதியின் கரத்தில் இதைப் பூட்டுகிறேன்.

[அவளது கரத்தில் ஓர் கொலுசை அணிவிக்கிறான்.]

ஹே. ஈசனே! ஜகதீசனே! எப்பொழுது நாம் மறுபடியும் ஒருவரை யொருவர் பார்ப்போம்!

சிம்ஹளநாதனும், மந்திரிகளும் வருகிறார்கள்.

பா. அந்தோ! அரசன்!

சி. கெடுகெட்ட பஞ்சையே! நில்லாதே! போ! என் கண் படாதே! இந்த ஆக்கினையின் பின், உன் அற்பத்தனத்தால் என் அரண்மனையை அசஹியப் படுத்துவையாயின் அந்த க்ஷணம் நீ இறக்கவேண்டியதுதான்! போ! உன்னைக் காண்பது விஷத்தைக் காண்பதாகும்.

பா. ஈசன் உம்மை ரட்சிப்பாராக! உமது அரண்மனையில் மிகுதியா யிருக்கும் நல்லோர்களுக்கு நலம் கொடுப்பாராக! நான் போய்விட்டேன்.

[போகிறான்.]

ஹே. இதனிலும் குரூரமானது எம வாதனையிலு மிராது.

சி. நன்றி கெட்ட பதரே! இவ் வயதில் என் தேகத்தின் நலத்தைக் கோராது முதுமை என்னை விரைவினில் வந்தெய்திடச் செய்கிறாய்!

ஹே. அண்ணா, உம்மை நான் வேண்டிக்கொள்ளுகிறேன். உமது தொல்லையால், உமக்கே துன்ப மிழைத்துக்கொள்ளாதீர். உமது உக்கிரமானது எனக்கொன்றும் செய்வதை அறிகிலேன். அதனிலும் அரிதான ஓர் கவலை எல்லா வியாகுலங்களையும், பயங்களையும் அடக்கிவிடுகிறது.

சி. கருணைக்குப் பாத்திரமாகாதபடி ஆணையை மீறி நடக்கிறாயோ?

ஹே. கோரிக்கை யழிந்து ஏங்கி நிற்கிறேன். அவ் வழியில் உமது கருணையைக் கடந்தேன்.

சி. இன்றேல் எனது அரசியின் தம்பியை நீ அடைந்திருக்கலாமே!

ஹே. ஹா! என் அதிர்ஷ்டமே அவ்வாறு அடையச் செய்யாதது! நான் கழுகை விட்டுக் கருடனைக் கோரினேன்.

சி. பிச்சைக்காரனைக் கைப்பிடித்தாய் நீ! இழிவுக்கு இருப்பிடமாய் என் ஸிம்ஹாசனத்தைச் செய்திருப்பாய்!

ஹே. அன்று! அதற்கொரு எழிலை ஏற்றுவித்தேன்.

சி. பாழான பதரே!

ஹே. ஐயா! பாசதாமர்மீது நான் காதல்கொண்டது, தம்முடைய தவறாகும். எனது விளையாட்டுத் தோழனாய், அவனை வளர்த்து வந்தீர். அவரோ எந்த வனிதையையும் வரிக்கத் தக்க குணம் உடையவர். அவர் என் பொருட்டு கொடுக்கும் விலை அத்தனையும் அதிகமேயாம்.

சி. என்ன! உனக்குப் பயித்தியம் பிடித்திருக்கிறதா என்ன?

ஹே. ஏறக்குறைய அப்படியே, அண்ணா! ஈசன் எனது மதியைச் சரிப்படுத்துவாராக!—ஹா!—நான் ஒரு ஆயச் சிறுமியாயும் எனது காதலன் அயல் வீட்டு ஆயக் கோனன் மகனாயு மிருந்திருக்க லாகாதா!

அரசி மறுபடியும் வருகிறாள்.

சி. ஏ! மூட புத்தியே! அவர்களிருவரும் மறுபடியும் சந்தித்தார்கள்; நமது கட்டளைப்படி நடந்தாயில்லை நீ! போ அவளை அழைத்துக்கொண்டு; காவலிலிருத்து அவளை!

அ. கொஞ்சம் பொறுமையாயிருக்கும்படி வேண்டுகிறேன் பொறும்.—என் பிரியமான பெண்ணரசியே, நீயும் பொறு

மனே வல்லபரான மஹாராஜா, எங்களைப்பற்றி உமக்கு கவலை வேண்டாம். உமது ஆழ்ந்த அறிவிற்கு அமைந்தபடி உமது ஆத்திரத்தை ஆற்றிக்கொள்ளும்.

சி. அன்று, அவள் தினம் ஒரு துளி ரக்தமாகக் குறைந்து, தேகம் குன்றி, வயோதிகத்தை யடைந்து, இம் மதிஹீனத்தின் பொருட்டு மடியட்டும்!

[சிம்ஹளநாதன் மந்திரிகளுடன் போகிறான்.]

அ. சீ! இந்தப் பிடிவாதத்தை விடவேண்டியதுதான்!

விசாகன் வருகிறான்.

இதோ உனது வேலையாள்.—என்ன அப்பா, இப்பொழுது? என்ன சமாசாரம்?

வி. உமது தம்பியாகிய அரச குமாரன் எனது எஜமானனை சண்டைக் கிழுத்தார்.

அ. ஹா! கேடொன்றும் சம்பவிக்க வில்லையென நம்புகிறேன்?

வி. சம்பவித்திருக்கும்—என் எஜமானன் விளையாட்டாகக் கொள்ளாது வெம் போர் புரிந்திருப்பா ராயின்; அன்றியும் அவர் கோபத்தை உதவியாகக் கொண்டிலர். பக்கலி லிருந்த பெரிய மனிதர்கள் பகுத்துவிட்டனர் அவர்களை,—

அ. அதற்காக அதிக சந்தோஷப்படுகிறேன்.

ஹ. உமது தம்பி என் தந்தையின் உற்ற நேசன், அவர் பக்கம் சேர்கிறார். பரதேசியின்மீது பாணம் தொடுப்பதா!—ஹா! சுத்த வீரனே! ஆப்பிரிக்கா கண்டத்தில் அவர்க ளிருவரும் ஒருங்கே யிருப்பார்களாயின், அருகில் நா னிருந்து அற்ப ஊசி யொன்றால் முதுகிடுபவனை முட்போல் குத்திடுவேன்.—உனது எஜமானனை விட்டு இங் கேன் வந்தாய்?

வி. அவர் கட்டளையின்மீது. அனுமதி அளித்திலர் துறைமுகம் வரை அவரைத் தொடர்ந்து செல்ல. தங்களுக்கு என தூழி யம் கொள்ளத் திருவுள மிருக்கும்பொழுது, நான் என்ன

கட்டளைகளுக்கு உட்பட்டிருக்கவேண்டுமென்று இவ் வுத்தரவுகளை விட்டுச் சென்றார்.

அ. இவன் உனது உண்மையாம் ஊழியனாயிருந்தவன். இனியும் அங்ஙனமே இருப்பானென எனது வார்த்தையைக் கொடுப்பேன்.

வி. அரசிக்கு அடியேன் வந்தனம்.

அ. வா, சிறிது உலாவுவோம்.

ஹே. அரை நாழிகை கழித்து என்னிடம் வந்து பேசும்படி வேண்டுகிறேன். எப்படியும் புறப்பட்டுப் போய் எனது பிராண நாதரைக் கப்பலின்மீதாவது நீ காணவேண்டும். அதுவரையில் விடை பெற்றுக்கொள்.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி.

இடம்—பயிரங்கமான ஓர் ஸ்தலம்.

களோபரனும், இரண்டு பிரபுக்களும் வருகிறார்கள்.

மு. பி. ஐயா, தாங்கள் தங்களுடைய சட்டையை மாற்றவேண்டிக் கேட்டுக்கொள்வேன். சண்டையின் வேகத்தில் சட்டையெல்லாம் பலி ஆட்டினுடலைப்போல் ரத்தம் படிந்திருக்கிறது. காற்று எந்த வழியாகப் போகிறதோ, அதே வழியாகக் காற்று வரும்! உம்மிடமிருந்து வரும் காற்றைப் போல் அத்தனைக் களங்க மற்றது வெளியே வேறொன்றும் கிடைக்கமாட்டாது.

க. என் சட்டை ரத்தம் படிந்திருந்தால் சற்று அதனை மாற்றவேண்டியதே.—நான் அவனைக் காயப்படுத்தினனா?

இ. பி. [ஒரு புறமாக] இல்லை, உண்மையில்; அவரது பொறுமையைத்தான் புண்படுத்தினீர் அதிகமாய்.

மு. பி. காயப்படுத்தினீரா! அவனுடனும் சரி, பிணமுஞ் சரி, உலகத்திலுள்ள ஆயுதங்களெல்லாம் ஊர்கோலம் போகலாமே அவனது காயத்தின் வழியாக!

இ. பி. [ஒரு புறமாக] அவன் கத்தி கடன்பட்டிருந்தது. உமது உடலை ஊடுருவிப் பின்சென் றொளித்தது.

க. படுக்காளி! என்னை எதிர்க்காது பயந்தல்லவோ ஓடினான்.

இ. பி. [ஒரு புறமாக] ஆம். முன்னாக ஓடிவந்தான், உமது முகத்திற் கெதிராக.

மு. பி. எதிர்ப்பதாவது உம்மை! முன்பே முதுகு காட்டினவன், முழு ஓட்டந்தான் பிறகு.

இ. பி. [ஒரு புறமாக] உமது ஓட்டத்தை அவனால் பிடிக்க முடியுமா? உளறுகிற வாயைப் பார்!

க. அவர்கள் மாத்திரம் வந்து தடுத்திராவிட்டால்!

இ. பி. [ஒரு புறமாக] தரையில் உமது உடலை நீட்டி, கத்தியின் உருவம் இவ்வளவு நிகளம், என்று காண்பித்திருப்பீர்.

க. இப்படிப்பட்ட பயலின்மீது அவள் ஆசைவைத்து என்னை வெறுப்பதா!

இ. பி. [ஒரு புறமாக] கணவனைகத் தக்கவனை வரித்தல் காதகமாயின் அவள் கடும் பாவியே!

மு. பி. அரசே, நான் உம்மிடம் அநேக முறை கூறியபடி அவளது அழகுக் கேற்ற அறிவு அவளிடம் இல்லை. கண்ணுக்குக் கட்டழகியோ! ஆயினும் அதற்குத் தகுந்த புத்தி சூட்சமம் அவளிடம் தோன்றப்பட இல்லை.

இ. பி. [ஒரு புறமாக] அம் மடந்தையின் மதி மடையர்கள்மீது பிரகாசிப்ப தில்லை, எங்கு இவர்களின் மடத்தனம் அதனை மழுங்கச் செய்கிறதோ என்று.

க. வாருங்கள், என் அறைக்குப் போகிறேன். எப்படியாவது கொஞ்சங் காயப்படுத்தி யிருக்கவேண்டும்!

[ஒரு புறமாக] நான் அப்படிக் கோரவில்லை. ஆயினும் காயப் படுவதானால் இந்த எருமைக்குத்தான் பட்டிருக்கவேண்டும். அப்படி பட்டாலும் உறைக்கப் போகிறதா, நன்ன !

நீங்கள் என்னுடன் போகிறீர்களா ?

பிரபுவின் ஆக்ஞைப்படியே.

இல்லை, வருங்கள். எல்லோரும் ஒன்றாய்ப் போவோம்.

சரி; அப்படியே, பிரபு. [போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## மூன்றும் காட்சி.

இடம்—சிம்ஹளநாதன் அரண்மனையில் ஓர் அறை.

ஹேமாங்கியும், விசாகனும் வருகிறார்கள்.

அத் துறையின் கரையில் ஓர் மரமாய் வேரூன்றி வளர்ந்து ஒவ்வொரு மரக்கலத்தையும் விசாரித்திருக்கலாகாதா என்று கோருகிறேன். அவர் எனக் கேதாவது கடிதம் எழுதி, அக் கடிதம் என்னிடம் வந்து சேராதிருக்குமாயின், பிராணனை யிழக்கும்படி சிட்சிக்கப்பட்டவள், கருணையினால் மன்னிக்கப்பட, அம் மன்னிப்பு அவளிடம் சமயத்தில் போய்ச் சேராததாகும். கடைசியில் அவர் உன்னிடம் பேசிய தென்ன ?

"தன் ராணி, தன் ராணி" என்பதாம்.

பிறகு அவர் குட்டையை வீசினர் ?

அப்புறம் அதற்கு முத்த மிட்டார், அம்மணி.

அறிவிலாக் குட்டை ! அவ் விஷயத்தில் என்னினும் அதிக சந்தோஷ முள்ளது !—அப்புறம், அவ்வளவுதானு ?

வி. இல்லை, அம்மணி; இக் கண்ணினாலும் காதினாலும், மற்றவர்களிடமிருந்து நான் அவரை எவ்வளவு நேரம் பகுத்தறிய அவரால் செய்யக் கூடுமோ அதுவரையில், கப்பலின் மேல் பாகத்தில் நின்று, தன் மனமானது எவ்வளவு மெல்லச் செல்கிறதென்பதையும், கப்பலானது எவ்வளவு வேகமாய்ச் செல்கிறதென்பதையும் நன்றாயறிவிக்கும்பொருட்டு, தன் மனமானது அலைப்பட்டு உந்தும்பொழுதெல்லாம், தன் கைகுட்டையையும், அங்க வஸ்திரத்தையும், முண்டாசையும் அசைத்த வண்ணம் இருந்தார்.

ஹே. உனது கண்களைக் கொண்டு அவரைப் பின் தொடருங்கால் அவர் ஒரு கறுப்புப் புள்ளாகி, அதனிலும் சிறிதாகிறவரையில், நீ பார்த்திருப்பாய்.

வி. அம்மணி, அங்ஙனந்தான் செய்தேன்.

ஹே. தூரத்தில் மெல்ல மெல்ல சிறிய உருவாகி, எனது ஊசியின் முனையைப்போலாகிறவரையில் எனது கண்களைக் கொண்டு பார்த்து, அன்றி, தூரத்தில் அவர் சிறு துரும்பைப் போலாகி காற்றுடன் காற்றாய்க் கலக்கும் வரையில் கண்களைக் கொண்டு பின் தொடர்ந்து, நெறித்து நோக்கி, அவைகளைப் பறி கொடுத்திருப்பேன் அவரைப் பார்ப்பதன் பொருட்டு. பிறகு என் கண்களைத் திருப்பி கண்ணீர்விட்டுக் கதறியிருப்பேன்.—ஆயினும் விசாகா, அவரிடமிருந்து நமக்கு எப்பொழுது சேதி வரும்.

வி. அம்மணி, அவர் நமக்கு எவ்வளவு கூடிய சீக்கிரத்தில் எழுதக் கூடுமோ அவ்வளவு விரைவில் எழுதுவார் என்று உறுதியாய் நம்பும்.

ஹே. அவரிடமிருந்து நான் விடை பெறுமுன் எத்தனையோ அழகிய விஷயங்களெல்லாம் சொல்லலாமென்றிருந்தேன்; இன்னின்ன காலங்களில் இன்னின்னபடி அவரைப்பற்றி நான் நினைத்திடுவேன் என்று அவரிடம் உரைத்திடுமுன், பாண்டிய நாட்டுப் பாவையர் அவருடைய நற்குணத்தை யழித்து

என்னைப் பங்கப்படுத்தாமலிருக்கவேண்டுமென்று அவரை நான் பிரமாணம் செய்யும்படி செய்யுமுன், அன்றியும் காலையிலும், மத்தியானத்திலும், சாயங்காலத்திலும் நான் அவரைக் குறித்து ஜகதீசன் சந்நதியில் தியானம் செய்யும் பொழுது, தானும் தியானம் செய்து, என்னைச் சந்திக்கும் படி அவருக்குக் கட்டளையிடுமுன், ஒரு துன்பமும் அணுகாதபடி அவருக்கு நான் கூற எண்ணியிருந்த இரண்டு மங்கள வார்த்தைகளின் மத்தியில், நான் கொடுக்க எண்ணியிருந்த முத்தத்தைத் தருமுன், எல்லாவற்றையும் அழித்து, மொட்டுகளை யெல்லாம் வாடி வதங்கச் செய்யும் கொடுமையாம் வாடைக் காற்றைப்போல், என் பிதா வந்து சேர்ந்தார்.

ஓர் பாங்கி வருகிறாள்.

பா. அம்மணி, தேவியவர்கள் உம்மைக் காண விரும்புகிறார்கள்.

ஹே. உன்னை நான் செய்யும்படி சொல்லியிருக்கிறவைகளை யெல்லாம் சித்தம்செய்து அனுப்பிவிடு. நான் ராணியிடம் போகிறேன்.

வி. அப்படியே செய்கிறேன், அம்மணி.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## நான்காம் காட்சி.

இடம்—ராமாபுரம். பல்லாரியன் வீட்டில் ஓர் அறை.

பல்லாரியன், ஈயாகாமன், ஒரு சோழநாட்டான் வருகிறார்கள்.

ஈ. நான் சொல்வதை நம்பும் நீர். நான் அவரைச் சிங்களத்தில் பார்த்திருக்கிறேன். அப்பொழுதே வளர் பிறையைப் போல் விர்த்தியாகிக்கொண்டு வந்தார். வதந்தியானது இப்பொழுது வகுத் துரைக்கும் பெயரை வகிப்பாரென அப்பொழுதே வழங்கியது. அக் காலத்தில் அவரது அபூர்வ

குணங்களெல்லாம் அவர் பக்கவில் அட்டவணை போடப் பட்டிருந்தபோதிலும், அவைகளை ஒவ்வொன்றாக எடுத்து நான் அவரைப் பரிசோதிப்பதாயினும், அப்பொழுது ஆச் சரியத்தின் உதவி யின்றி அவரை நோக்கியிருப்பேன்.

ப. உள்ளும் புறமும் அவரை உன்னத மாக்கிய, இப்பொழுது அவரிட மிருக்கும் உத்தமங்கள் அவரிடம் அதிகமாய்க் குடி புகாமுன், நீர் கண்டதைப்பற்றிப் பேசுகிறீர்.

சோ. நான் அவரைச் சோழ நாட்டில் கண்டிருக்கிறேன். அவ ரைப்போல் ஆதித்யனை எறெடுத்துப் பார்க்கத் தக்க அநே கர்கள் அவ்விடம் இருந்தார்கள்.

ஈ. அவர் தன் அரசரின் அரும் புதல்வியை மணஞ் செய்து கொண்ட அவ் விஷயம்—இதில் சீர் தூக்குவதாயின் அவள் இவர்மீது வைத்த மதிப்பாகுமது, இவர் சொந்த மதிப் பெனக் கருதலாகாது அதை—உண்மையி லிருப்பதைவிட உயர்த்திக் காட்டுகிறது என்பதில் எனக்குச் சந்தேகமே யில்லை.

சா. பிறகு தன் தேசத்தினின்றும் துறத்தப்பட்டது,—

ஈ. ஆம். அதுவும்; துயரப்படத் தக்க இப் பிரிவினைக் குறித் து துக்கப்படும் அவள் பக்கம் சார்ந்தாரது ஒப்புதலும், வியக்கத் தக்கபடி அவர் பெருமையை விஸ்தரித்துப் பேசு கின்றன. அவள் தீர்மானத்தை அப்படியாவது ஊர்ஜிதப் படுத்தவேண்டுமே; இல்லாவிடின், வகையொன்றில்லா வறி ஞனை வரித்தாள் என்று ஆட்சேபிப்பதாலல், அவலமாய் முடியும். அது கிடக்கட்டும். அவர் உம்முடன் வசிக்க வரும்படி எங்ஙனம் நேர்ந்தது? உமது நேசத்தில் எப்படி நுழைந்தார்?

ப. அவரது தந்தையும் நானும் ஒரு வேந்தன்கீழ் வீரர்களாய் வாழ்ந்தவர்கள். என் னுயிர்பொருட்டே அவர் தந்தைக்கு நான் கடன்பட்டவனு யிருந்தேன் பன்முறை.

பாசதாமன் வருகிறான்.

இதோ வருகிறார் ஈழநாடர். தங்களைப்போன்ற அறிவுடைய பிரபுக்கள், அவரைப்போன்ற அருங் குணம் உடைய அயலார்களுக்குச் செய்யத் தக்க மரியாதையுடன் அவர் உம்மால் கௌரவப்படுத்தப்படட்டும். உங்களெல்லோரையும் நான் வேண்டிக்கொள்ளுகிறேன்; இச் சீமானை நன்கு அறிவீர்களாக. பெருந் தன்மை வாய்ந்த எனது பிரிய நேசனென இவரை உமக்கு எடுத்துக் கூறுவேன். அவரது எதிரிலேயே அவரது குணங்களை எடுத்துரைத்தல் ஏற்ற தன்று. அதன் மகிமை பிறகு உமக்கு விளங்கும்படி, கூறுதுவிடுகிறேன்.

சோ. ஐயா, அரளி நகரத்தில் நாம் ஒருவரை ஒருவர் கண்டிருக்கிறோம் அல்லவா ?

பா. அப்பொழுது நீர் எனக்குச் செய்த மரியாதையின்பொருட்டு நான் அதுமுதல் உமக்குக் கடனாளியாகவே யிருக்கிறேன். நான் அதன்பொருட்டு எக் காலமும் பிரதி செய்ய வேண்டியவனே, அப்படிச் செய்தும் அக் கடனை அடைக்க என்னால் ஏலாது.

சோ. ஐயா, ஏதோ நான் செய்த சிற்றுதவியை அதிகமாய்ப் பாராட்டுகிறீர். அச்சமயம் எனது நாட்டாரையும் உம்மையும் நான் ஒருமைப்படுத்தியது எனக்குச் சந்தோஷமே. ஆயினும் அத்தனை அற்ப அனுவசியமான விஷயத்தைப் பற்றி, ஒருவருக் கொருவர் கொல்லவேண்டுமென்று கோபம் கொண்டு நீங்கள் எதிர்த்து நின்றது 'இரங்கத் தக்க விஷயமே.

பா. ஐயா, உமது அனுமதியின்மீது உரைக்கிறேன் இதை; அக் காலத்தில் சிறு வயதுடைய தேச சஞ்சாரியா யிருந்தேன். மற்றவர்களுடைய அனுபோகத்தை துணையாகக் கொண்டு என் நடவடிக்கையை நடத்தாது, நான் கேட்டதையே

கடைப்பிடித்து நடக்க விரும்பின காலம் அது. ஆயினும், இப்பொழுது எனது ஆராய்ந்தறியும் தீர்மானத்திலும்— அங்ஙனம் கூறுவதற்காக என்னை மன்னிக்கவேண்டும்— எனது வாதமானது அத்தனை இலேசானதாகத் தோற்றப் படவில்லை.

சோ. உண்மையில் கட்கத்தைக் கையிலேந்தி தீர்மானிக்கச் செய்யத் தகுந்த விஷய மன்று. அதுவும், நீங்களிருவரும் யுத்தம் புரிவதென்றால், யாராவதொருவர் மற்றொருவரை முறியடித் திருக்கவேண்டும், அல்லது இருவரும் மரித்திருக்கவேண் டும்.

ஈ. மரியாதைக் குறைவின்றி, மற்றென்ன அக் கலகம், எனக் கேட்டறியலாமோ நாங்கள்?

சோ. சுகமாய்க் கேட்கலாம் என்று நினைக்கிறேன். அது பகிரங் கமாய் நடந்த வாதம். ஆகவே, ஆட்சேபனைக்கிடமின்றி அதை எடுத்துரைக்கலாம். நேற்றிரவு, நாம் ஒவ்வொருவரும், அவரவரது தேசத்து தெரிவையரைப்பற்றிப் புகழ்ந்து பேசி வாதாடினோமே, ஏறக்குறைய அது போன்றதே. இச் சீமான், அச் சமயம், தனது தேசத்துப் பெண்மணியே சோழ நாட்டுச் சிறந்த சுந்தரிகளெல்லோரையும்விட, அழகிலும், கற்பிலும், அருங் குணத்திலும், மனம் மாறாமையிலும், மற் றவர்கள் அடையக் கூடாமையிலும், சிறந்தவள் என்று எடுத்துரைத்தார், அன்றியும் அதைத் தன் ரத்தத்தைக் கொண்டு ரூபிப்பதாயும் கூறினார்.

ஈ. அப் பெண்மணி இப்பொழுது உயிருடன் இல்லைபோலும். அல்லது இச் சீமானுடைய எண்ணம் இதற்குள் ஒளி மழுங் கி இருக்கவேண்டும்.

பா. அவள் தன் அருங் குணத்தையும், நான் எனதெண்ணத் தையும், இன்னும் கைவிடாது காத்திருக்கிறோம்.

ஈ. பாண்டிய நாட்டு எங்கள் பாவையர்முன் அப் பெண்ணை நீர் அத்தனை உயர்ந்தவளாக எண்ண லாகாது.

பா. சோழ நாட்டில் என்னை எதிர்த்துக் கூறியதுபோல், இவ்விடமும் என்னை அவ்வளவு எதிர்த்துக் கூறுவதானால், அவள் என் காதலியா யல்லாது அவள் அருங் குணத்தை மாத்திரம் மெச்சுவதாயினும், அப் பெண்மணியைப்பற்றிக் கூறியதில் அணுவளவும் குறையேன்.

ஈ. எவ்வளவு குணமுடையவளோ அவ்வளவு அழகுடையவள், என்று இரண்டையும் ஜதைப்படுத்திக் கூறுவதானால், அவ்வளவு அழகும் அத்தனை நற்குணமும், சிம்ஹள தேசத்துச் சீமாட்டிகள் அடையத் தகுந்ததைவிட அதிக மானது. நான் இதுவரையிற் கண்ட அநேகம் வயிரங்களைவிட அதோ உமது விரலி லிருப்பது அதிக காந்தி யுடையதா யிருப்பது போல, நான் கண்ட மற்ற காரிகையர்களைவிட, முற்பட்டவளாயின், அவள் அநேகரைவிட அதிக மேம்பட்டவளென்றே நான் நம்புதல் வேண்டும். ஆயினும், உலகத்திலுள்ளவற்றி லெல்லாம் சிறந்த, வயிரத்தை நான் கண்டே னில்லை, சீமாட்டியை நீர் கண்டீ ரில்லை.

பா. நான் மதிப்பிட்டபடி அவளைப் புகழ்ந்தேன்; அங்ஙனமே என் வயிரத்தையும் புகழ்கிறேன்.

ஈ. அதை யெப்படி மதிக்கின்றீர்?

பா. உலகத்தில் வே றொருவருக்கும் கிட்டமாட்டாததாக.

ஈ. உமது ஒப்புயர் வில்லா மடந்தை மடிந்தாவ திருக்கவேண்டும், அல்லது நீர் அவளைக் கொஞ்சம் அதிக விலையாய் மதித்திருக்கவேண்டும்.

பா. நீர் தவறுக எண்ணுகிறீர். இந்த வயிரமானது வாங்கத் தகுந்த ஐஸ்வரிய மிருக்கு மாயின் விற்கப்படலாம்; கொடுக்கத் தக்க குண மிருக்கு மாயின் கொடையா யளிக்கப் பட

லாம். அப் பெண்மணியோ, விற்கத் தக்க பொருள் அல்ல, ஈசனே கொடையாய்க் கொடுக்கத் தக்கவள்.

ஈ. அவ்வாறு ஈசன் உமக் களித்தார்போலும் அவளை ?

பா. அவ்வாறே அவர் கருணையினால் காப்பேன் அவளை !

ஈ. பட்டப் பெயரில் உம்முடையவளாக நீர் அவளைப் பாவிக்கலாம். அயலி லுள்ள நிலங்களில் அறியாதவனும் சாகுபடி செய்வ துண்டு, என்பதை அறிந்திருக்கிறீர் நீர். உம்முடைய மோதிரமானது களவும் போகலாம். ஆகவே உமது விலை கூற முடியா வஸ்துக்களில், ஒன்று பேதமை யுடையது, இன்னொன்று பேதிக்கத் தக்கது. ஒரு கபட முள்ள திருடன், அல்லது அத் தகைக் குணம் வாய்ந்த சோரன், இவ் விரண்டையும் ஜெயிப்பதாகப் பந்தயம் போட முடியும்

பா. அதைப் காப்பதிலோ, இழப்பதிலோ, பேதை யென் றவளைக் கூறுவீ ராயின், என் காதலியின் கற்பை அழிக்க வல்லமை வாய்ந்த கபடன், உமது பாண்டிய நாட்டி லில்லை. திரள் திரளாக உமது தேசத்தில் திருடர்க ளிருக்கிறார் களென்பதில் எனக்குச் சந்தேக மில்லை. அங்ஙன மிருந்தும் என் மோதிரத்திற்காக நான் அஞ்ச வில்லை.

ப. நேசர்களே, இதனுடன் விடுவோ மிதை.

பா. ஐயா, மனப்பூர்வமாக; இப் பெருமை வாய்ந்த சீமான் என்னை அன்னியனாகப் பாவிக்க வில்லை. அதற்காக நான் அவருக்கு வந்தனம் செய்தல் வேண்டும். பார்த்ததும் பழகிவிட்டோம் நாங்கள்.

ஈ. இதுபோல், ஐந்து முறை சம்பாஷிப்பே னாயின், உம தழகிய காதலியின் சம்மதியைப் பெறுவேன் நான். உமக்குக் கூறிய உறுதி மொழியினின்றும் மாறி எனக் கிணங்கும்படியும் செய்வேன், அவளைப் பார்த்து அவளுடன் பேசச் சந்தர்ப்பம் மாத்திரம் வாய்க்கு மாயின்

பா. முடியாது, முடியாது.

ஈ. அப்படிச் செய்வதாக, உமது மோதிரத்திற் கெதிராக, எனது ஆஸ்தியில் பாதியைத் தைரியமாகப் பந்தயம் வைக்கிறேன். இங்ஙனம் செய்வது அம் மோதிரத்தை அதிகமாய் மதிப்ப தாகும். நான் பந்தயம் வைப்பது அவளது கற்பைக் குறித் தன்று; அதில் உமக் கிருக்கும் நம்பிக்கையைப் பற்றியே. இதிலும் உமக்கு வருத்தம் இல்லாதபடி, இவ் வுலகி லுள்ள எந்தப் பாவையைக்குறித்தும், இவ்வாறு பந் தயம் கூறச் சித்தமா யிருக்கிறேன்.

பா. ஆகாத காரியத்தை ஆக்கிவைக்க முடியுமென அதிக மோசம்போயிருக்கிறீர். உம்முடைய முயற்சியினால் பெறத் தக்கதைத் தாங்க, நீர் சக்தியுள்ளவர் என்பதில் எனக்குச் சந்தேக மில்லை.

ஈ. என்ன அது ?

பா. முறி யடிப்பு—ஆயினும் உமது முயற்சி எனக் கூறுகிறீரே, அது இன்னும் அதிகமாய்ப் பெறல் வேண்டும் —அதற்குத் தக்க தண்டனையும் வேண்டும்.

ப. நண்பர்களே ! போதும் இது, நிறுத்துங்கள். திடீரென்று இவ் விஷயம் வந்தது. பிறந்தபடியே இறக்கட்டும் திடீரென் று; நான் உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன். நீங்கள் ஒருவரை யொருவர் இன்னும் நன்கு யறிந்து நண்பர்களா யிருக்கவேண்டும்.

ஈ. என் ஆஸ்தியையும் என் அடுத்த வீட்டுக்காரன் ஆஸ்தியை யும் இரண்டையும், நான் சொன்ன சொல்லை முடிப்பதாகப் பந்தயம் வைத்திருக்கவேண்டும்.

பா. எந்தப் பதிவிரதையைப் பரீட்சைபார்க்க உமக் கிஷ்டம் ?

ஈ. உம்முடையவளை ! கற்பினால் காக்கப்பட்டிருப்பதாகக் கவலை யின்றி இருக்கிறீரே, அக் காரிகையை; உமது மோதிரத் திற் கெதிராகப் பதினாயிரம் பொன் பந்தயம் கட்டுகிறேன். இரண்டாம் முறை பார்த்துப் பேசும்படி உமது காதலி

இருக்கும் அரண்மனைக்கு என்னைச் சிபாரிசுமாத்திரம் செய்யும். வேறொன்றும் வேண்டியதில்லை. வேறொருவருக்கும் கிட்டாதென நீர் மதிக்கின்ற அவள் கற்பை அவ்விடமிருந்து அபகரித்துவருகிறேன், பாரும்.

பா. உமது பொன்னுக்கெதிராகப் பொன்னைப் பந்தயம் வைக்கிறேன். இம்மோதிரம் என் விரலைப்போல் அத்தனை எனக் கருமையானது. என் விரலின் ஒரு பாகமானது.

ஈ. நீர் பயப்படுகிறீர், அந்த விஷயத்தில் புத்திசாலிதான். ஸ்திரீகளின் உடலை இம்மிக்கொரு இலட்சம் கொடுத்து வாங்கினும், களங்கம் வராது காக்க முடியாது அதை உம்மால். ஏதோ உமக்குச் சில கோட்பாடுகள் உண்டுபோலும். அதன் பொருட்டு கொஞ்சம் அஞ்சுகிறீர்போலும்.

பா. உமது நாவிற்கு இவ்வாறு கூறல் ஒரு வழக்கம்போலும். உம்மிடம் இதைவிட உறுதியான எண்ணமொன்றுளதென நம்புகிறேன்.

ஈ. என் வார்த்தைகளுக்கு நானே தலைவன். நான் சொன்னபடி செய்து முடிப்பதாகச் சத்தியம் செய்கிறேன்.

பா. செய்வீரா? நீர் திரும்பி வருமளவும் என் வயிரத்தை உமக்கு இரவலாகக் கொடுக்கிறேன். நமக்குள்ள நிபந்தனைகளெல்லாம் எழுதிவைக்கப்படட்டும். என் காதலி உமது இழிவாம் எண்ணத்தின் பிரமாணத்தைவிட நற்குணத்தில் அதிகப்பட்டவள். இப்பந்தயத்திற்குத் துணியும்படி கேட்கிறேனும்மை. இதோ என் மோதிரம்.

ப. இப்பந்தயத்தை ஒப்புக்கொள்ளுதலே எனக்கிஷ்டமில்லை.

ஈ. ஈசன் ஆணைப்படி இது ஜெயிக்கப்பட்டதே! உமது காதலியை நான் அனுபவித்ததாக உமக்குத் தக்க அத்தாட்சி கொண்டுவராமற்போனேனாயின், என் பதினாயிரம் பொன் உம்முடையது; உம்முடைய வைரமும் உம்முடையதே. நான் திரும்புகையில், நீர் நம்பியபடி அவள் கற்பினைக்

காத்திருப்பாளாயின், உமது காதலியாகிய ரத்னமும், இந்த வயிர ரத்னமும், என் பொன்னும், உம்முடையதே ! அவளருகில் தடையின்றி போவதற்குமாத்திரம் எனக்கு உமது அனுமதி இருக்கவேண்டும்.

டா. இந்த ஏற்பாடுகளை ஆவலுடன் ஒப்புக்கொள்ளுகிறேன். நமக்குள் இவைகளெல்லாம் சந்தேகம் அற வரையப்படட்டும். இதற்குமாத்திரம் நீர் உத்திரவாத மாகவேண்டும். அவளை வென்று, அங்ஙனம் வென்றதாக நேர் வழியில் எனக்கு ரூபிப்பீராயின், நான் உம்மீது பிறகு பகை பாராட்டேன். நமது வார்த்தைக்கும் பாத்திரமானவ ளல்ல அவள் பிறகு. அவள் கற்பிற்குப் பங்கம் வராமற் காத்தனளோ, நீர் அப்படிப் பங்கம் வந்ததாக ரூபிக்காமற் போனீரோ, உமது துர் எண்ணத்தின்பொருட்டும், தூயதான அவள் கற்பினை நீர் தூஷிக்க முயன்றதின்பொருட்டும், உமது வாளால் எனக்கு உத்தரவு சொல்லவேண்டும் நீர்.

ஈ. உமது கை—இதே ஏற்பாடு—தக்க நியாய வாதிகளைக் கொண்டு இவைகளை யெல்லாம் தகுந்தபடி வரைந்துவைப்போம். பிறகு நான் உடனே சிம்ஹளம் போகிறேன். இல்லாவிடின் இந்தப் பேரம் ஆறிப்போம், பட்டினியில் அழிந்துபோம். நான் போய் என் பொன்னைக் கொண்டுவருகிறேன்; பிறகு நம திரு பந்தயங்களையும் எழுதிவைப்போம்.

பா. ஒப்புக்கொண்டேன்.

[ஈயாகாமனும், பாசதாமனும் போகிறார்கள்.]

சோ. இது நிற்கும் என்று நினைக்கிறீரா நீர் ?

ப. ஈயாகாமர் அதினின்றும் பின் வாங்கார். வாரும் அவர்களைப் பின்தொடர்வோம்.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## ஐந்தாம் காட்சி.

இடம்—சிம்ஹளம். சிம்ஹளநாதன் அரண்மனையி லோர் அறை.

அரசி, பாங்கிகள், கருணாலயன் வருகிறார்கள்.

அ. பனியானது தரையின்மீது பரவி யிருக்கும்பொழுதே அப் புஷ்பங்களைப் பறியுங்கள். புறப்படுங்கள் உடனே. நான் கூறியவை யெல்லாம் குறிப்பிட்ட கடிதம் யார் வைத்திருக் கிறது ?

பாங். நான், அம்மணி.

அ புறப்படுங்கள். [பாங்கிகளெல்லாம் போகிறார்கள். பிறகு, ஐயா வயித்தியரே, அந்த மூலிகைகளையெல்லாம் கொணர்ந்தீரா ?

க. ஆம், அரசியின் திருவுளப்படி கொண்டுவந்தேன். இதோ இருக்கின்றன அம்மணி. [ஒரு சிறு பெட்டியைக் கொடுக்கிறான்.] தங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்—தாங்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது—என் மனோ சாட்சி என்னைக் கேட்கும் படி யுந்துகிறது என்ன காரணம்பொருட்டு, நாளாவர்த் தியில் மெலிவடையச்செய்து, முடிவில் ஆவியை அழிக்க வல்ல, இந்தக் கொடும் விஷ மருந்துகளை யெல்லாம் என் னைக் கொண்டுவரும்படி கட்டளை யிட்டீர்கள் ?

அ. வயித்தியரே, நீர் இப்படிப்பட்ட கேள்வி கேட்பது, எனக்கு ஆச்சரியத்தைத் தருகிறது. நான் தங்களுடைய சிஷ்யை யாக நெடுங்காலமா யிருக்கவில்லையா? நீர் எனக்குக் கற்பிக்க வில்லையா, வாசனைத் திரவியங்களையெலாம செய்யவும்? திராவ கமிறக்குவதற்கும்? கெடாமல் காப்பதற்கும்? நமது மஹா ராஜாவே நான் செய்யும் பட்சணங்களை விரும்பி வேண்டும் படி, அத்தன்மையாக? இவ்வளவுதூரம் நடந்தபிறகு—தாம் என்னை ராக்ஷச குணமுடையவ ளெனக் கருதாவிடின்— மற்ற பரீட்சைகளிலும் எனது அறிவை விர்த்தியடையச் செய்தல் நியாய மல்லவா ? மனிதர்கள்மீ தல்ல, அவர்களைக்

கொல்வது ஒரு பொருட்டாய் மதிப்பிடப்படாத—மற்ற ஜீவன்களின்மீது பிரயோகித்து, உம்முடைய இம் மருந்து களின் சக்தியைக் கண் டறிகிறேன். அவைகளின் வேகத்திற் குத் தக்க சிகிச்சையும் செய்து பார்க்கிறேன். இதனால் அவைகளின் நானுவித குண குணங்களையும் வேகங்களையும் தேர்ந் தறிகிறேன்.

க. மஹாராணி, இந்தப் பரிசோதனையினால் உங்கள் மன தைக் கடின மாக்கிவிடுவீர்கள். அன்றியும் இவைகளின் வேகத்தைப் பார்த்தல் துன்பகரமாயும், துயரகரமாயும் இருக்கும்.

அ. சரி, அதற்காக நீர் கவலைப்படவேண்டாம்.

விசாகன் வருகிறான்.

[ஒரு புறமாக] இதோ முகஸ்துதி கூறும் கள்ளன் வருகிறான். அவன்மீது பிரயோகித்துப் பார்க்கிறேன் நான். இவன் தனது எஜமானன் பங்கிற் சார்ந்தவன். என் மகனுடைய துவேஷி. [உரத்து]—என்னடா விசாகா?—வயித்தியரே, இந்தச் சமயம் உம்முடைய வேலை முடிந்தது. உம திச்சை வழி போகலாம்.

க. [ஒரு புறமாக] எனக் கென்னவோ தங்கள்மீது சந்தேகம் தான். அம்மணி, ஆயினும் நீர் ஒரு கெடுதியும் செய்ய முடியாது.

அ. [ஒரு புறமாக விசாகனிடம்] உன்னைத்தான், ஒரு வார்த்தை.

க. [ஒரு புறமாக] இவளை நான் நம்ப லாகாது. நெடு நாள் மெலி யச்செய்து கொல்லத் தக்க, ஆச்சரியகரமான விஷங்கள் தன்னிட மிருப்பதாக எண்ணுகிறாள். இவள் குணத்தை நான் அறிவேன். இவளைப்போன்ற கடுஞ் சிந்தையுடைய வர்களிடம், அப்படிப்பட்ட கொடிய ஔஷதங்களை நம்பி கொடேன். இப்பொழுது அவளிட மிருப்பவை, கொஞ்ச நேரம் இந்திரியங்களை மழுங்கச்செய்து, மயக்க முண்டாக்

கும். ஒருவேளை, முதலில், இவைகளை நாய் பூனைகளிடம் பிரயோகித்துப் பார்ப்பாள்; அதன்பிறகு, அதற்குமேல் போவாள். சாக்காட்டைப்போல் அது எவ்வளவுதான் காட்டியபோதிலும், அதில் ஒரு கெடுதியுமில்லை; பஞ்சேந்திரியங்களையும் கொஞ்ச காலம்வரை அடக்கியபோதிலும், மூர்ச்சை தெளிந்த பிறகு, முன்னைவிட அதிக பலத்தைக் கொடுக்கும். பொய்யான அதன் வேகத்தினுல் அவள் ஏமாந்துபோவாள். அவளை இவ்வாறு ஏமாறச் செய்வதே எனக்கு யோக்கிய மாகும்.

அ. மறுபடியும் நான் உமக்குச் சொல்லி யனுப்புமளவும், வயித்தியரே, உமக்கு வேறு வேலை யில்லை.

க. அடியேன் உத்திரவு பெற்றுக்கொள்கிறேன். [போகிருன்.]

அ இன்னும் அழுதுகொண் டிருக்கிருள் என்ரு சொல்கிருய்? நாளாவர்த்தியில் இது அடங்கி, இப்பொழுது அவளைப் பிடித்திருக்கும் மடத்தனம் போய், நீ கூறுவதைக் கேட்க மாட்டாள் என்ரு எண்ணுகிருய்? உன் வேலையைப் பார். நான் உனக் கொன்று கூறுகிறேன், என் தம்பிமீது அவள் ஆசைப்படுவதாக, எப்பொழுது எனக்கு வார்த்தை கொண்டுவருகிருயோ, அந்த க்ஷணம் உனது எஜமானனிருக்கும் உன்னத ஸ்திதியை, நீயும் அடைந்தவனுவாய்; இன்னும் உயர்ந்த ஸ்திதியை—ஏனெனில் அவனுடைய ஐஸ்வரியமெல்லாம் வாயடங்கிக் கிடக்கிறது. அவனுடைய பெயரும், கடைசி இழுப்பிலிருக்கிறது. அவன் திரும்பி வரவும் முடியாது. இப்பொழுது இருக்குமிடமும் இருக்க முடியாது; ஓரிடமிருந்து அவன் மற்ருரிடம் புகுதல், ஒரு துக்கத்தை விட்டு மற்ருென்றை மேற்கொள்வதாம்; உதிக்கின்ற ஒவ்வொரு தினமும் அவனை க்ஷீணித்துக்கொண்டே வருகிறது. அவனை மற்றவர்களை அனுசரிக்க வேண்டியிருக்கும்பொழுது, அவனை அனுசரித்து நீ அடையத் தக்க பலன் என்னுளது?—அவன் தனது

அதிர்ஷ்டத்தைப் புதிதாய்த் தேடவேண்டும்.— அவனைத் தாங்க வல்ல நேசர்களு மில்லை அவனுக்கு.

[ராணி ஒரு பெட்டியைக் கீழே போடுகிறாள். விசாகன் அதை எடுக்கிறான்.]

'இன்னதென் றறியாது எடுக்கின்றா யதை நீ. ஆயினும் உன் கஷ்டத்திற்காக எடுத்துக்கொள் அதை நீ. நான் செய்த ஓர் ஔஷதம் அது. அது அரசரை ஐந்து முறை அந்தகன் கையினின்றும் தப்ப வைத்தது. இதைவிட பலத்தைத் தரத் தக்கது வே றொன்று மில்லை.—இல்லை வேண்டாம், நீயே எடுத்துக்கொள். இனிமேல் உனக்கு நான் செய்யப்போகிற பெரும் நன்மைக்கு, இது ஒரு அச்சாரமாம். அவளுடைய ஸ்திதி இப்படி யிருக்கிறதென்று உன்னுடைய எஜமானியிடம் உரைப்பாய், நீயே சொல்வதுபோல் சொல். இவ்வாறு மாறுவதில், உனக்கு என்ன நன்மை யுண்டாகுமென யோசித்துப்பார். உன்னுடைய எஜமானியின் சேவகத்தை நீ விடாமலே, என்னுடைய தம்பியாகிய புதிய எஜமானனையும் பெறுவாய்,—அவன் உன்னை நன்றாய்க் கவனிப்பான். நீ விரும்பும்படியான எப்படிப்பட்ட உன்னத பதவியையும் உனக் களிக்கும்படி மஹாராஜாவை உந்துகிறேன். நானே, உன்னை இத் தொழிலிற் கையிட்டுக்கொள்ளும்படி செய்தபடியால், உன் கஷ்டத்திற்குத் தக்கபடி பரிசளிக்கக் கடமைப்பட் டுள்ளேன்— என்னுடைய பாங்கியரைக் கூப்பிடு—நான் சொன்ன வார்த்தைகளை யோசித்துப் பார்.

[விசாகன் போகிறான்.]

மோசக்கார னாயினும் மாறாத கள்ளன்! இவனை நாம் அசைக்க முடியாது. அவனது எஜமானனுக்கு வாரீசா யிருக்கிறான்; தன் கணவனை அவள் என்றும் மறவாதபடி ஞாபகப் படுத்திக்கொண் டிருக்கிறான். நான் கொடுத்ததை அவன் புசிப்பா னாயின், அவள் பிராணநாதன் பக்கமாகப் பேசுபவர்கள் ஒருவரு மில்லாதபடி செய்துவிடும். அவளும்

அதன்பிறகு, என் வசமாய் இணங்காவிட்டால், அந்த ஔஷதத்தை ருசிபார்க்க வேண்டியதுதான்.

பாங்கிகளுடன் விசாகன் வருகிறான்.

அப்படி—நல்லது, நல்லது! நீலோத்பலங்கள், செங்கழுநீர், தும்பை—என் அறைக்குக் கொண்டுபோங்கள் இவைகளை.—விசாகா, போய் வா. நான் சொன்ன வார்த்தைகளை யோசித்துப் பார்.

[பாங்கிகளுடன் போகிறாள்.]

வி. அப்படியே செய்கிறேன்! என் எஜமானனுக்குத் துரோகியாய் முடியுமுன் என் உயிரை முடிப்பேன். அவ்வளவுதான் உங்களுக்குச் செய்ய முடியும் நான். [போகிறான்.]

காட்சி முடிகிறது.



## ஆறும் காட்சி.

இடம்—அரண்மனையில் மற்றோர் அறை.

ஹேமாங்கி வருகிறாள்.

ஹே. ஆ!—ஈன்ற தந்தை இளகா நெஞ்சுடையார், மாற்றாந்தாய் மாறுபாடுடையாள், மாறு தேசம் மனுப்பப்பட்ட மன்னனுடைய மணப் பெண்ணை விவாஹம் புரியவேண்டி நிர்ப்பந்திக்கும் மடைய னொருவன்! அந்தோ! அக் கனாவனே என் துயரத்திற் கெல்லாம் ஆதி காரணம். அடிக்கடி என்னை அவலப்படுத்துவதற்கும் காரணம்! என் னிரண்டு சகோதரர்களைப்போல், கள்ளர்களால் அபகரிக்கப்பட் டிருந்தேனாயின், எவ்வளவு சந்தோஷ முள்ளவளா யிருப்பேன்! மாட்சிமையுடன் சம்பந்தப்பட்ட விருப்பமே, அதிக துக்கமானது; சுகத்திற் கோர் அபிருசியைக் கொடுக்கும் பரிசுத்தமாம் சுயேச்சை யுடையார் எத்தனை எளியராயினும் அத்தனையையும் சிலாகிக்கத் தக்கவரே. இது யாரா யிருக்கலாம்?—ச!

விசாகனும், ஐயாகாமனும் வருகிருர்கள்.

வி. அம்மணி, இவர் மதுரை நகரத்து மாட்சிமையுடைய சீமான்; என் எஜமானனிடமிருந்து ஏதோ நிருபங்கள் கொண்டு வந்திருக்கிருர்.

ஐ. 'என்ன முகம் மாறுகிறீர், அம்மணி? கீர்த்தி பெற்ற கேசரி நாதர் சுகமா யிருக்கிருர். ராஜ குமாரியின் க்ஷேமத்தை மிகவும் விசாரிக்கச் சொன்னுர்.

[ஒரு நிருபம் கொடுக்கிருன்.]

ஹே. ஐயா, உமக்கு மிகவும் வந்தனம். உமக்கு நிரம்ப நல்வரவு கூறவேண்டும் நான்.

ஐ. [ஒரு புறமாக] அவளது வெளித் தோற்றமெல்லாம் மிகவும் மேன்மை யுடையதே! இத்தனை அருமை வாய்ந்த மனத்தையும் உடையவளாயின், இவளே கிடைக்தற்கரிய காம தேனுவாம். என்னுடைய பந்தயத்தை நான் பறி கொடுத்தவனே! தைரியமே, எனக்குத் துணை நிற்பாயாக! எதற்கு மஞ்சாமையே, என் தலை முதல் கால்வரை காத்திடும் கவசமாகுக! இல்லாவிடின் உத்தரகுமாரனைப்போல் ஓடியே நான் யுத்தம் செய்யவேண்டும், அதாவது உடனே ஓட வேண்டும்.

ஹே. [படிக்கிருள்.] "உயர் குண முடை உத்தமர்க்குள் ஒருவர் அவர்; அவரது அன்பிற்கு நான் மிகவும் கட்டுப்பட் டிருக்கிறேன். அதற்குத் தக்கபடி அவரைக் கருதல்வேண்டும், உன்னிட முள்ள நம்பிக்கையை மதிப்ப தானுல்...

கேசரிநாதன்.'

அதுவரை நான் உரத்துப் படித்தேன், மற்று முள்ளதை என்னிருதயத்தின் அந்தரங்கமே சுக முற்று சந்தோஷத்துடன் உட்கொள்ளுகிறது.—ஐயா, என் வார்த்தைகளால் உமக்கு எவ்வளவு நல் வரவு கூற முடியுமோ, அவ்வளவு கூறுகிறேன். என்னுல் என்ன செய்ய முடியுமோ, அவற்றுளெல்லாம் அதனை நீர் காண்பீர்.

ச. மிகவும் சந்தோஷம், அழகிய அரச குமாரியே. என்ன ஆச்சரியம்! மனிதர்களுக்குப் பயித்தியம் பிடித்திருக்கிறதா, என்ன? இவ் வழகிய விதானம்போன்ற ஆகாயத்தையும், வளம் நிறைந்த வையகத்தையும், சமுத்திரத்தையும், கண்டு களிக்கவும், ஆகாயத்தில் ஒளிர்கின்ற நட்சத்திரங்களுக்குள் உள்ள பேதத்தையும், ஆர்கலியின் கரையிலுள்ள ஒன்றைப்போல் இருக்கின்ற கணக்கிறந்த கூழாங்கற்களுக்கும் உள்ள பேதத்தைப் பகுத்தறியவும், ஜகதீசன் நமக்குக் கண்களைக் கொடுக்க வில்லையா? அப்படிப்பட்ட உத்தமமான இந்திரியங்களைக்கொண்டு அழகிற்கும் அவலட்சணத்திற்குமுள்ள பேதத்தைப் பிரித்தறிய முடியாதா நம்மால்?

ஹே. உமக்கு ஆச்சரியத்தைத் தருவதென்ன?

அது கண்களின் குற்றமன்று; ஏனெனில் மந்திகளும் மற்ற குரங்குகளும்கூட இப்படிப்பட்ட இரண்டு ஸ்திரீ உருவங்களைக் கண்டு, ஒன்றை வியந்து பல்லை இளித்தும், மற்றொன்றை முகம் சுளித்து நங்கு காட்டியும், அவைகளுக் குள்ள பேதத்தைக் காட்டிவிடும். ஆய்ந் தறியும் புத்தியின் தவறெனவும் கூறலாகாது; ஏனெனில் புத்தி சூன்யர்களும் இத்தகை வழிலைக் கண்டு இதே மேம்பட்டதென ஸ்திரமாய்க் கூறிவிடுவார்கள்; இச்சையின் குற்றமெனவும் எண்ணலாகாது; கேவலம் மோஹமானது, இத்தனை அருமையாம் அழகு எதிர்ப்பட்டால் அனுபவிக்க விரும்பாது, தெவிட்டியதுபோல் வெறுத்துப்போம்.

ஹே. என்ன விசேஷம், சொல்லும்.

எத்தனை அனுபவித்தும் ஆத்திரம் அடங்காத, தேக்கிட்ட இச்சையானது—குடம் நிரம்பி வழிந்தோடுவதேபோல்—உத்தம உணவைப் புசித்தும், உச்சிட்டத்தை உண்ண விரும்புகிறது.

ஹே. ஐயா, இவ்வாறு உம்மை மெய் மறக்கச் செய்வதென்ன? உடம்பு ஏதாவது அசௌக்கியமோ?

அப்படி யொன்று மில்லை, அம்மா; நான் சுகம்தான்.—ஐயா, என்னுடைய ஆளை நான் விட்டுவந்த இடத்திலேயே இருக்கும்படி சொல்லும். அவன் ஒருவாறான குண முடைய பேதை.

பி. அங்குதான் புறப்பட்டேன் ஐயா, அவனுக்கு நல்வரவு கூற. [போகிறான்.]

ஹே. என் பிராணநாதர் சவுக்கியமாகவே இருக்கிறாரா? கொஞ்சம் தயை செய்து சொல்லவேண்டும்.

சி. நன்றா யிருக்கிறார், அம்மா.

ஹே. அவர் சந்தோஷத்தின்மீது மனத்தைச் செலுத்துகிறாரா? அங்ஙனம் செய்கிறாரெனக் கோருகிறேன்.

சி. அதிகமான சந்தோஷத்தி லிருக்கிறார். அவரைப்போல் வேடிக்கை விநோதங்களுக் கிடங் கொடுக்கும் அயல் நாட்டான் ஒருவரு மில்லை அங்கு. அவருக்குப் பெயர் அங்கே சிங்களதேசத்துச் சிருங்காரலோலன் என்று.

ஹே. அவர் இங்கிருந்தபொழுது ஒருவாறு துயர் கொண் டிருந்தார், அநேக சமயங்களில், அதற்குக் காரண மறியாமலே.

சி. அவர் சஞ்சலப்படும் சமயமே நான் பார்த்த தில்லை. அவர் தோழர் ஒருவர் இருக்கிறார், சோழ தேசத்தார்; பெயர் பெற்ற ஒரு பெரிய மனிதன்; தன் தேசத்துக் காஞ்சிச் சிறுமி ஒருத்தியின்மீது அதிக காதல்கொண் டிருக்கிறார். நெருப்புத் துருத்தியினின்றும் காற் றெழுவதேபோல் எந் நேரமும் பெரு மூச்சு விட்டுக்கொண் டிருப்பார். அப்பொழுது இந்த சிருங்கார சிம்ஹளரோ—நான் சொல்வது உமது பிராணநாதரை—வயிறு குலுங்கச் சிரித்து, "ஐயா! பேதை மனிதன் இதிஹாசங்களில் கற்றதாலும், தான் கேட்டதாலும், தன் சொந்த அனுபவத்தாலும், மாதர்கள் இப்படிப் பட்டவர்கள், மன மிருந்தாலும் இல்லாவிட்டாலும் இப்படித் தா னாகவேண்டும், என அறிந்தும், அவர்கள் வலையினின்றும்

விலகி இருக்குங் காலத்தில், மறுபடியும் அவ் வலைக்குட் சிக்கவேண்டு மென்று விரும்பித் தான் வாழ்நாட்களை வருத் தத்தில் கழிப்பானு, என்று எண்ணும்பொழுது, நகைப்பி ளுல் என் வயிறு வெடியா திருப்பது என்ன ஆச்சரியம்!" என்று கூறுவார்.

ஹே. என் பிராணநாதர் அப்படிச் சொல்வாரோ?

ஈ. ஆம், அம்மணி; அச் சமயங்களில் அவர் கண்களினின்றும் சிரித்துச் சிரித்து கண்ணீர் பிரவாகமாகப் பாயும். அவர் பக்கலில் நின்று, அவர் அந்த சோழநாட்டானை ஏளனஞ் செய்வதைக் கேட்டலே ஓர் விநோத மாம். ஆனல் சுவாமிக் குத் தெரியும்—சில மனிதர்கள் அதிக தவ றிழைக்கிருர் கள்.

ஹே. என் பிராணநாதர் அங்ஙனம் செய்யாரென நம்புகிறேன்.

ஈ. அவ ரல்ல, ஆயினும் சர்வேஸ்வரன் அவருக் களித்ததை இன் னும் அதிக சந்தோஷத்துடன் அனுபவிக்கலாம்; அவர் வரையிலுமே அது அதிகம். உம்மை, அவரது உடை மையென எண்ணும்—உம்மைக் கருதுமிடத்தோ—அது மிகவும் அதிகமாம்—இதையெல்லாம் கருதுமிடத்து, நான் ஆச்சரியப்பட வேண்டியவ னுயினும், பரிதாபமும் படவேண் டும்.

ஹே. ஐயா, தாம் எதற்காகப் பரிதாபப்படுகிறீர்?

ஈ. இரண்டு பெயரைக் குறித்து, மனப் பூர்வமாய்.

ஐயா, அவர்களில் நான் ஒருத்தியோ? என்னை ஒருவாறு பார்க்கிறீர். உமது பரிதாபத்திற்கு ஆளாகும்படி என் னிடம் என்ன அவலத்தைக் காண்கிறீர்?

ஈ. என்ன துக்ககரமான விஷயம்! அந்தோ! ஒளி வீசும் ஆதித்யனுடைய காந்தியினின்றும் என்னை மறைத்துக் கொண்டு, அடர் குகையில் அவியும் விளக் கொன்றைக் கொண்டு ஆநந்தப்படுவதோ?

ஹே. ஐயா, உம்மை நான் வேண்டிக்கொள்ளுகிறேன். எனது கேள்விகளுக்கு உமது பதில்களை இன்னும் வெளிப்படையாகக் கூறும். என்மீது ஏன் பரிதாபப்படுகிறீர்?

ச. நான் சொல்லவந்ததென்னென்றால், மற்றவர்கள் அனுபவிக்கிறார்களே, உமக்கு சொந்தமானதை—ஆனால். அதற்குப் பழி வாங்கும் தொழில் பரமேஸ்வரனுடையதாம் அதைப் பற்றிப் பேசுதலும் என் தொழி லன்று.

ஹே. என்னைப்பற்றி, அல்லது என்னைச் சார்ந்த விஷயத்தைப்பற்றி, தாம் ஏதோ தெரிந்தவராய்த் தோற்றுகிறீர். சில விஷயங்களில் தவறாய் நடப்பதாக சந்தேகங் கொள்வது, அங்ஙனம நடப்பதாக உறுதியாய் நாபுவதைவிட, அதிக கெடுதியை விளைப்பதாகும்; ஏனெனில் நிச்சயிக்கப்பட்ட விஷயங்கள், பரிஹாரங்களைக் கடந்தவைகளாகும்; அல்லது காலத்தில் அறிந்தால், அதன் சிகிச்சையும அதனுடன் பிறக்கும். நீர் தூண்டிவிட்டும் தடைபடச் செய்கிற அவ் விஷயத்தை, எனக் கறிவிக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.

ச. எனது அதரத்தைக் குளித்திட இக் கன்னமும், ஒவ்வொரு ஸ்பரிசமும், பட்டமாததிரத்தில் ஆசை மாறா ஆணையினை எனது ஆன்மாவுக்குப் புகட்டக் கூடிய, இக் கரமும், பல திக்குகளிலும் செல்லும் என் கண்ணின் பார்வையைச் சிறைப்படுத்தி இவ்விடத்திலேயே பந்தப்படுத்தும், இவ்வுருவமும், எனக்குச் சொந்தமா யிருக்கு மாயின், பரங்குன்றத்தின் படித் துறைபோல் பலருக்கும் சாதாரணமான பாவையரின் அதரத்தைப் பருகுவனோ? கடிகைதோறும் கபட சத்தியத்தாலும் கடுந் தொழிலாலும் கற டேறிய கைகளைக் கட்டிப் பிடிப்பேனோ? நாற்ற முடைய மெழுகினால் ஏற்றிய தீபம் கறுத்துக் காட்டுவதுபோல், காந்தி மழுங்கிய களங்க முடைய கண்களை நான் கபடத்தனமாய்ப் பார்ப்பனோ? அங்ஙனம் செய்வேனாயின், அடியுடன் அழிக்கப்பட்டு, ஆழ் நரகி லுள்ள அத்தனைக் கொடுமைகளும் ஏக காலத்தில் என்னைப் பிடிக்கத் தக்கவோர் ஆளாவேன்.

ஹே. எனது பிராணநாதர், சிம்ஹளத்தை மறந்தாரென அஞ்சினேன்.

ஈ. தன்னையும் மறந்திருக்கிறார். இவ்வாறு அவரது இழிந்த ஸ்திதியைச் சொல்ல இசைந்து சொன்னவனன்று நான். உமது சௌந்தர்யங்களே, மௌனம் சாதிக்கும் என் மனதை சாட்சியினின்றும் வாய்விட்டு வெளி வரும்படி வலிக்கின்றன.

ஹே. இன்னும் கேட்க எனக்கிஷ்ட மில்லை.

— ஐயோ! என் னருயிரே! உமது கதியானது பரிதாபத்தினால் என்னிருதயத்தைப் பிளந்து, என்னைத் துயருறச்செய்கிறது. அழகில் நிகரற்ற அணங்கு—உலகில் ஒப்புயர்வற்ற அரசனைச் சார்ந்தபோதிலும் அவனது உன்னத ஸ்திதியை இருமடங் காக்க வல்ல உத்தமி—உம்மைவிட்டு, உமது பணத்திற்குத் தக்கபடி, தமது உருவத்தைக் காட்டும், நாணயமில்லாத நடன மாதர்களுடன் கூடுவதா? நீர் பழி வாங்கவேண்டும். இல்லாவிடின் உம்மைப் பெற்றவள் ராணியன்று; உமது உயர்ந்த குடிப் பிறப்பினின்றும் குன்றுகிறீர் நீர்!

ஹே. பழிவாங்குவதா! நான் எப்படிப் பழிவாங்குவது? இது உண்மையாயிருக்குமாயின்—என் னிதயமே என் செவிகள் கேள்வியுற்றதை அத்தனை விரைவில் நம்பி மோசம் போகலாகாதெனக் கூறுகிறது.—ஆயினும் இது உண்மையாயிருக்குமாயின், நான் எவ்விதம் பழி வாங்குவது?

ஈ. நீர் இல்லாக் காலத்து, உமது திரவியத்தைக்கொண்டு, எல்லாவித லீலைகளையும் தான் ஆடி வரும்பொழுது, உம்மைமாத்திரம் கன்னியாகுமரி மடத்துக் கன்னிகையரைப்போல் கற்பினைக் கடுங் காவலில் விட்டுக் காத்துவரச் செய்வதோ? பழி வாங்கு மிதை. என்னை உமக்குரிய இனிய சுகத்தின் பொருட்டு ஒப்பிவைத்தேன். உமது படுக்கையினின்றும் பறந்தோடின அப் பாமரனினும் நான் உயர்ந்தவனே. உம்மை

துள்ள ஆசை அணுவளவும் குறையாது வாழ்வேன், எப்பொழுதும் அருகில், திண்ணமாய்.

ஹே. ஆ! ஐயோ! விசாகா!

ஸ. உமது ஆதாரத்திற்கு என் பிரார்த்தனையைச் செலுத்துகிறேன்.

ஹே. போ தூர! இதுவரையில் உன் வார்த்தைகளைக் கேட்ட என் செவிகளை நான் தூறவேண்டும். நீ நற்குணமுடையவனாயின், நலத்தின்பொருட்டு இக்கதையை என்னிடம் கூறியிருப்பாய்; நீ விரும்பும், வெறுக்கத் தக்க இவ்விழிவாம் முடிவின்பொருட்டன்று. உனக்கும் நற்குணத்திற்கும் எவ்வளவு தூரமோ, அவ்வளவு தூரம் இருக்கிறது அவருக்கும் நீ கூறும் கதைக்கும்; அப்படிப்பட்ட உத்தமனை நீ தூஷிக்கிறாய் பேதையாம் உன்னையும் பிசாசையும் ஒன்றாய் வெறுக்கும் பெண் மணியை வேண்டி விரும்புகிறாய் நீ!—என்ன, ஐயோ! விசாகா!—அரசராகிய என் தந்தையிடம் நீ கொண்ட துர் எண்ணத்தை அறிவிக்கிறேன். படுகாளியான பாதகனொருவன், பாண்டிய நாட்டுப் பரத்தையர் வீதியில் வியாபாரம் செய்வதுபோல், தன தரண்மனையிலும் வியாபாரம் செய்து, அவனது துர் எண்ணங்களையெல்லாம் இங்கு அனைவருக்கும் வெளிப்படுத்துப்படி விடுதல், சரியென நினைக்கிறாரோ பார்ப்போம்.—ஆயினும், அந்தோ!—தன தரண்மனையை அவர் கவனிப்பதே யில்லை, தனது பெண்ணையும் மதிப்ப தில்லை.—என்ன, ஐயோ! விசாகா!

ஸ. ஹா! கேசரிநாதரே! நீரே சுகபுருஷன் என்று நான் சொல்லவேண்டும். உமது காதலி உம்மீது வைத்த கௌரவத்திற்கு, நீர் அவளிடம் வைத்த நம்பிக்கை பொருந்தியதே. உமது சிறந்த உத்தமமான நற்குணம், அவளது உண்மையாம் கௌரவத்திற் கேற்றதே! ஈசன் அருளால் இருவரும் நீடூழி காலம் வாழ்வீராக!—எத் தேசமும் தன்னுடையான் எனக் கோர விரும்பும், தண்ணளியானுக்குத் தக்க தாரம்!

அவரது காதலியாகிய நீரே உலகில் ஒப்புயர்வற்ற உத்தமனுக் கேற்ற பத்னி! என்னை மன்னிக்கும்படி வேண்டுகிறேன் உம்மை. உமது காதலானது கலக்கப்படாதபடியே நூன்றியதா எனக் கண் டறியும்பொருட்டே, நான் இதை யெல்லாம் பேசியது. உமது பிராணநாதன் இப்பொழுது இருப்பதுபோல் மறுபடியும் புதிதாய் ஆகச் செய்ய வல்லேன். உண்மையான நடவடிக்கைகள் அந்த உத்தமனிடமே குடிகொண் டிருக்கின்றன. சங்கங்களை யெல்லாம் தன் சார்பாகச் செய்ய வல்ல அத்தனைப் பரிசுத்தமாம் மாயாவி! உலகி லுள்ள உத்தமர்களின் மனத்தையெல்லாம் கவர்கிறார்—

ஹே. செய்த பிழைக்குப் பிரதி செய்கிறீர்.

ச. மாந்தர்களுக்குள் விண்ணினின் றிழிந்த வேந்தனைப்போல் உட்காருகிறார். அவரிடத் துள்ள ஓர் வகை உத்தம குணமானது, அவரை எடுத்துக் காட்டி, சாதாரண மனிதரைவிட மேலானவராகப் பாவிக்கச்செய்கிறது. மங்கையர்க் கரசியே! கட்டுக் கதையை நீர் எவ்வாறு கவனிக்கிறீரோ என்று பார்க்க முயன்றதற்காக, என்னை மன்னிக்க வேண்டும். அங்ஙனம் செய்தது, அத்தனை அருமையாம் புருஷனை உமது நாதனாகக் கோரிய உமது கூர்மையாம் அறிவை, பெருமையுடன் ஊர்ஜிதப்படுத்தியதேயொழிய, வேறன்று; உமது ஒள்ளிய அறிவு ஒருகாலும் தவறாது. அவர் மீது நான் வைத்த அன்பானது, உம்மை இவ்வாறு தூண்டிப் பார்க்கச் செய்தது. ஆயினும் ஜகதீசன் உம்மை மற்றவர்களைப்போல் அன்றி, மாறுபாட்டிற் கிடங் கொடா திருக்கச் செய்தார். உம்மை வேண்டிக் கொள்ளுகிறேன், என்னை மன்னிக்கவேண்டும்.

ஹே. ஐயா, எல்லாம் சரி யாய்விட்டது. அரண்மனையில் எனக்குள்ள அதிகாரம் உமதாகக் கொள்ளும்.

ச. அதற்கு அடியேனுடைய வந்தனம். உம்மைக் கேட்கவேண்டிய சிறு விண்ணப்ப மொன்றை ஏறக் குறைய முற்றிலு மறந்தேன். அது சிறிய தாயினும், உமது பிராணநாதரை பற்றிய தாகையால், முக்கிய மானதே. நானும், இன்னு சில சீமான்களாகிய அவரது சினேகர்களும், இவ்விஷயத்தி பவ்யப்பட்டவர்கள்.

ஹே. சொல்லும், என்ன அது?

ச. மதுரைவாசிகளாகிய எங்களில் பத்துப் பன்னிரண்டு பெ ரும், எங்கள் தலைவராகக் கொள்ளத் தக்க உமது நாத மாகச் சில தொகைகளைச் சேர்த்தோம், மஹாராஜாவு கோர் காணிக்கை வாங்கும்பொருட்டு. மற்றவர்களு கெல்லாம் நான் முதலாளியா யிருந்து, சோழ நாட்டி அதை வாங்கினேன். அவை அருமையாம் வேலை செய் பாத்திரங்கள், நாணயமும் வேலைப்பாடு முள்ள நகைகள் அவைகள் மிகவும் விலை யுயர்ந்தன. பட்டணத்திற்குப் பு தானதுபற்றி அவைகளைப் பத்திரமாய் வைக்குமிடம் அ யாது தியங்குகிறேன். அவைகளை உமது காப்பில்வைக்க கடாட்சித் தருள்வீரா?

ஹே. சந்தோஷமாய்; அவைகளைப் பாதுகாப்பதாக என் கௌ வத்தை ஈடுகொடுப்பேன். என் பிராணநாதர் அதில் பவ்ய பட் டிருப்பதால், என் படுக்கை யறையில் வைத்திருப்பே

ச. அவைகள் எல்லாம் ஒரு பெட்டியில் வைக்கப்பட்டிரு கின்றன. எனது ஆட்கள் அதைக் காத்திருக்கின்றனர்; இ ரிரவுமாத்திரம் உங்களிடம் இருக்க அதைத் துணிந் தனு புகிறேன். நாளை நான் ஊருக்குப் போகவேண்டும்.

ஹே. ஆ! கூடாது, கூடாது.

ச. இல்லை, நான் கேட்டுக்கொள்ளுகிறேன். நீடித்து நான் கிருப்பே னுயின் நா னளித்த வாக்கினின்றும் தவறின

றுவேன். பாம்பனிலிருந்து படகேறிவந்தேன், உம்மைப் பார்ப்பதாகச் செய்த கட்டுறுதியின் காரணம்பற்றி.

ஹே. நீர் கொண்ட கஷ்டத்திற்கு நான் வந்தனம் செய்கிறேன்; ஆயினும் நீர் நாளை போக லாகாது.

ஈ. இல்லை, அம்மணி; நான் போகவேண்டும். ஆகவே, உமது பிராணநாதருக்கு ஏதாவது எழுதவேண்டி விரும்பின், இன்றிரவே அதைச் செய்யும்படி வேண்டிக்கொள்ளுகிறேன். நான் ஏற்படுத்திய காலத்தைவிட அதிகமாய் இருந்துவிட்டேன். நாங்கள் மஹாராஜாவுக்குக் காணிக்கை செலுத்த வேண்டிய காலம் கடக்கற்பாலதன்று.

ஹே. நான் எழுதுகிறேன். உமது பெட்டியை என்னிடம் அனுப்பும். அதைப் பத்திரமாய் வைத்திருந்து உம்மிடம் ஒப்புவிக்கிறேன் சரியாக. நீர் வந்தது மிகவும் சந்தோஷம்.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



# இரண்டாம் அங்கம்.



## முதல் காட்சி.

இடம்—சிம்ஹளம். சிம்ஹளநாதன் அரண்மனையில் முற்றம்.

கனகபாரனும், இரண்டு கனவான்களும் வருகிறார்கள்.

க. இப்படிப்பட்ட துரதிர்ஷ்டம் யாருக்காவது நேரிட் டிரு கிறதா? நானு பழமுர் பழுத்து வரும்பொழுது, ஒரு ப டையிலே ஆட்டம் தோற்றுப்போகிற தென்றால்! நூ பொன் பந்தயம் கட்டியிருந்தேன் அந்த ஆட்டத்தி பேரில்! அதன்மேல், தேவடியாள்மகன் ஒருவன், நா கெட்ட வார்த்தைகள் மொழிந்தேனென்று என்னோடு ச டை போடவேண்டுமா? என் இஷ்டப்படி என் வார்த்தை களை நான் உபயோகிக்க லாகாதா? இவனிடமிருந்து நா ஏதாவது அவைகளை இரவல் வாங்கினேனா?

மு. க. அதனால் அவன் அடைந்த பலன் என்ன, உமது பாய்ச் கையினால் அவன் மண்டையில் குத்துண்டது தவிர?

இ. க. [ஒரு புறமாக] குத்தினவன் மண்டையைப்போல் குத்துண் வன் மண்டையும் உள்ளே ஒன்று மில்லாததா யிருந்தா சுக்கல் சுக்கலாய் உடைந்துபோ யிருக்கும்.

க. உத்தம குலத்தி லுதித்த ஒருவன் ஏதோ வார்த்தையா னால், பக்கத்தி லிருப்பவர்கள் அதைத் தடுத்துப் பேசுவத வது? ஏ!

இ. க. கூடாது ஐயா; [ஒரு புறமாக] நாய் குரைத்தால் அதற் எதிராகக் குரைப்பார்களா யாராவது?

க. தேவடியாள் நாய்! அவனுக்கா நான் பதில் சொல்வது என்னுடைய அந்தஸ்திற்குமாத்திரம் சரியானவனா யிரு தால்!

இ. க. [ஒருபுறமாக] உன்னைப்போல் முழு முண்டமா யிருந்திருப்பான்.

க. உலகத்தில் இதைப்போல் வேறெதுவும் எனக்கு அத்தனைக் கோபம் உண்டுபண்ணவில்லை. பாழாய்ப் போக! நான் இத்தனை உத்தம குலத்தில் உதிக்காம லிருந்திருக்கலாகாதா? நான் மஹாராணியின் தம்பி என்று என்னுடன் சண்டை போடமாட்டேன் என்கிறார்கள். ஒவ்வொரு பண்ணைக்காரனும், தான் வேண்டியமட்டும் சண்டைபோடலாம்; நான் மாத்திரம், எதிர்ப்பவன் ஒருவனு மின்றி, வான்கோழியைப் போல், வாயிலில் கீழும் மேலுமாய், உலாவிக்கொண் டிருக்க வேண்டும்.

இ. க. [ஒருபுறமாக] வீரம், அழகு, புத்தி, எல்லாம் உனக்கும் வான்கோழிக் கிருப்பதுபோல்தான் இருக்கிறது.

க. என்ன சொல்லுகிறாய் நீ?

மு. க. தாங்கள் வெறுக்கும் ஒவ்வொரு ஆசாமியுடனும், தாங்கள் சண்டைபோடுவது, தங்களுடைய அந்தஸ்திற்கு ஏற்றது அன்று.

க. ஆம், அதை அறிவேன் நான். ஆயினும் எனக்குத் தாழ்ந்த ஸ்திதியி லிருப்பவர்களை நான் தண்டிப்பது தகுதியன்றோ?

இ. க. ஆம், அது பிரபுவாகிய தங்களுக்கே தகும்.

க. ஏன், அப்படித்தான் நான் சொல்கிறேன்.

மு. க. இன்றிரவு அரண்மனைக்கு ஒரு அயல் நாட்டார் வந்திருப்பதைப்பற்றி கேள்விப்பட்டீரோ?

க. அயல் நாட்டானா? எனக்குத் தெரியாமலா?

இ. க. [ஒருபுறமாக] அந்த அசல் நாட்டானுக்கு, இந்த அசல் மட்டிக்குத் தெரியாமல் வரக்கூடாதென்பது தெரியாது.

மு. க. பாண்டிய நாட்டார் ஒருவர் வந்திருக்கிறார்; அவர் கேசரி நாதருடைய சினேகிதர்களில் ஒருவர் என்று எண்ணப்படு

க. கேசரிநாதன்! நாட்டைவிட்டுத் துரத்தப்பட்ட கழுதை! அவன் யாரா யிருந்தபோதிலும், அவன் சிநேகிதனும் அவனைப்போன்ற மற்றொரு கழுதையா யிருக்கவேண்டும். இந்த அயல் நாட்டானைப்பற்றி உனக்கு யார் சொன்னது?

மு. க. பிரபுவின் வேலை யாட்களுள் ஒருவன்.

க. அவனை நான் பார்த்தல் சரியா? அதில் ஒன்றும் என் அந்தஸ்திற்குக் குறை யில்லையே?

மு. க. மஹாப் பிரபு! தங்களுடைய அந்தஸ்து எப்படி குறையும்?

க. ஆம், எளிதில் குறையாதென்றே நினைக்கிறேன்.

இ. க. [ஒரு புறமாக] மடையனுக்கு அந்தஸ்து ஒன்று! ஆயினும் இந்த மட அந்தஸ்து, எப்படியும் குறையாது, அது என்னவோ வாஸ்தவம்தான்.

க. வாருங்கள், நான் போய் இந்தப் பாண்டிய நாட்டானைப் பார்க்கிறேன். இன்று நான் சொக்கட்டானில் தோற்ற பணத்தை அவனிடமிருந்து ஜெயிக்கிறேன். வாருங்கள் போவோம்

இ. க. பிரபுவின் பின்னால் வருகிறேன்.

[களேபரனும், முதல் கனவானு போகிறார்கள்.]

ராணியாகிய அந்தக் கபட முடைய மகளைப் பெற்ற தாய் இந்தக் கழுதையையும் பெற்றாளே இவ் வுலகில்! அவளே தன் புத்தியைக் கொண்டு எல்லாவற்றையும் அடக்கி ஆ கிறாள், அவள் தம்பியாகிய இவனோ, தன் உயிர் போவத னாலும், இருபதில் இரண்டெடுத்துவிட்டால், பதினெட் மிகுதி, என்று சொல்லத் தெரியான்.—அந்தோ! பேஸ அரச குமரியே! அணங்கே, ஹேமாங்கி! நீ என்ன கஷ்ட அனுபவிக்கிறாய்! ஒரு புறம் உன் மாற்றாந் தாயால் ஆட்ட பட்ட தந்தை; மற்றொரு புறம் உன்னைக் கெடுக்கவேண் மணிக்கு மணி சூழ்ச்சி செய்யும் மாற்றாந் தாய்; இ னொருபுறம், உனது பிரியமான கணவன் இந் நாட்டை வ

டுத் துரத்தப்பட்டதைப் பார்க்கிலும் உனக்கு அதிக வெறுப்பைத் தரும்படியான, உன்மீது மோஹம் கொண்ட இப் பாதகன். உன்னைப் பலவந்தப்படுத்தி, உன் கணவனிடமிருந்து உன்னைப் பிரிக்கக் கருதும், இக் காதகன் கையினிற் சிக்காதபடி, ஜகதீசன் உன் கற்பினைக் காத்து ரட்சிப்பாராக! உனது களங்கமற்ற மனதெனும் கோயிலைச் சலனத்துக்குள்ளாகாதபடி, காப்பாற்றுவாயாக! அங்ஙன மிருப்பாயாயின், எப்படியும், நீ நிலைபெற்று, துரத்தப்பட்ட உன் நாதனையும் பெற்று, முடிவில் இந் நாநிலத்தையும் பெறுவாய்!

[போகிறான்.]

காட்சி முடிகிறது.

---

## இரண்டாம் காட்சி.

இடம்—ஹேமாங்கி படுக்கை அறை; அதன் ஒரு புறம் ஒரு பெட்டி.

ஹேமாங்கி படுத்துக்கொண்டிருக்கிறாள். ஒரு பாங்கி நிற்கிறாள்.

**ஹே.** யார் இருக்கிறது அங்கே? என் பாங்கி, நீலாவா?

**பாங்.** ஆம், அம்மணி.

**ஹே.** இப்பொழுது என்ன மணி?

**பாங்.** ஏறக் குறைய பாதி இராத்திரி யிருக்கும், அம்மா.

**ஹே.** ஆனால் நான் மூன்று மணி நேரம் படித்திருக்கவேண்டும். என் கண்கள் நோ வெடுக்கின்றன. நான் விட்ட இடத்தின் பக்கத்தை மடித்து வை. நீ படுக்கப் போ; தீபத்தை எடுத்துக்கொண்டு போகாதே; எரிந்துகொண் டிருக்கும்படி வைத்துப் போ. நான்கு மணிக்கு நீ விழிப்பதானால், என்னை வந்து கூப்பிடும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். எனக்குத் தூக்கம் நன்றாய் வந்துவிட்டது.

[பாங்கி போகிறாள்.]

ஜகதீசனே! என்னைக் காத்துரட்சிப்பீராக! பேய்களிடமிருந்தும், இராக் காலத்துப் பிசாசங்களிடமிருந்தும் என்னைக் காக்கும்படி உம்மைப் பிரார்த்திக்கிறேன். [உறங்குகிருள்.]

பெட்டியிலிருந்து சயாகாமன் வெளி வருகிருன்.

ச. சுவற்றுக் கோழி கூவுகிறது! மனிதர்களுடைய கஷ்டப் படுத்தப்பட்ட இந்திரியங்களெல்லாம், களைத் துறங்கி, மறுபடியும் பலத்தைப் பெறுகின்றன. அஹல்யையின் கற்பினை அழிக்கக் கோரியபொழுது, இந்திரன் இவ்வாறுதான் அடிமேல் அடி வைத்துச் சென்றுன். அழகிய ரதியே! என்ன அழகாய் அப்படுக்கையில் பயமின்றிப் படுத்திருக்கிருய்! புதிதாய் மலர்ந்த பொற் கமலமே! தந்தத்திலும் வெண்ணிற முடைத்து உன் தங்க மேனி. உன்னை நான் ஒரு முறை ஸ்பர்சிக்கக் கூடுமாயின்! முத்தமிடக் கூடுமாயின்! ஒரே முத்தம்! கிடைத்தற்கரிய செம்புக் கற்கள் ஒன்றை யொன்று என்ன அன்போடு முத்தமிட்டுக்கொண்டிருக்கின்றன! அவளது சுவாசமே, இவ்வாறு இவ் வறைக்கு அகில் மண மூட்டுகிறது. விண்ணின் நிறம்போல் நீலமும் வெண்மையும் கலந்த, இரப்பைகளெனும் பலகணிகளால் மூடப்பட்டிருக்கும், கண் மணிகளாம் விளக்குகளைக் காணுதற் பொருட்டு, வணங்கிப் பார்ப்பதேபோல், இவ் விளக்கின் சுடரானது, அவள் சார்பில் சாய்ந் தெரிகிறது. ஆயினும் என் வேலையைப் பார்க்கவேண்டும். அறையினைக் குறிப்பிடும்பொருட்டு, எல்லாவற்றையும் எழுதிக்கொள்ளுகிறேன். இன்ன இன்ன படங்கள், அங்கே பலகணி, படுக்கையின் சித்திரங்கள் இப்படிப்பட்டன; திரைகள், பதுமைகள், இப்படி இப்படிப்பட்டன, இங்கு வர்ணித்திருக்கும் கதையின் கருக்கள்.—ஆ! பதினுயிரம் அற்ப சாமான்களைவிட பாவையின் உடலிலுள்ள சில அடையாளங்கள் எனது வார்த்தையை ஊர்ஜிதப்படுத்தும் அத்தாட்சியாம்; அவைகளையும் என் கணக்கில் ஏற்றவேண்

டும். ஆ! மரணம்போல் மேலுக்குக் காட்டும் நித்திரை யே! மாதின் மனத்தை நன்றாய் மழுங்கச் செய்வா யாக! கோயில்களி லிருக்கும் கல்லில் அமைக்கப்பட்ட விக்கிரஹங்களைப்போல் உணர்ச்சி யற்று இவள் உறங்கு வாளாக!—வளையே! வந்துவிடு! [அவள் கை வளையைக் கழற்றி] பிரம்மனது முடி எவ்வளவு கழற்றுவதற்குக் கடினமோ, அவ் வளவு சுலபமா யிருக்கிறது இது. இது என்னுடைமை. உள் ளுக்கு மனோ சாட்சி எங்ஙனம் செய்யுமோ, அங்ஙனமே வெளிக்கு, இவள் பிராணநாதனைப் பித்தம் பிடிக்கச் செய் யச் சாட்சியாகும் இது.—இவளது இடது ஸ்தனத்தி லிருக் கின்றது ஓர் ஐந்து புள்ளிகளுடைய மச்சம். இந்த அத் தாட்சி நியாயஸ்தலத்து அத்தாட்சியைப்பார்க்கிலும் நிச் சய மான்று. இந்த ரகசியமானது, நான் பூட்டைத் திறந்து அவளது கற்பெனும் பெரும் புதையலைத் திருடியதாக அவனை நம்பும்படி பலவந்திக்கும். இனி ஒன்றும் வேண் டாம்— என்ன காரணத்தின்பொருட்டு? இதை எழுதுவா னேன்? ஆணி அறைந்தாற்போல் அவ்வளவும் என் மனத் தில் முடிக்கப்பட் டிருக்கிறதே! இரவில் நெடு நேரம் எழில் நளன்றன் கதையைப் படித்திருக்கிறாள். தமயந் தியை உறக்கத்தில் விட்டுப் பிரிந்த இடத்தில் பக்கத்தை மடித்திருக்கிறது. எனக்குக் கிடைத்தது போதும். பெட் டிக்குள் புகுந்து விசையை மூடிக்கொள்ளவேண்டும். சீக் கிரம்! சீக்கிரம்! பொழுது விடியு மாயின், நள் ளிருளைப் பறந்தடித்து, பாவையின் கண்களைத் திறக்கச்செய்யும். நான் பயத்துடன் பதுங்கி யிருக்கிறேன். அருகி லிருப்பது அமர ருலகத்து அணங் காயினும், நா னிருப்பது நரகமே!

[கடியாரம் அடிக்கிறது.]

ஒன்று, இரண்டு, மூன்று! மணியாய்விட்டது! மணியாய் விட்டது! [பெட்டிக்குள் போகிறான்.]

காட்சி முடிகிறது.



## மூன்றாம் காட்சி.

இடம்—ஹேமாங்கியின் அறைக்கு வெளியி லுள்ள அரண்மனையின் ஓர் பாகம்.

கபேபரனும், இரண்டு பிரபுக்களும் வருகிறார்கள்.

மு. பி. பந்தயம் தோற்ற பொழுதும், பொறுமையோ டிருப்பவர் உம்மைப் போன்றவர் இப் பூவுலகி லில்லை. மூணத்தொன்று விழுந்த போதிலும் முகத்தைச் சுளிப்ப தில்லையே!

க. ஆட்டம் தோற்றால் எவனுக்கும் அடங்கிப்போம்.

மு. பி. ஆயினும் தங்களைப்போல் பொறுமையுட னிருக்கும் பெருமையாம் குணம் அரிது. நீர் ஜெயிக்கும் பொழுதோ, கோலமும் குதூகுலமுமா யிருக்கிறீர்!

க. ஜெயமானது எவனுக்கும் தைரியத்தை யுண்டுபண்ணுகிறது. இந்த முட்டாள் பெண் ஹேமாங்கியை அடைவே னாயின் எனக்குப் போதுமான பொன் கிடைக்கும். பொழுது விடிந்துவிட்டது ஏறக் குறைய, அல்லவா?

மு. பி. காலை யாய்விட்டது, பிரபு.

க. ஏன் இந்தச் சங்கீதக்காரர்கள் இன்னும் வர வில்லை? காலையில் அவளைச் சங்கீதத்தினால் சந்தோஷப்படுத்தும்படி எனக்குச் சொல்லி யிருக்கிறார்கள். அதுதான் அவள் மனத்தை ஊடுருவி மயக்கும் என்கிறார்கள்.

சங்கீதக்காரர்கள் வருகிறார்கள்.

வாருங்கள். சுருதி செய்து கொள்ளுங்கள். உமது விரல்களால் அவளை எழுப்புவீ ராயின், நாம் நமது நாவினாலுங் கொஞ்சம் பார்ப்போம். ஏதனாலும் முடியாவிட்டால், அவள் அப்படியே யிருக்கட்டும். எப்படி யாயினும், நான் என்னவோ விடப்போகிற தில்லை. முதலில், மிகுந்த மேன்மையான சுவாரஸ்ய மடங்கிய ஒரு பாட்டு. பிறகு, நல்ல அழ

கான ஒரு பல்லவி, சாஹித்தியம் ஆச்சரியகரமான அழகிய பதங்கள் அடங்கி யிருக்கவேண்டும்—அதற்கு அப்புறம்—அவள் யோசிக்கட்டும். [பாடுகிறார்கள்.]

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின, இயம்பின சங்கம்
ஓவின தாரைகள் ஒளியொளி யுதயத்
தொருப்படுகின்றது விருப்பொடு நமக்கு
தேவிநற் செறிகழல் தாளிணை காட்டாய்
திருப்பெருந்தேவியே, தேவர்தொழு மாதே
யாவருமறிவரி யா யெமக் கெளியாய்
யெம்பெருமாட்டியே எழுந்தருளாயே.

சரி! நீங்கள் போங்கள். இது அவளை எழுப்பினால், உங்களுடைய சங்கீதத்தை சரியென மதிப்பேன். அங்ஙனம் செய்யாவிடின், அதை, குதிரை மயிர்களும், கன்றுகளின் நரம்புகளும், அல்லது ஆணங்கியின் குரலும், ஒன்றும் சரிப்படுத்த முடியாத, அவள் காதில் விழும் வெறும் சப்தமென மதிப்பேன்.

[சங்கீதக்காரர்கள் போகிறார்கள்.]

சிம்ஹளநாதனும். அரசியும் வருகிறார்கள்.

இ. பி. இதோ மஹாராஜா வருகிறார்.

ச. நான் வெகு நேரம் விழித்திருந்தது சந்தோஷமாச்சுது. அது காரணம்பற்றியே நான் அதி காலையில் எழுந்தேன். நான் செய்த இப் பணிவிடையைத் தகப்பனருக் குரிய வாஞ்சையோடு பார்ப்பார் என்பதற்குத் தடையில்லை.—மஹாராஜா அவர்களுக்குக் காலை வந்தனம். தயையுடை என் தமக்கைக்கும் அவ்வாறே.

சி. கடின சித்தமுடைய என் பெண்ணின் கவாடத் தருகிலா காத்திருக்கிறாய்? அவள் வெளியில் வரமாட்டாளா?

க. நான் சங்கீதத்தால் அவளை எழுப்பிப்பார்த்தேன், அவள் அதைக் கவனிப்பதாக் காணோம்.

சி. அவளது ஆசாமி ஊரை விட்டுப்போய் கொஞ்ச காலம்தான் ஆயது. இதற்குள் அவனை மறந்திலள். அவள் மனத்தினின்றும் அவனது உருவம் மறைவதற்கு இன்னும் கொஞ்ச காலம் கழிய வேண்டும், பிறகு அவள் உன்னுடையவளே.

அ. அப்பா, எந்தெந்த விதங்களில் தன் பெண்ணை நீ பெற முடியுமோ, அவைகளில் ஒன்றையேனும் விடாது முயல்கிறார் மஹாராஜா. ஆகவே நீ அவருக்கு மிகவும் நன்றியுள்ளவனா யிருக்கவேண்டும். ஒழுக்கத்துடன் அவளது உத்தரவைப் பெறும் வழியில் உன்னை நிறுத்தல் வேண்டும். தகுந்த சமயத்தின் உதவியினைக்கொண்டு, அவள் தடுப்பதே உனது தாளாண்மையை விர்த்தி செய்யவேண்டும். அவளுக்குச் செய்யும் பணிவிடைகளெல்லாம், ஏதோ திடீரென்று உன் புத்திக்குப் பட்டதுபோல் தோற்ற, நீ மேலுக்குக் காட்ட வேண்டும். எல்லா விஷயங்களிலும் அவளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதுபோ லிருக்கவேண்டும், அவள் உத்திரவு உன்னை அவள் எதிரில் நின்றும் அனுப்பிவிடுகிற விஷயத்தில் தவிர—அது விஷயத்தில்மாத்திரம் நீ அறியாதவனாக வேண்டும்.

க. அறி வில்லாதவனா? அப்படி முடியாது.

ஒரு தூதன் வருகிறான்.

தூ. மஹாராஜா அவர்கள் சந்நிதானத்திற்கு, பாண்டிய நாட்டு ராயபாரிகள் வந்திருக்கிறார்கள். அவர்களுள் ஒருவராய் காயார் லோகசேனர் வந்திருக்கிறார்.

சி. இப்பொழுது நமக்கு விரோதமான விஷயத்தின்பொருட்டு வந்தபோதிலும், அவன் யோக்கியமான மனிதன். இது அவன் குற்றமன்று. அவனை அனுப்பிய எஜமானனுக்குரிய மரியாதையின்படி, நாம் அவனுக்கு நல்வரவு கூற வேண்டும். அவனைக் கருதுமிடத்தும், அவன் முன்பு நமக்கு நல மிழைத்திருப்பதால், நாமும் தக்கபடி மரியாதை

செய்யவேண்டும். அப்பா, உன் காதலியைக் காலையில் கண்டு வார்த்தையாடியவுடன், என்னையும் மஹாராணியையும் வந்து பார்ப்பாயாக. இப் பாண்டியன் விஷயமாக உன்னை நாங்கள் கொஞ்சம் உபயோகிக்கவேண்டிவரும்.—வாராய் நமது அரசியே, போவோம்.

[இருவரும் போகின்றனர்.]

க. அவள் எழுந்திருந்தால் அவளுடன் பேசுவேன். இல்லாவிட்டால், அப்படியே அசையாது படுத்துக்கொண்டு கனவு காணட்டும் அவள்.— உனது உத்திரவின்மீது—[கதவைத் தட்டுகிறான்.] அவளது பாங்கிகள் அவ ளருகிலிருக்கின்றனர், தெரியு மெனக்கு. அவர்களில் ஒருத்தி கையை நான் கொஞ்சம் பொன்னால் பூசினால் என்ன ? பொன்தான் புகுமிடத்தை விலைக்கு வாங்கும்; அநேக முறை அங்ஙனம் செய்கிறது. பொருளைக் காக்கவேண்டியவர்களே அப்பொருளைக் கள்வரிடம் கொண்டுபோய்க் கொடுக்கச் செய்கிறது. யோக்யனைக் கொல்வதும் பொன்தான், கள்வனைக் காப்பதும் பொன்தான்; அன்றியும் சில சமயங்களில் யோக்யனையும் கள்வனையும் இருவரையும், தூக்கிலிடச்செய்கிறது! அது எல்லாவற்றையும், செய்தும்வைக்கும், அழித்தும் வைக்குமன்றோ ? அவளது பாங்கிகளில் ஒருத்தியை என் பட்சம் வாதிப்பவளாகச் செய்கிறேன். ஏனெனில், என் வாதம் இதுவரையில் எனக்கே அர்த்தமாக வில்லை— உனது உத்திரவின்மீது — [மறுபடியும் கதவைத் தட்டுகிறான்.]

ஒரு பாங்கி வருகிறாள்.

பா. யார் கதவைத் தட்டுகிறது ?

க. ஒரு சீமான்.

பா. அவ்வளவுதானா ?

க. ஆம், அன்றியும் ஒரு சீமாட்டியின் தம்பி.

பா. அது ஒரு விசேஷந்தான். அந்தப் பெருமை எல்லோரும்

வாஸ்தவத்தில் பாராட்டுவ தரிது. என்ன வேண்டும் தங்களுக்கு ?

க. உனது எஜமானியின் உருவம். அவள் சித்தமா யிருக்கிறளா ?

பா. ஆம்—தன் அறையி லிருப்பதற்கு.

க. இதோ உனக்குப் பொன் இருக்கிறது. உன் நன்குமதிப்பை எனக்கு விலைக்குக் கொடு.

பா. என்ன ? என் நற் பெயரையா ? அல்லது, உம்மைப்பற்றி, எனக்கு எது நல்லது, என எண்ணுகிறேனே, அதைக் கூற வா ?—அரச குமாரி !

ஹேமாங்கி வருகிறள்.

க. அழகிய அணங்கே, உனக்கு இது நற் காலை யாகுக.

[பாங்கி போகிறள்.]

ஹே ஐயா, உமக்கும் நற் காலை யாகுக ! கஷ்டத்தை விலைக்கு வாங்க, நீர் மிகவும் கவலை எடுத்துக்கொள்ளுகிறீர். உமக்கு நான் கொடுக்கத் தக்கன எல்லாம் என்னிடம் கொடுக்க அதிக மில்லை யென்றும், இருப்பவைகளையும் கொடுப்பது கடின மென்றும், சொல்வதே யாம்.

க. ஆயினும், நான் உன்மேல் ஆசை கொண்டிருப்பதாகச் சத்தியம் செய்கிறேன்.

ஹே. சும்மா நீர் அவ்வாறு கூறிடினும், அவ்வளவு ஆழ்ந்ததாக அதை நான் எண்ணுவேன் இன்னும் நீர் சத்தியம் செய்வதானல், அதற்கு நீர் அடையும் பிரதி பலன், அதை நான் கருத மாட்டேன் என்பதுதான்.

க. இது பதில் அல்ல

ஹே. மௌனமா யிருந்தால் நான் இணங்கினேனென்று நீர் சொல்லாம லிருப்பதற் கன்றி, நான் பேசவேமாட்டேன். என்னை விட்டுவிடும், நா னும்மை வேண்டிக்கொள்ளுகிறேன். உமது

மிகச் சிறந்த பட்சத்திற்கும், உண்மையில் இது போன்ற அவ மரியாதையைத்தான் காட்டுவேன். உம்மைப் போன்ற சிறந்த கல்விமான்கள், பிறரால் கற்பிக்கப்பட்டால், பொறுமை யென்பதைக் கற்கவேண்டும்.

க. உன்னுடைய பயித்தியத்தில் உன்னை விடுவது, எனக்குப் பாப மாம். நான் அப்படிச் செய்யேன்.

ஹே. மூடர்கள் பித்தம் பிடித்தவர்க ளென்று.

க. என்னை மூடன் என்று அழைக்கிறாய் ?

ஹே. எனக்குப் பித்தம் பிடித்திருப்பதால், அப்படிச் செய்கிறேன். நீர் பொறுமையுட னிருப்ப தானால், நான் பித்தம் பிடித்தவளா யிருக்கமாட்டேன் இனிமேல். ஆகவே, அது நம் மிருவரையும் சுவஸ்தப்படுத்தும். ஐயா, இவ்வாறு வார்த்தை அதிகமாய் ஆடுவதினால், குல ஸ்திரீகளுக்குரிய நடவடிக்கையை, நீர் என்னை மறக்கச் செய்கிறீர், என்று எனக்கு மிகவும் வருத்தமா யிருக்கிறது. ஆகவே, ஒரே முறையாய் இதை அறியும், இப்பொழுது. என் னிதயத்தை அறிந்த நான், அந்த உண்மையின்மீ தாணைப்படி, உம்மீது கொஞ்சமேனும் எனக்குப் பட்ச மில்லையென்று உறுதியாய்க் கூறுகிறேன். நான், உம்மை வெறுக்கும்படியான தர்ம சிந்தை இன்மைக்கு அத்தனை அருகி லிருக்கிறேனே என்று, என்னையே தூஷிக்கிறேன். இதை நீராக அறிந்தால் நலமா யிருக்கும். வீம்பாய் இதை எடுத்துக் கூற நான் விரும்பிலேன்.

க. உனது தந்தைக்குக் கீழ்ப்படிந்து நடவாத பாபத்திற் காளாகிறாய். பிச்சை யெடுத்து வளர்ந்த, அரண்மனையி லுள்ளார் உண்டு எறிந்த எச்சிலினால் போஷிக்கப்பட்டு பழையது உண்டு வளர்ந்த, அந்த இழிவாம் பாதகனுடன், ஏதோ உடன்படிக்கை செய்துகொண்டதாக எண்ணுகிறாயே, அது உடன்படிக்கையே அன்று. அது ஒன்று மில்லை. கீழ்ப்பட்ட ஜனங்களுக்குத் தாங்களாக அவ்வாறு பந்தித்

துக்கொள்வது வழக்கமா யிருந்தபோதும், அவ்வாறு எதேச்சையாய் நடவா வண்ணம், இவ் விராஜ்யத்தின் மகுடத்திற் குரியவளாய்ப் பிறந்திருக்கிறபடியால், நீ கட்டுப்பட்டிருக்கிறாய்; நீ ஒரு அற்ப அடிமையை மணந்து அதன் விலை யுயர்ந்த மாற்றைக் கெடுத்துக் கொள்ள லாகாது. அவனிலும் இழிந்தவன் அவனியி லுண்டோ? அவனை நம்பினால் நீயும் உன் மக்களும் பிச்சை யெடுத்துப் புசிக்க வேண்டியதுதான்.—கட்டத் துணி யில்லாக் கட்டைத் தடியன்! சீமான்கள் சீயென இகழும் கந்தை! மடைப்பள்ளி மடையன்! அவ்வளவுகூட கௌரவ மில்லாதவன்!—

ஹே. விருதாவில் தூஷிக்கும் வீணனே! இப்பொழு திருப்பதை விட இன்னும் வேறொன்று மல்லாது, நீ இந்திரன் இளங் குமாரனாயினும், அவரது காலைப் பிடிக்கும் வேலை யாளா யிருக்கவும் தகாத இழிந்தவன் நீ. உனது குணத்தின் தாரதம்யப்படி கொடுப்ப தானால், அவரது ராஜாங்கத்தில் உதவிக் கொலைஞனாய் மற்றவர்கள் பொறாமை கொள்ளும்படி உன்னை ஏற்படுத்தலாம்; அந்த உயர்ந்த வேலை கொடுத்ததும், உனக் கதிகமென்று, உன்னை வெறுப்பார்கள் எல்லோரும்.

க. அவன் வாடையில் வறண்டுச் சாவானாக!

ஹே. உன் வாயால் அவரைப் பெயரிட் டழைப்பதைவிட, பெருங் கேடு வே றொன்றும் அவருக்கு நேராது. எப்பொழு தாவது அவர் தேகத்தைச் சுற்றிய மிகுந்த ஏழ்மையாம் ஆடையும், உனது கேசங்களெல்லாம் உன்னை யொத்த மனிதராயினும், அத்தனைப் பெயரையும்விட, பெருமை பெற்றதாக மதிக்கப்படும் என்றால்—என்னடா, விசாகா?

விசாகன் வருகிறான்.

க. அவனது ஆடை? இப்பொழுது; அந்தப் பிசாசு—

ஹே. துரைசானி யெனும் என் பாங்கியிடம் உடனே போ—

வி. அவன் ஆடை?

ஹே. பிசாசு பீடிப்பதுபோல் ஒரு மடையன் வந்து என்னைப் பீடிக்கிறான், பயப்படுத்துகிறான், அதனினும் அதிக கோபமூட்டுகிறான். போ, என் பாங்கியை என் கையி னின்றும் அகஸ்மாத்தாய் நழுகிப்போன வளையலைத் தேடச் சொல், அது உன் எஜமானனுடையது. பரத கண்டத் தில் எந்த மன்னனுடைய பகுதிப் பணத்தைப் பெறுவ தாயினும், அதைக் கொடுத்திருக்கமாட்டேன் இன்று காலை அதைப் பார்த்ததாக நினைக்கிறேன். நேற்றிரவு என் கையி லிருந்ததெனக் கட்டாயமாய்ச் சொல்வேன். அதற்கு நான் முத்தமிட்டேன். அவரன்றி மற்றொன்றை நான் முத்தமிடுவதாக என் பிராணநாதரிடம் சொல்ல, அது போயிராதிருக்குமாக!

வி. அது காணாமற் போகாது, அம்மணி.

ஹே. அங்ஙனமே நானும் கோருகிறேன். போய் தேடிப்பார். [விசாகன் போகிறான்.]

க. என்னை நீ தூஷித்தாய்!—அவனது அற்ப ஆடை!

ஹே. ஆம், நான் அவ்வாறுதான் கூறினேன், ஐயா; என்மீது பிராது செய்வதானால் அதற்குச் சாட்சிகள் கூப்பிடும்.

க. நான் உன் தகப்பனாரிடம் சொல்லுகிறேன்.

ஹே உங்கள் தமக்கையிடமும் சொல்லும்; அவர்கள் எனக்கு நல்ல தலைவி; என்னைப்பற்றி கெடுதியையே கருதுவார்கள் என நம்புகிறேன். ஆகவே நான் உம்மை விட்டுப் போகி றேன்—கேடு கெட்ட சஞ்சலத்திற்கு. [போகிறாள்.]

க. நான் பழி வாங்குகிறேன்!—அவனது அற்ப ஆடை!—இருக் கட்டும்! [போகிறான்.]

காட்சி முடிகிறது.

## நான்காம் காட்சி.

இடம்—பல்லாரியன் வீட்டிலோர் அறை.

பாசதாமனும், பல்லாரியனும் வருகிறார்கள்.

பாச. அதைக் குறித்து வருத்தப்படவேண்டாம் தாங்கள். அவளது கற்பினை அவள் காத்திடுவாள் என எங்ஙனம் நிச்சயமாய் இருக்கிறேனோ, அங்ஙனம் அரசரை என் பட்சம் திருப்புவதில் நிச்சயமா யிருப்பேனாயின்!

ப. அவரை உமது பட்சம் ஆக்க என்ன வழி பார்த்திருக்கிறீர்?

பாச. ஒரு வழியு மில்லை. காலத்தின் மாறுபாட்டைக் கணக்கிட்டுக்கொண்டு, தற்கால தரித்திர திசையில் தயங்கி, நற்காலமெப்பொழுது வருமோ, என நாடிக்கொண் டிருக்கிறேன். குன்றிய கோரிக்கைகளுடைய இச் சமயத்தில், உமது பிரியத்தை மாத்திரம் பூர்த்தி செய்கிறேன். அதுவும் முடிவு பெறுமற்போனால், நான் உமக்கு அதிக கடன் பட்டவனாக மரிக்கவேண்டியதே.

ப. உமது சற்குணமும் சகவாசமுமே, நான் செய்யக்கூடியனவற்றிற்கெல்லாம் கைம்மாறு அதிகமாய்க் கொடுக்கின்றன—இதற்குள்ளாக, உம்முடைய அரசன், அகஸ்திய மஹாராஜாவிடமிருந்து கேள்விப்பட் டிருப்பார். காயார் லோகசேனர் தன் வேலையைக் குறைவின்றிச் செய்து முடிப்பார். எமது பாண்டிய சைனியத்தின் ஞாபகம் சிங்களவரது துயரத்தில் இன்னும் மாறாது குடிகொண் டிருக்கிறபடியால், அவர் எதிர்ப்பதைவிட, கப்பம் கொடுப்பதாய் ஒப்புக்கொண்டு, பாக்கியா யிருப்பதை யெல்லாம் அனுப்பி விடுவாரென, நினைக்கிறேன்.

பாச. ராஜாங்க விஷயங்கள் நான் கற் றறிந்தவன் அல்ல, இனிமேலும் கற்கப்போகிற தில்லையென எண்ணுகிறேன்; அங்ஙனமிருந்தும், இது சண்டையாய் முடியுமெனவே உறுதியாய் நம்புகிறேன். ஒரு காசு கப்பமும் கட்டப்பட்டதாய்க் கேள்

6934



விப்படுவதைவிட, தற்காலம் காலபுரத்தி லிருக்கும் பாண்டியன் சைனியங்கள், எதற்கு மஞ்சா சிம்ஹளத் தீபத்தில் இறக்கப்பட்டதாக விரைவினில் கேள்விப்படுவீர் நீர். முன்பு, அவர்களுடைய பயிற்சி யின்மையைக் கண்டு நகைத்தபோதிலும், அவர்களுடைய தைரியத்தைக் கண்டு முகத்தைச் சுளித்தா னன்றோ ஜ்வாலகேசரி பாண்டியன்? அச்சமயத்தி லிருந்ததைவிட, எங்களவர் இப்பொழுது தேர்ச்சி யடைந்திருக்கிறார்கள். அவர்களுடைய பயிற்சியானது அவர்களது தைரியத்துடன் கூடி, அவர்களை எதிர்ப்பவர்களுக்கு, உலக சம்பந்தத்தினால் விர்த்தியடைபவர்கள் இவர்கள், எனத் தெரிவிக்கும்.

ப. இதோ பாரும்! ஈயாகாமர்!

ஈயாகாமன் வருகிறான்.

பாச. கடு வேகமாய்ச் செல்லும் மான்கள் உம்மைக் கரை வழியாய்க் கொண்டுவந்திருக்கவேண்டும். எத் திக்குகளிலு மிருந்து காற்று உமது பாய் மரங்களில் தாக்கி, உமது படகைப் பறக்கச் செய்திருக்கவேண்டும்.

ப. வாரும், ஐயா.

பாச. உமக்குக் கிடைத்த சுருக்கமாம் பதில், உம்மைச் சுறுக்கினில் திரும்பிவரச் செய்ததெனக் கோருகிறேன்.

ஈ. உமது காதலி நான் கண் கொண்டு பார்த்த காரிகையர்க்குள் எல்லாம் சிறந்த ஓர் கட்டழகியே.

பாச. அதனோடு, சிறந்த குணவதியே. இல்லாவிடின் அவள் கட்டழகு, பலகணி வழி வெளியே பார்த்து, கபடமாம் காமுகர்களை வலைப்படுத்தி, அவர்களை வஞ்சிப்பதற்கே உபயோகப்படும்.

ஈ. இதோ உமக்குக் கடிதங்கள் இருக்கின்றன.

பாச. நற் செய்தியா யிருக்குமென நம்புகிறேன்.

ஏறக் குறைய அப்படியே.

ப. நீர் அங்கிருந்தபொழுது, காயார் லோகசேனர் சிம்ஹள அரசன் அரண்மனையி லிருந்தாரோ ?

ர. அவர் வருவதாக எதிர் பார்த்திருந்தார்கள். ஆயினும் அப் பொழுது அவர் வர வில்லை.

பாச. இதுவரையில் எல்லாம் சரிதான். இந்த வயிரமானது முன் புபோல் பிரகாசிக்கிறதா ? அல்லது நீர் அதை அணிந் திருக்கத் தகாதபடி அதிகமாய் மழுங்கிப்போ யில்லையா ?

ச. அதை நான் தோற்றிருப்பே னாயின் அதன் விலை யளவு பொன்னைத் தோற்றிருக்க வேண்டும். சிம்ஹளத்தில் நான் அனுபவித்தபடி, இனிமையில் காலம் கடுகிச் சென்ற இரண் டாம் இரவினை அனுபவிக்க, அதற்கு இரண்டு பங்கு அதிக தூரப் பிரயாணம் போவேன்; மோதிரம் ஜெயிக்கப்பட் டது.

பாச. இந்த வயிரத்தை ஜெயிப்பது அவ்வளவு எளி தல்ல.

ச. ஒரு காலு மில்லை. உமது காதலி மிகவும் எளிதில் அடை யக் கூடியவள்.

பாச. ஐயா, உமது தோல்வியை விளையாட் டாக்காதீர். நா மினி சிநேகிதர்களாக இருக்க முடியா தென்பதை அறிந்திருக் கிறீரென நம்புகிறேன்

ச. இல்லை, ஐயா; உடன்படிக்கையின்படி நீர் நடப்பதானால், நாம் சினேகிதர்க ளாகத்தா னிருக்கவேண்டும். உமது மனை வியை அறியாது திரும்பி வந்திருப்பே னாயின், நாம் பிறகு சச்சரவு இடவேண்டியதுதான் என்று ஒப்புக்கொள்ளு கிறேன். ஆனால் இப்பொழுது அவளது கற்பினையும் உமது மோதிரத்தையும் நான் ஜெயித்ததாகக் கூறுகிறேன். உங்க ளிருவருடைய அனுமதியின்மீதும் அங்ஙனம் செய்தபடி யால், உமக்கும் உமது காதலிக்கும் நான் தீங்கிழைத்தவ னாகேன்.

பாச. சயனக் கிருஹத்தில் அவளுடன் சம்பந்தப்பட்டதாய் எனக்கு ரூபிப்பீராயின், எனது நேசமும் மோதிரமும் உம்முடையதே. இல்லாவிடின் அவளது களங்கமற்ற கற்பினைக் குறித்து நீர் கொண்ட கெட்ட எண்ணமானது, உமது வாளை நான் ஜெயிக்கச் செய்யவேண்டும், அல்லது எனது வாளை உமக்கிழக்கச் செய்யவேண்டும். இல்லையேல், நாமிருவரும் மடிய, நம திரு வாளையும் கண்டவன் கைப்பற்றச் செய்யவேண்டும்.

ஏ. நடந்ததற்கு எவ்வளவு சமீபம்வரையில் நான் எடுத்துக் கூறக் கூடுமோ அவ்வளவு கூறி, முதலில் உம்மை நம்பும்படி செய்கிறேன். பிறகு அதன் வாஸ்தவத்தை எனது பிரமாணத்தினால் ஊர்ஜ்ஜிதப்படுத்துகிறேன். அது வேண்டிய தில்லையென்று உமக்கே தோன்றும்பொழுது, நான் பிரமாணம் செய்யவேண்டியதில்லை என்று, நீரே விட்டுவிடுவீர் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

பாச. சொல்லும்.

ஏ. முதலில் அவளது படுக்கையறை—அவ்விடத்தில் நான் உறங்க வில்லை, நான் ஒப்புக்கொள்ளுகிறேன், ஆயினும் அங்கு காத்திருந்ததின் பலனை அனுபவித்தேன்.—வெள்ளி வேலை செய்த பட்டுப் படுதாக்கள் விட்டிருந்தன அதில் ஸ்ரீராமன் அயோத்திக்குத் திரும்பியபொழுது, பூரித்த கங்கையைக் கடந்து, குகன் அவர்களையெல்லாம் அக் கரை யேற்றிய கதை சித்திரிக்கப்பட் டிருந்தது. அந்த வேலைப்பாடு மிகவும் கம்பீரமாயும், கண்ணைக் கவரும் அழகு வாய்ந்ததாயும், அதிக விலை யுயர்ந்ததாயு மிருந்தது. அதைக் கண்டு நான் ஆச்சரியப்பட்டேன்; அவ்வளவு தத் ரூபமாயும், விசித்திரமாயும், அழகாயும் வேலை செய்யப்பட் டிருந்தது.

பாச. இது சரிதான். இதை இவ்விடமே யிருந்து என்னிடத்திலாவது வேறு யார் மூலமாயாவது கேட் டிருக்கலாம் நீர்.

ஏ. நான் அறிந்ததாக இன்னும் விசேஷ குறிப்புகளைக்கொண்டு ஸ்தாபிக்கவேண்டுமோ ?

பாச. ஆம், அவ்வாறுதான் செய்யவேண்டும். இல்லாவிடின் உமது கௌரவத்தை இழிவுபடுத்துகிறீர்.

ஈ. அறைக்கு ஒரு புறம் ஒரு மாடமிருக்கிறது. அதில் கன்னிகா பரமேஸ்வரியின் விக்கிரகம் ஒன்று வைத்திருக்கிறது. உயிருள்ளதேபோல் அத்தனை அருமையாய்ச் செய்யப்பட்ட உருவத்தை நான் கண்டதே யில்லை; மௌனம் சாதிக்கும் மனுஷ்ய உருவை அத்தனை ஒத்திருந்தது, மூச்சும் சலனமும்தான் குறைவு.

பாச. இதையும் மேற்கூறியதுபோல் நீர் அன்னியர் வார்த்தையினின்றும் அபகரித்திருக்கலாம்; அதுவும் இது அனைவராலும் புகழ்ந் துரைக்கப்பட்ட விஷயம்.

ஈ. அறையின் மேற் கூரையின் ஓரமெல்லாம் கந்தர்வர்களுடைய உருவங்கள் சித்திரிக்கப்பட் டிருக்கின்றன. ஆ! அதை மறந்தேன்.—அங்கே இரண்டு விளக்குகள், இரதி மன்மதன் உருவங்கள் அமைந்ததா யிருக்கின்றன, வெள்ளியினால் ஆக்கப்பட்டதாய், ஒவ்வொரு உருவமும் ஒரு காலில் அழகாய் நிற்பதாய்.

பா. இதுதானா அவளது கற்பை நீர் அடைந்தது!—இதை எல்லாம் நீர் பார்த்ததாக ஒப்புக்கொள்வோம். உமது ஞாபக சக்தியை மெச்சவேண்டியதே. அவளது பள்ளி யறையி லுள்ளதை நீர் பகுத் துரைத்தல் நீர் மேற்கொண்ட பந்தயத்தை ஜெயித்திடச் செய்யுமோ ?

ஈ. ஆனால் உம்மால் முடியு மானால்—[வளையை வெளியில் எடுத்து] முகம் வெளுத்திடும். இந்த நகையைச் சற்றே வெளியில் காட்ட எனக்கு உத்திரவளிக்க வேண்டும். இதோ பாரும்! மறுபடியும் மீட்டுக்கொள்ள வேண்டும், உமது மோதிரத்திற்கு அதைக் கடி மணம் புரியவேண்டும். நான் அவைகளை ஜாக்கிரதையாய் [illegible] வேண்டும்.

பாச. ஈசனே!—இன்னும் ஒரு முறை அதை நான் பார்க்கட்டும். நான் அவளிடம் கொடுத்துவிட்டு வந்ததா அது ?

ஈ. ஐயா, அதுதான்.—அதற்காக நான் அவளுக்கு வந்தனம் செய்யவேண்டும்.—தன் கையினின்றும் கழற்றிக் கொடுத்தாள். இன்னும் என் கண்முன் தோன்றுகிறாள். அவளது அழகிய பாவனை, அவள் கொடையினும் மேம்பட்டதே, அதற்கோர் அதிக செல்வத்தையும் கொடுத்தது. அவள் அதை எனக்குக் கொடுத்தாள்; கொடுக்குங்கால் அதை ஒரு கால் தான் மதித்ததாயும் குறித்தாள்.

பாச. எனக் கனுப்பும்பொருட்டு அதை அவள் கழற்றி யிருக்ககலாம்.

ஈ. அப்படி உமக்கு எழுதி யிருக்கிறாள்போலும், என்ன?

பாச. ஆ! இல்லை, இல்லை, இல்லை! இது உண்மையே. இதோ இதையும் எடுத்துக்கொள்ளும். [மோதிரத்தைக் கொடுக்கிறான்.] இது என் கண்ணுக்கு காளவிடப் பாம்பாகும். அதைப் பார்த்தலே என் ஆவியைப் பற்றிப் பறிக்கிறது. அழகிருக்குமிடத்தில் கற்பே யில்லா திருக்குமாக. வஞ்சக மிருக்கு மிடம் வாஸ்தவ மில்லா திருக்கு மாக, மற்றொரு மனித னிருக்குமிடத்தில் காதலென்பதே இராதாக! அவர்களது கற்பிற்கு அவர்கள் எவ்வாறு கட்டுப்பட வில்லையே, அவர்கள் செய்யும் கட்டுறுதியும், செய்யு மிடத் தங்ஙனமே யாகுக! கற்பென்பதே யில்லை!—ஹா! கணக்கினைக் கடந்த காதகமே!

ப. ஐயா, கொஞ்சம் பொறும். உமது மோதிரத்தை வாங்கிக் கொள்ளும். அது இன்னும் ஜெயிக்கப்பட வில்லை. ஒரு வேளை அவள் அதைப் போக்கடித் திருக்கலாம். அல்லது, அவளது பாங்கியர்களில் ஒருத்தி, பணத்தினால் வஞ்சிக்கப் பட்டவளாய், அவளிடமிருந்து திருடி யிருக்கலாம், யாருக்குத் தெரியும்!

பாச. மிகவும் உண்மையே; அவ்வாறே இவர் அதைப் பெற்றிருப்பாரென நம்புகிறேன். கொடும் இப்படி என் மோதிரத்தை.

இதைப்யார்க்கினும் ஊர்ஜ்ஜிதமான அவளது தேகக் குறி ஏதாவது என்னிடம் கூறும். இது திருடப்பட்டது.

ஈ. ஈசன் மீதாணைப்படி, அவளது கரத்தினின்றும் இதைப் பெற்றேன் நான்.

யாச. கேளும் அதை, அவர் பிரமாணம் செய்கிறார்! ஈசன்மீ தாணைப்படி கூறுகிறார். அது உண்மையே! வேண்டாம், மோதிரத்தை நீரே வைத்துக்கொள்ளும். அது உண்மையே! அவள் அதைப் போக்கடித்திருக்கமாட்டாளென நிச்சயமாகக் கூறுவேன். அவளது பாங்கிகளெல்லாம் வாக்கு தவறுதவர்கள், வஞ்சகத்திற்குட்படாதவர்கள்; அவர்களாவது அதைத் திருடும்படி ஏவப்படுவதாவது! அதுவும் ஒரு அந்நியினல்! இல்லை! அவளை அவர் அனுபவித்திருக்கவேண்டும். அவள் கற்பினின்றும் பிறழ்ந்ததற்கு இதுவே அறிகுறியாம். இவ்வாறு அதிக விலைகொடுத்து விலையாதென்னும் பெயரை விலைக்கு வாங்கியிருக்கிறாள். இதோ! உமது கூலியை யெடுத்துக்கொள்ளும். நரகத்தி லுள்ள பிசாசங்களெல்லாம் உங்க ளிருவர்க்குள் பகிர்ந்துகொள்ளட்டும்.

பா. ஐயா! பொறும் சற்றே! இதுவரையில் நம்பிக்கை வைத்திருந்தவளைக் குறித்து மனம் மாறிட, இந்த அத்தாட்சி போதுமானதா யில்லை—.

யாச. பேசாதீர் அதைப்பற்றி! அவள் அவருக்கு உடன் பட்டவளே.

ஈ. இன்னும் உமக்குத் திருப்தியாகவேண்டின், அவளது இடது ஸ்தனத்தின்கீழ் ஒரு மச்ச மிருக்கிறது, அத்தனை அருமையான இடம் வாய்ந்ததே என மகிழ்ந்திருப்பதேபோல்! என் ஆவிமீ தாணை! அதை நான் முத்தமிட்டேன். பூரணமா யிருந்தும், மறுபடியும் புசிக்க, அது எனக்குப் பசியினை யுடனே தந்தது. அவளது உடலில் இந்தக் களங்கம் உமக்கு ஞாபக மிருக்கிறதே?

ராஜ. ஆம், அதுமாத்திரமே யிருந்தபோதிலும், நரக முழுதும், கொள்ளத் தக்க அத்தனைப் பெரிய இன்னொரு களங்கத்தை அது ஸார்ஜ்ஜிதப்படுத்துகிறது.

ச. இன்னும் கேட்க விரும்புகிறீரா ?

ராஜ. உமது கணக்கை நிறுத்தும். கற்பிழந்த கணக்கினைக் கேட்க வில்லை; ஒரு முறையும் ஒரு கோடி முறையும் ஒன்றே.

. வேண்டுமென்றால் நான் சத்தியம் செய்கிறேன்.—

ராஜ. சத்தியமே வேண்டாம். நீர் செய்யவில்லையென்று சத்தியம் செய்வதானால், நீர் பொய் பேசுகிறீர். அவ்வாறு கூறின் உம்மை அரை க்ஷணத்தில் கொல்வேன்.

ச. நான் ஒன்றையும் மறைக்க மாட்டேன்.

ராஜ. ஆ! அவள் இங்குமாத்திரம் இருப்பாளாயின் என்னெதிராக, துண்டம் துண்டமாகக் கிழித்தெறிவேன் அவளை! அவ்விடம் போய் அதைச் செய்கிறேன் நான், அரண்மனையில்! அவள் தந்தையின் எதிரில்!—நான் எதாவது செய்வேன்! [போகிறான்.]

ரா. பொறுமையின் அடக்கத்திற்குப் புறம்பே யுள்ளான் மிகவும்! நீர் ஜெயித்தீர். நாம் அவனைப் பின் தொடர்ந்து தன் கோபத்தைத் தன்மீதே காட்டாவண்ணம் தடுப்போம்.

மனப் பூர்வமாய். [போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## ஐந்தாவது காட்சி.

இடம்—பல்லாரியன் வீட்டில் மற்ருேர் அறை.

பாசதாமன் வருகிருன்.

பாச. பெண்கள் உதவியே யின்றி ஆண்மக்கள் இவ் வுலகில் உதித்திட மார்க்க மில்லையா? நாம் அனைவரும் வம்பிற் பிறந்தவர்களே! நான் உற்பத்தியான காலத்தில், எந்தப் பூஜ்யரான புண்ணிய புருஷனை நான் தந்தையென் றழைத்தேனே, அவர் எங்கிருந்தாரோ அறிகிலேன். நான் எந்தப் பாதகனுக்குப் பிறந்தேனே! ஆயினும் என்னுடைய அன்னை, அவளுடைய காலத்தில், அருந்ததியே யெனக் காணப்பட்டாள். அங்ஙனமே, என் மனைவியும், இக் காலத்தில் ஈடில்லாதபடி கற் புடையவளாகக் காணப்பட்டாள். ஹா! நான் பழி வாங்க வேண்டும்! கதிரவன் ஒளியும் மீதுபடாத கற்புடைய கன்னியென மதித்திருந்த அவள், இக் கரு நிற முடைக் காதகனைக் கண்டவுடன், அவனுக்கு உட்படுவதா! கோரம்! கோரம்!—என் உடலில் ஸ்திரீ ஜன்மத்திட மிருந்து நான் பெற்றதைப் பகுத் தறியக்கூடு மாயின்! ஆண் மகனைப் பாபச் செயல்களுக்கு உந்தும் ஒவ்வொரு குணமும், அவன் அரிவையிட மிருந்தே பெற்ற தாகும் என்று உறுதியாய்க் கூறுவேன். பொய் புகலல், இச்சகம் பேசுதல், மோசம் செய்தல், தவருன மோஹம் கொள்ளல், முதலான கெட்ட எண்ணங்கள் எல்லாம் பெண் ஜென்மத்திட மிருந்து அவன் பெற்றதே யாம்! பழி வாங்குங் குணமும் அவர்களிட மிருந்தே பெற்றதே யாம்; பே ராசை, பிறர் பொருளை விரும்பல், குணம் அடிக்கடி மாறுதல், இகழ்தல், அதிகமாய் ஏங்கிடல், தூறுதல், மனம் மாறுதல், முதலிய பெய ரிட் டழைக்கத் தக்க—அன்று, நரகத்தில் கிடைக்கத் தக்க—எல்லாத் துர்க் குணங்களும், முழுமையோ, பெரும்பாலுமோ, அவர்களிட மிருந்து பெற்றனவே யாம்; யோசிக்குமிடத்து முழுமையுமே என்று சொல்லவேண்டும். ஏனெனில், துர்க்குணங்களிலும்

ஒன்றிற்கு உடன்பட்டவர்களாயிருப்பதில்லை. ஒரு துர்க் குணத்தை விட்டு மற்றொரு துர்க்குணத்திற்குக் கணத் துக்குக் கணம் மாறிக்கொண் டிருக்கிறார்கள். அவர்களைப் பற்றித் தூஷித் தெழுதுகிறேன், வெறுக்கிறேன், சபிக் கிறேன் அவர்களை! ஆயினும் உண்மையில், அவர்களை வெறுப்பதின் புத்தி சூட்சுமமானது, அவர்களிச்சைப்படி யே ஆகவேண்டுமெனக் கோருவதே யாம்; ஏனெனில், அத னாலேயே அவர்கள் யம வேதனையைவிட அதிக துன்பம் அனுபவிப்பார்கள். [போகிறான்.]

காட்சி முடிகிறது.



# மூன்றும் அங்கம்.

---

## முதல் காட்சி.

இடம்—சிம்ஹளம். சிம்ஹளநாதன் அரண்மனையில்
கொலு மண்டபம்.

சிம்ஹளநாதர், அரசி, கமோதரன், மந்திரிகள் முதலானோர்
ஒரு புறமாக வருகிறார்கள்.

மற்றொரு புறமாக காயார் லோகசேனன் பரிவாரங்களுடன்
வருகிறான்.

சி. இப்பொழுது சொல்லும், அகஸ்திய கேசரி எனும் பாண்டியன் நம்மிடம் என்ன விரும்புகிறார் ?

லோ. மனிதர்களுடைய மனத்தின்கண் இன்னும் குடிகொண்டிருக்கும், நாவினால் நவின்றிடவும் காதினால் கேட்டிடவும் அவருடைய புகழ் எக்காலமும் பரவி நிற்கும், சூர்யகேசரி எனும் பாண்டியன், இந்த சிங்களம் வந்து, அதை வென்றபொழுது, அக் கேசரி பாண்டியனால் புகழப் பெற்று, அப் புகழை வெளிக்கத் தக்கபடி சாஹசங்களையும் செய்து முடித்த, உமது சிறிய தந்தையாகிய சேசபாலர், தானும் தன் சந்ததியாரும், மதுரை ஆட்சிக்கு, வருஷந்தோறும் மூவாயிரம் பொன் கப்பமளிப்பதாக வாக்களித்தார். அக் கப்பமானது சிலகாலமாகத் தம்மால் அனுப்பப்படாமலிருக்கிறது.

அ. அந்த ஆச்சரியத்தை அடியுடன் அழிக்கும்பொருட்டு இனி எப்பொழுதுமே அனுப்பப் படாமலிருக்கும்.

க. அந்த சூர்யகேசரிக்குச் சமான மானவன் மறுபடியும் உதிக்குமுன் அநேகம் பாண்டியர் பிறந் திறக்கவேண்டும். இந்த சிம்ஹளமானது பிரத்யேகமான ஓர் உலகம். எங்கள் கந்தரங்களை நாங்கள் தரிப்பதற்காக உங்களுக்கு நாங்கள் ஒன்றும் கப்பம் கட்டமாட்டோம்.

அ. அப்பொழுது எங்களிடமிருந்து பிடுங்கிக்கொள்ள அவர்களுக்குச் சமயம் வாய்த்தது; அதை மறுபடியும் மீட்டுக்கொள்ள இப்பொழுது எங்களுக்குச் சமயம் வாய்த்தது. எம்மிறையே! உமது முன்னோர்களாகிய மன்னர்களின் ஞாபகம் இருக்கட்டும் உமக்கு. உமது பகைவருடைய படவுகளை மேலே தரிக்காது கொடிமரம்வரையில் உள்ளே உறிஞ்சுகொள்ளும் மணற்றிட்டைகளாலும், மேலே ஏறுவதற்கு அசாத்தியமான செங்குத்தான கற்பாறைகளாலும், கோஷிக்கிற ஜலப்பிரவாகத்தாலும், அரண்போல் நான்கு புறமும் சூழப்பட்டு, வருண ராஜனுடைய நந்தவனத்தைப்போல் விளங்கும் இந்த த்வீபத்திலுள்ளார்க்கு இயற்கையாய் அமைந்துள்ள தைரியத்தையும், ஆராய்ந்து பார்ப்பீராக. கேசரி பாண்டியன் ஒரு விதமான வெற்றி பெற்றார் இங்கு; உண்மையே. ஆயினும் "வந்தேன், கண்டேன், வென்றேன்." என்னும் அவருடைய டம்பமொழி இவ்விடம் பேசினதன்று. இரண்டு முறை நமது கரையினின்றும் முறியடிக்கப்பட்டவராய், கொண்டுபோகப்பட்டார் வெட்கத்துடன். அதுவே முதல் சமயம் அவரை வெட்கமானது பிடித்தது, அவரது கப்பல்கள்—கவைக்குதவாத அற்பங்கள்!—நமது பயங்கரமான சமுத்திரங்களில், முட்டைகளின்மேலோடுகளைப்போல் அலைகளினால் அலங்கோலமாய் ஆட்டப்பட்டவைகளாய், நம்முடைய கற்பாறைகளின்மீது தாக்கி அத்தனை எளிதில் உடைந்துபோயின. அந்த மகிழ்ச்சியின் பொருட்டு, ஒரு முறை கேசரிபாண்டியனை ஓர் யுத்தத்தில் வெற்றி பெற விருந்த, புகழ் பெற்ற கேசபாலர், கண்டி நகர முழுவதும் தீபங்களை ஏற்றி, வெற்றி மகிழ்ச்சி கொண்டாடி, சிங்களவரை யெல்லாம் செருக்குடன் நடக்கச் செய்தார்.

க. போம், இனிமேல் கப்பம் ஒன்றும் கொடுக்கப்போகிறதில்லை. அக்காலத்திலிருந்ததைவிட இப்பொழுது எங்களுடைய ராஜ்யம் அதிக பலப்பட்டிருக்கிறது; அன்றியும், நான் கூறியபடி, அப்படிப்பட்ட கேசரி பாண்டியர்கள்

இனி கிடையாது, மற்றவர்கள் அவரைப்போல் கோண லான மூக் குடையவர்களா யிருக்கலாம், ஆயினும் அவரைப் போல் கை வல்லமை யுடையவர்கள் கிடையாது.

சி. அப்பா, உனது தமக்கை முடிக்கட்டும்.

ச. கேசபாலரைப்போல் கட்சத்தைக் கையில் உறுதியாய்ப் பிடிக்கத் தக்கவர்கள் எங்களில் இன்னும் அநேகர் இருக் கிறார்கள்; அவர்களில் நானும் ஒருவன் என்று நான் கூறவில்லை,—ஆயினும் எனக் கொரு கை இருக்கிறது — கப்பம் என்? நாங்கள் ஏன் கப்பம் கட்டவேண்டும்?— பாண்டியன், பரிதியை ஒரு சவுக்கத்தினால் எங்களிட மிருந்து மறைக்கக்கூடு மாயின், அல்லது சந்திரனைத் தன் சட்டைக்குள் போட்டுக்கொள்ளக்கூடு மாயின், அந்த ஒளி யைத் தரும்பொருட்டு நாங்கள் கப்பம் கட்டுவோம் அவ ருக்கு; இல்லாவிடின், இனி கப்பம் கிடையாது என்பதை அறியும்படி உம்மை வேண்டுகிறேன், ஐயா.

பி. துன்ப மிழைக்கும் இப் பாண்டியர் எங்களைக் கட்டாயப் படுத்தி இக் கப்பம் வாங்கிய காலம்வரையில், நாங்கள் சுதந் தரர்களா யிருந்தோம் என்பதை நீர் அறிந்திருக்கவேண்டும். உலக முழுவதும் தன் வசப்படுத்தவேண்டுமென்று அத் தனைப் பேராசை கொண்டிருந்த கேசரிபாண்டியன், நியாய மான காரணம் ஒன்று மின்றி, இவ்விடம் வந்து தனது ஆளுகை என்னும் நுகத்தடியை எங்கள்மீது சுமத்தினார். வீரம் பொருந்தியவர்களாக எங்களை நாங்கள் மதிப்பதால், அதினின்றும் தப்பித்துக்கொள்வது எங்கள் உரிமை யாகி றது. ஆகவே, பாண்டியருக்கு நாங்கள் இந்தப் பதில் உரைப் பதாகக் கூறும். எங்கள் நியாய சட்டங்களை ஏற்படுத்திய மூலநாதர் என்பவரே எங்கள் மூதாதை; அச் சட்டங் களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதினின்றும் கேசரிபாண்டி யன் கட்கமானது எங்களை மிகவும் பிறழும்படி செய்திருக் கிறது. ஆகவே எமது ஆளுகையின் சக்தியைக்கொண்டு

அவைகளை முன்போல் சீர் திருத்தி சுதந்தர்களாக வாழ்வது, எம்முடைய மேலாம் கடமை யாகும், அதனல் பாண்டியருக்குக் கோபம் விளைந்தபோதிலும்.—நாங்கள் கீழ்ப்படிந்து நடக்கவேண்டிய சட்டங்களை, தன் தலைமீது முதல் முதல் ஒரு கிரீடத்தைத் தரித்து, அரசன் எனும் பெயர் பூண்ட, மூலநாதரே, ஏற்படுத்தி யிருக்கிறார்.

லா. ஆயின் சிம்ஹளநாதரே, உம்மிட மிருக்கும் வீட்டு வேலையாட்களைவிட, அதிகமான அரசர்களைத் தனது ஏவல் புரிவோர்களாக உடைய, அகஸ்திய கேசரிபாண்டியரை, உம்முடைய பகைவனாக நீர் மதிக்கவேண்டுமென்று கூறவேண்டி வந்ததே என்று வருந்துகிறேன். ஆகவே, என்னிடமிருந்து இதை ஏற்றுக்கொள்ளும்—பாண்டியரது ஆணைமீது, உம் மீது யுத்தம் புரிந்து உம்மை அழிப்பதாகக் கூறுகிறேன். உம்மால் தடுக்க ஏலாத படையை விரைவிற் காண்பீர்.— உம்மை எதிர்ப்பதாக உறுதி மொழி கூறியும், என் அளவில் நீர் காண்பித்த சிநேகத்தின்பொருட்டு உமக்கு வந்தனம் செய்கிறேன்.

காயார் லோகசேனரே, உமக்கு நல் வரவு கூறுகிறோம். உமது பாண்டியனே என்னை அதிரதனாக்கினார். என் வாலிபத்தில் பெரும்பாலும் அவரிடமிருந்து பயின்று வந்தேன், அவரால் நன்கு மதிக்கப்பட்டேன், அந் நன்கு மதிப்பை அவர் மறுபடியும் என்னிட மிருந்து பலாத்காரமாய் வாங்கிக் கொள்ள முயன்றால், அதை என் னுயிரைக் கொடுத்தாவது காப்பாற்ற முயலுதல் என் கடமை யாகும். தற்காலம், பணவரும், தாலமாதியரும், தங்கள் சுதந்தரத்தை யடையவேண்டுமென்று படையெடுத் திருக்கிறார்க ளென்பதை நன்றாய் அறிந்துள்ளேன். அவர்களுடைய உதாரணத்தைச் சிங்களவர் கைப்பற்றிவிட்டால், மந்தமானவர்களென்று மதிக்கப்படுவார்கள்; பாண்டியன் அங்ஙனம் அவர்களைக் காண இடங் கொடுக்கமாட்டார்கள்.

தூா ருசுவினால் எல்லாம் வெளியாகட்டும்.

மஹாராஜா அவர்கள் உம்மை நல்வர வழைக்கிறார். ஒரு நாள், இரண்டு நாள், அல்லது இன்னும் அதிகமாக, இங்கு எங்களுடன் இருந்து விநோதமாகக் காலம் கழித்துப் போம். பிறகு வேறு விதத்தில் எங்களைச் சந்திக்க விரும்பினால், பேரலைபோல் எங்களைச் சூழ்ந்திருக்கும் சமுத்திரத்தினால் காக்கப்பட்டவர்களாய்க் காண்பீர். அதினின்றும் எங்களைத் துறத்துவீரானால், இத்தேசம் உம்முடையதே, அம்முயற்சியில் நீங்கள் தோற்கடிக்கப்பட்டால், உங்களால் எங்கள் கழுகுகளெல்லாம் சிறந்த விருந்தை யுண்ணும்; அதுதான் முடிவு.

லோ. அப்படியே ஆகுக, ஐயா.

சி. உமது எஜமானனுடைய சித்தத்தை நான் அறிந்தேன், எனது சித்தத்தை அவருக்கு அறிவித்தேன். மிகுதி பெல்லாம், நல்வரவே.

[எல்லோரும் போகிறார்கள்]

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி.

இடம்—அரண்மனையில் மற்றொரு அறை.

விசாகன் ஒரு கடிதத்துடன் வருகிறான்.

வி. என்ன! சோரம்போனார்களா? எந்தக் கொடிய பாதகன் இவ்வாறு அவளைத் தூஷிக்கிறவன் என்பதை என் எழுதவில்லை? கேசரிநாதரே! அந்தோ, என் எஜமானே! உமது செவியில் என்ன விந்தையான விஷம் விழுந்திருக்கிறது! கையும் வாயும் படு விஷமேயாகிய, எந்தப் பாழும் பாண்டிய நாட்டானுக்கு, உமது காதினை எளிதில் கொடுத்து, இவ்வாறு கலக்கப்பட் டிருக்கிறீர்? துரோஹமா? சீ! இல்லை. அவள் கற்பின்பொருட்டு அவள் தண்டிக்கப்படு

கிறாள். மற்ற மாதர்களின் நற்குணத்தை அழிக்க வல்ல அவதூறுகளை, உத்தம பத்தினியைவிட, உன்னத மாம் தேவதையைப்போல், பொறுத்து வருகிறாள்! அந்தோ, என் எஜமானே! இப்பொழுது தமது செல்வம் எல்லாம் எவ்வளவு இழி வடைந் திருக்கிறதோ, அதுபோலவே அவளைக் குறித்து தமது மனமும் இழி வடைந் திருக்கிறது. என்ன! உமது கட்டளைப்படி நான் செய்திருக்கும் சத்தியம், பிரமாணம், எல்லாவற்றின்மீது நான் அவளைக் கொல்ல வேண்டுமா? நான்—அவளைக்—கொல்வதா?—அனர்த்தம்! நல் ஊழியம் செய்வதென்றால் இவ்வாறு செய்யவேண்டின், ஊழியம் செய்யத் தெரிந்தவனைக்கூட நான் மதிக்கப்பட வேண்டாம். இவ் விஷயம் குறிக்கிறபடி, மனுஷ்ய சுபாவமே என்னிடம் குன்றியதுபோல், ஏதாவது தோற்றுகிறேனா? [படித்துக்கொண்டே] "அதைச் செய்துமுடி. அவளுடைய உத்திரவுப்படியே நான் அவளுக்கு அனுப்பியிருக்கும் கடிதம், உனக் கொரு தக்க சமயம் வாய்க்கும்படி செய்யும்" கேடுகெட்ட காகிதமே! உன்மீ திருக்கும் மையைப் போல்தான் நீயும் கறுத் திருக்கிறாய்! அறிவில்லா அற்பமே! இத் தகைக் கொடுஞ் செய்கைக்கு அனுகூலமாயிருந்தும் வெளிக்குமாத்திரம் குற்ற மற்ற வெண்மையாய்க் காட்டுகிறையா? ஆ! இதோ வருகிறாள்—மனங் கெட்டிருக்கும் வேலையை எள் ளளவும் அறிகிலேன்.

ஹேமாங்கி வருகிறாள்.

ஹே. விசாகா, என்ன விசேஷம்?

வி. அம்மா, எனது எஜமானிடமிருந்து இதோ ஒரு கடிதம் வந்திருக்கிறது.

ஹே. யார்? உனது எஜமானரா? அவர்தான் எனது எஜமானன், கேசரிநாதர்! அவரது கை யெழுத்தை எவ்வளவு நன்றாய் நா னறிந்திருக்கிறேனோ அவ்வளவு நன்றாய் நட்சத்திரங் களை அறிந்த ஜோதிஷ சாஸ்திரி, மிகவும் சான்றோனே!

வருங் காலத்தை அவன் முன்பே விரித் துரைப்பான். ஈசனே! ஜகதீசனே! இதில் அடங்கி யிருப்பது காதலையும், என் காதலன் க்ஷேமத்தையும், அவர் மனச் சந்துஷ்டியை யும் குறிப்பதா யிருக்குமாக!—ஆயினும் அச் சந்துஷ்டி நாங் கள் இருவரும் பிரிந்திருப்பதனால் உண்டானதா யிருக்க லா காது; அது அவருக்கு வருத்தம் உண்டாக்கட்டும்.—சில துயரங்களுக்குச் சிகிச்சை செய்யலாம்—அப்படிப்பட்ட வைகளில் அது ஒன்றும்.—ஏனெனில் அது காதலுக்கு மருந் தாகிறது. அவர் மன சந்துஷ்டி, இது தவிர, மற் றெல்லா விஷயங்களிலு மிருக்கவேண்டும். புண்ணியம் செய்த மெழுகே! உனது உத்திரவின்மீது—காதலர் கடி தத்திற்கு இவ்வாறு பூட்டினைச்செய்யும் வண்டுகளே, நீங் கள் சுகமே வாழ்வீர்களாக! தவறி நடந்தால், அபாயத்திற் குள்ளாக்கும் நிபந்தனைகளுக் குட்பட்டவர்களும், காதலர் களும், ஒரே மாதிரியாகப் பிரார்த்திப்ப தில்லை. இம் மெழுகானது முத்திரை யிட்ட பத்திரத்தின்படி நடவாத வர்களைச் சிறையி லிட உபயோகப்பட்டபோதிலும், காத லர்களுடைய கடிதங்களை ஒருங்கு சேர்க்கவும் உபயோகப் படுகிறது. நற் செய்தி! ஈசனே! [படிக்கிறாள்.]

"நியாயமும், அவரது நாட்டில் என்னைப் பிடிப்பாராயின் நின் தந்தையின் கோபமும், அத்தனை குரூரமா யிராது, கண் ணின் கருமணியே! நீமாத்திரம் உனது கண்களால் என்னைப் புனர்ப்பிப்பா யாயின். ஈழநாட்டில் காங்கேயன் துறையில் நா னிருக்கிறேன் என அறிவாயாக. இதைப்பற்றி உன் காதல் எப்படி உனக்குப் புத்தி மதி கூறுகிறதோ, அதன் படி நட இங்ஙனம், தான் செய்த சத்தியத்தினின்றும் தவ றாத, உனக் கெல்லா நன்மைகளும் கோருகிற, காதலில் விர்த் தியடையும், உந்தன் பாசதாம கேசரிநாதன்"—ஆ! இறக்கை யுடைய குதிரை ஏதாவ திருக்க லாகாதா? கேட் கிறாயா, விசாகா? அவர் காங்கேயன் துறையில் இருக்கிறார். இங் கிருந்து அதற்கு எவ்வளவு தூரம் என்று படித்துப்

பார்த்துச் சொல். அற்ப வேலை யுடையவன் ஆறு நாட்களில் அங்கு போய்ச் சேரக்கூடு மாயின், ஒரே நாளில் நான் ஏன் அங்கு காற்றாய்ப் பறக்க லாகாது ? என்னைப்போல், உனது எஜமானனைக் காண, மிகவும் விரும்புகிறா யல்லவா ? நீ விரும்புகிறது—கொஞ்சம் நிதானிக்கட்டும் நான்—எப்படி யிருந்த போதிலும் என்னைப்போ லிராது. ஆயினும், நீ விரும்புகிறாய்; அவ்வளவு ஆவலுட னன்று; இல்லை, என்னைப்போ லன்று; ஏனெனில் எனது ஆவல் எல்லாவற்றையும் கடந்தது—நீ விரைவிற் சொல். காதல் விஷயமாக புத்தி மதி கூறுபவன், காதுகளை அடைத்துப்போகச் செய்யவேண்டும் சொற்களைப் பொழிந்து. இந்தக் காங்கேயன் துறை க்ஷேத்திரத்திற்கு, இங் கிருந்து எவ்வளவு தூரம் என்று சொல். அதற்கிடையில், வேலை நாடு காங்கேயன் துறையைப் பெற்று சுகமடைய அவ்வளவு புண்ணியம் என்ன செய்தது? அதையும் சொல். எல்லாவற்றிற்கும் முதலில், இங் கிருந்து எவ்விதம் கரந்து செல்வது ? இங் கிருந்து போய் மீண்டு வரு மளவும் நாம் கடக்கும் காலத்திற்கு என்ன போக்கு சொல்லலாம் ? ஆயினும் முதலில் இங் கிருந்து எப்படிப் போவது? போக்கை நாம் பிறப்பிப்பானேன் ? உண்டுபண்ணுவானேன்? அதைப் பற்றி அப்புறம் பேசுவோம். கேட்டுக்கொள்ளுகிறேன் உன்னை, சொல் சீக்கிரம். மணிக்கும் மணிக்கு முள்ளாக எத்தனை இருபது காதங்கள் சவாரி போகலாம் ?

வி. ஒரு சூர்யோதயத்திற்கும் இன்னொரு சூர்யோதயத்திற்கு முள்ளாக ஒரு இருபது காதம் போதலை உமக்குப் போதுமானது. அதுவே அதிக மாம்.

ஹே. மனுஷா ! மரண தண்டனைக்குப் போவோனும் இத்தனை மெல்லப் போகமாட்டானே ! வாயு வேகத்திலும் அதிகமாய்ச் செல்லத் தக்க குதிரைப் பந்தயங்களைப்பற்றி நான் கேள்விப்பட் டிருக்கிறேன். இவ்வாறு வார்த்தையாடுவதில் காலம் கழிப்பது மூடத்தன மாம். நீ போய் எனது பாங்கியை

உடம்பு அசௌக்கியமா யிருப்பதாக வேஷம் போடச் சொல். தனது தகப்பனுர் வீட்டிற்குப் போவதாகச் சொல்லச் சொல். எனக்கு உடனே சவாரி உடை ஒன்று சித்தம் செய்; சாதாரண மனிதர்களின் சம்சாரத்திற் கேற்றதா யிருக்கவேண்டும், அவ்வளவே.

வி. அம்மணி, நன்ருய் யோசித்துப் பாரும் நீர் மார்க்கத்தை.

ஹே. எனக் கெதிராகப் பார்க்கிறேன். இப் புறமும் அப் புறமும் பின் புறமும், எல்லாம் நான் ஊடுருவிப் பாராதபடி, ஏதோ படங்கலா யிருக்கிறது. போ, உன்னை வேண்டுகிறேன் நான், சொன்னபடி செய். வே ருென்றும் சொல்வதற் கில்லை, கன்யாகுமரிக் கன்றி மார்க்கமும் தொல்லை.

[போகிருர்கள்.]

காட்சி முடிகிறது.



## மூன்ரும் காட்சி.

இடம்—வேலை நாடு. பர்வதங்கள் செறிந் துள்ள பூமி.

ஓர் குகை யெதிர்.

பாலராயன், கிரிதரன், ஆர்வாரகன் வருகிருர்கள்.

பா. நம்முடையதைப்போல் தாழ்மையாம் கூரை யுடையவர்கள், வீட்டில் தங்கி யிருப்பதற்குத் தகுதியா யிராத, நற் றினம் இது. குழந்தைகளே, குனியுங்கள்; இந்த வாசற்படியானது, உங்களுக்குச் சூர்ய நமஸ்காரம் செய்யும் வழி கற்பித்து, தூயதான காலைச் சந்தியாவந்தனத்தில் உங்களைப் பணிந்திடச் செய்கிறது. அதிக உயரமாய் வளர்ந்தவர்களும், பக்தியின்றி தங்கள் தலைமீது பாகைகளைத் தரித்தவர்களாய், சூர்யனுக்கு வணங்கிப் பணியாதபடி, நிமிர்ந்து இறுமாந்து நடந்து செல்லும்படியாக, அத்தனை உயரமான வாசற்படிகளுடைத்தா யிருக்கின்றன மன்னரது மாளிகைகள்.—அழகிய பரிதியே ! பணிகிருேம் உம்மை. குகையில் வசிப்பவர்க

ளாயினும் நாங்கள், கூட கோபுரங்களில் வசிக்கும் செருக்குள்ளவர்களைப்போல், உம்மைத் திரஸ்கரிக்கிறோமில்லை.

பரிதியே! பணிகிறோம் உம்மை!

ந. பரிதியே! பணிகிறோம் உம்மை!

ா. இனி நமது மலை வேட்டைக்குச் செல்வோம். அதோ தோன்றும் குன்றின்மீது ஏறுங்கள்; நீங்கள் இளவயதுடையவர்கள்; நான் இத் தாழ்வரைகளிற் செல்கிறேன். மேலேயிருந்து நீங்கள் என்னைப் பார்க்கும்பொழுது நான் ஒரு சிறு பறவையைப்போல் தோன்றுங்கால், சிறிதாகத் தோற்றுவதும் பெரிதாகத் தோற்றுவதும், ஸ்தானபலம் என்பதை நீங்கள் கவனியுங்கள். பிறகு நான் உங்களுக்கு அரண்மனையைப்பற்றியும், அரசர்களைப்பற்றியும், யுத்த தந்திரங்களைப்பற்றியும் கூறியிருக்கிற கதைகளையெல்லாம் நீங்கள், ஞாபகப்படுத்தி ஆராய்ந்து பார்க்கலாம். ஊழியமானது, அங்ஙனம் செய்வதினால் ஊழியமாகாது; அப்படி அங்கீகரிக்கப்படுவதினாலேயே அங்ஙனமாகிறது. இங்ஙனம் அறிவதனால், நாம் கண்கொண்டு காணும் ஒவ்வொரு விஷயத்தினின்றும், ஓர் நலத்தை நாம் அடையலாம். உயரப் பறக்காத ஊர்க்குருவியும், ஆகாயத்தை யாளும் கருடனைவிட, க்ஷேமமான ஸ்திதியி லிருப்பதைப் பன்முறை கண்டு சந்தோஷிக்கிறோம். அரசர்களுடைய அரண்மனையில் சேவகஞ் செய்யக் காத்திருப்பதைப்பார்க்கிலும், இந்த நம்முடைய வாழ்வு உத்தமமானதே! சம்பளம் வாங்கிச் சும்மா இருப்பதைவிட இது செல்வமுடையதே! விலையைக் கொடாது வாங்கி உடுத்திக்கொண்டு, டம்பம் பாராட்டுவோருடைய வாழ்வினும் மேன்மையுடையதே. அப்படிப்பட்டவன், தன்னை அவ்வாறு அலங்கரித்தவனுடைய நமஸ்காரத்தைப் பெற்றபோதிலும், அவனுக்குச் சேரவேண்டிய பொருளைத் தந்து அவனுடைய மரியாதையைப் பெறுகிறானில்லை.

அப்படிப்பட்ட வாழ்வு நம்முடைய வாழ்விற்கு முன் என்ஞம?

கீ. உம்முடைய அனுபவத்தினின்றும் நீர் பேசுகிறீர். நாங்களோ, கூட்டை விட்டு அதிக தூரம் செல்லாத, இறக்கை நன்றாய் முளையாத சிறு குருவிகள்போல், வீட்டை விட்டு, அதிக தூரம் சென்று பாராத பாலர்கள். எங்கள் இருப்பிடத்திற்கு வெளியில் என்ன இருக்கிறது என்பதை அறிந்தோமில்லை. கவலையின்றி வாழ்தல் உத்தமமாயின், ஒருகால், இவ் வாழ்வு உத்தமமாயிருக்கலாம்; கஷ்டப்பட்ட வாழ்வை அனுபவித்துள்ள உமக்கு, இது அதிக இனிமையாயிருக்கலாம்; முதிர் வயதடைந்த உமக்கு, மிகவும் பொருந்தியதாயிருக்கலாம்; எங்களுக்கோ, அறிவின்றி அடைபட்டிருக்கும் ஓர் கூடுபோலிருக்கிறது. படுக்கையிற் படுத்தவண்ணம் தேச சஞ்சாரம் செய்வதாகும்; எல்லையை மீறி ஒரு அடியும் எடுத்து வைக்கத் தைரியமில்லாத ஓர் கடனாளியினுடைய சிறையைப்போலிருக்கிறது.

ஆ. உம்மைப்போல் முதுமையடைந்தபொழுது நாங்கள் எதைப்பற்றிப் பேசக்கூடும்? மாரி காலத்தில் மழையும் காற்றும் வெளியில் அடிக்கும்பொழுது, ஒன்றுமில்லா இக் குகைக்குள் இருந்து, கஷ்டத்துடன் செல்லும் காலத்தை, எவ்வாறு சந்தோஷித்துக் கழிப்போம்? நாங்கள் ஒன்றையும் பார்த்தோமில்லை, மிருகங்களைப்போல் இருக்கிறோம்; இரை தேடுவதில் குள்ள நரியைப்போல் புத்தி கூர்மையுள்ளவர்களாயிருக்கிறோம்; தின்னும் விஷயத்தில் கோணையைப்போல் குரூரமானவர்களாயிருக்கிறோம்; ஓடுவதைப் பின் தொடர்ந்து வேட்டையாடுவதே எங்கள் வீரமாகும்; கூட்டிலடைபட்ட பட்சியானது அக் கூட்டையே சங்கீத சாலையாக்குவதேபோல், இவ்விடத்திலடைபட்டவர்களாய், பாடியே எங்கள் காலத்தைக் கழிக்கிறோம்.

டா. என்ன அறியாது பேசுகிறீர்கள்! நாடுகளின் நடவடிக்கைகளை நீங்கள் அறிந்திருந்தால், அறிந்து அவைகளை அனு

பவித்திருந்தால், மறைத்து வைத்தல் எவ்வளவு கடின
மோ, விட் டொழிதல் அவ்வளவு கடினமான, அரண்
மனையின் சோர கீர்த்தியங்களையும், அவ்விடத்தில்
உயர்ந்த பதவியை யடைவதென்றால், உண்மையில் கீழே
விழவேண்டியதுதான் என்பதையும், எங்கே நழுவுகிறே
மோ என்னும் பயமே, வீழ்வதைப்போல அத்தனைக் கெடுதி
யான தென்பதையும், யுத்தத்தின் முயற்சியெல்லாம் புக
ழின்பொருட்டும் கீர்த்தியின்பொருட்டும் அபாயத்தை
நாடும் அல்லலாம் என்பதையும், அதை நாடுவதில் மரிக்க
வேண்டிவருகிறது என்பதையும், அப்படி மரித்தும், நற்
செய்கையென எவ்வளவு புகழப்படுகிறதோ சில வேளை
களில், அவ்வளவு தீய தொழிலென தூறப்படுகிறது சில
வேளைகளில், என்பதையும், அன்றியும், பன்முறை நன்மை
யைச் செய்ய துன்மையைச் செய்ததாகத் தூறப்படுவது
மன்றி, அப்படித் தூறுபவர்களுக்கு நாம் வணங்கியும் நடக்க
வேண்டி வருகிற தென்பதையும், இவைகளை யெல்லாம்
அறிந்து அனுபவித்தீர்க ளாயின், இவ்வாறு பேசமாட்டீர்
கள்! ஹா! குழந்தைகளே, இக் கதையை உலகத்தவர்
என்னிடமிருந்து கற்றறியலாம். பாண்டியர்களது படை
களால் என் உடல் எல்லாம் வடுப்பட் டிருக்கிறது. என்
கீர்த்தியானது முற்பட்டவர்களுக்கு ளெல்லாம் முந்தி
யுரைக்கப்பட்டதா யிருந்தது ஒருகால். சிம்ஹளநாதர்
என்மீது அதிக பிரியம் வைத்திருந்தார், வெற்றி வீரனைப்
பற்றி புகழ்ந்து பேசும்பொழுதெல்லாம், என்னுடைய பெயர்
வழங்கப்படாத கால மில்லை. அக் காலத்தில், பழங்கள்
நிரம்பி வணங்கிய கிளைகளையுடைய மரம்போல், செல்வமும்
புகழும் நிறைந்தவனா யிருந்தேன்; ஆயினும், ஓ ரிரவில்,
காற்று மழையடித்து—அல்லது அதைக் கொள்ளை என்று
வது கூறுங்கள் உங்க ளிச்சைப்படி—மரத்தின் பழுத்த பழங்
களெல்லாம் உதிர்வதன்றி, இலைகளும் உதிர்ந்து, கட்டை
மரமாய், காற்றை எதிர்த்து நிற்பதேபோல், எல்லாவற்

றையும் இழந்தவனுய் தன்னந் தனியே நின்றேன் நான்.

சி. அதிர்ஷ்டத்தின் சபலம் !

பா. நான் உங்களுக்குப் பன்முறை கூறியபடி, நான் இழைத்த தவறெல்லாம், சிம்ஹளநாதரிடம், இரண்டு பாதகர்கள் 'நான் பாண்டியன் பட்சம் பந்தப்பட்டதாகக் கோள் கூறிய தேயாம்; அவரும் என்னுடைய களங்கமற்ற சத்தியத்தை நம்பாது, அவர்களுடைய அசத்திய மொழியை நம்பினுர்; ஆகவே நான் நாட்டை விட்டுத் துரத்தப்பட்டேன்; பிறகு இந்த இருபது வருடங்களாக இக் குகையும் இக் காடுமே நான் சஞ்சரிக்கும் உலகமாயது எனக்கு. இவ்விடத்தில் என் இச்சைப்படி சுதந்தரமாய் வாழ்ந்து வந்தேன்; எனது முந்திய காலத்தில் ஈசனுக்குச் செலுத்திய ஸ்தோத்திரங் களைவிட, இவ்விடம் அதிகமாய்ச் செலுத்தியுள்ளேன்— அதிருக்கட்டும், போவீர் மலைமீது ! வேடர்கள் சம்பா ஷணை இதல்ல வேட்டையில் முதலில் மானை எய்பவனே, விருந்தில், முதலாளியாக வீற்றிருப்பான்; அவனுக்கு மற் றவர்களிருவரும் பரிசாரகம் செய்யவேண்டும். பெரிய சமஸ்தானங்களி லிருப்பவர்கள் அஞ்சுவதுபோல், விஷத் தைக் குறித்து நாம் அஞ்சவேண்டிய தில்லை. தாழ்வரை களில் உங்களை நான் சந்திக்கிறேன்.

[கிரிதரனும் ஆர்வராகனும் போகி றூர்கள்.]

சுபாவத்தின் குணத்தை மறைத்துவைத்தல் எவ்வளவு கடினமாயிருக்கிறது ! அரசனுடைய குமாரர்கள் என் பதை இச் சிறுவர்கள் கொஞ்சமேனும் அறிந்திலர்; சிம்ஹள நாதனும் இவர்கள் உயிரோடிருப்பதாகக் கனவிலும் நினைக் கின்றுர் இல்லை. இவர்களோ, என் மைந்தர்களெனத் தம்மை மதிக்கின்றனர். அவர்கள் நுழையுங்கால், குனிந்து செல் லும்படி, அவ்வளவு தாழ்மையான இக் குகையில், ஏழ்மை யாக அவர்கள் வளர்க்கப்பட்டு வந்தபோதிலும், அவர்க ளுடைய ஆலோசனைகள் அரண்மனைகளின் கூரைகளை

அளாவி நிற்கின்றன; அவர்களுடைய சுபாவமானது சொற்ப விஷயங்களிலும் அற்ப விஷயங்களிலும், மற்றவர்களுடைய நடத்தையைப்போல் அல்லாமல், அரசர்க் குரிய குணத்தைக் காட்டும்படி உந்துகிறது. அரசராகிய அவன் தந்தை, கிரிரதன் எனப் பெயர் வைத்த, சிம்ஹளநாதருக்குப் பின் இச் சிங்களத்தை ஆளவேண்டிய, அரசிளங் குமரனாகிய, இந்தப் பாலதரன்—ஆஹா!—நான் என் முக்காலியின் மீ துட்கார்ந்து, எனது வீரச் செய்கைகளையெல்லாம் எடுத் துரைக்குங்கால், அவனது வீரத்தனமானது வெளி வந்து எனது கதையைக் கிட்டுகிறது. இவ்வாறு எனது வைரி கீழே விழுந்தான், இவ்விதம் என் காலை அவன் கழுத்தின் மீது வைத்தேன், என்று நான் கூறுங்கால், உடனே, க்ஷத்திரிய ரக்தமானது அவனது முகத்தில் பரவ, அவன் வியர்த்து, இளமையான தன் கைகளை நெறித்து, எனது வார்த்தைகளை நடித்துக்காட்டுவதேபோல், நிற்கிறான். ஒரு கால் ஆர்வரராகனயிருந்த, அவனது இளைய சகோதரனை கடுவேலன், அதே மாதிரியான உருவத்தை வஹித்தவனாய், எனது வார்த்தைகளுக்கு உயிரைக் கொடுப்பதுபோல் நின்று, அவன் உள்ளத்தி லிருப்பதை வெளிக்கு அதிகமாய்க் காட்டுகிறான். அதோ கேள்! காட்டு மிருகங்கள் கலைக்கப்பட்டன!—ஹா! சிம்ஹளநாதரே, ஈசன் அறிவார், என் மனமுறா அறியும், நீர் என்னை அநியாயமாய் நாட்டைவிட்டுத் துரத்திய விஷயம். அதன்மீது, இரண்டும் மூன்றும் வயதுடைக் குழவிகளாயிருந்த பொழுது, இவர்களைத் திருடினேன். என்னுடைய நிலங்களை எப்படி என்னிடமிருந்து நீர் பிடுங்கிக்கொண்டீரோ, அம்மாதிரி உமது குழந்தைகளைத் திருடி, உமக்குப் பிற்காலம் உமது சந்ததி அளாதிருக்கும்படி செய்ய எண்ணினேன்.—மயூரவல்லி, நீ அவர்களுக்குப் பா லூட்டும் தாயாயிருந்தாய்; அவர்கள் உன்னைத் தங்கள் தாயாகவே எண்ணினார்கள்; இப்பொழுதும் ஒவ்வொரு தினமும் உனது சமாதிக்குப் பூசனை இயற்றுகிறார்கள்; மார்க்கன் என்னும்

பெயர்பூண்ட, பாலராயனுகிய என்னை, தங்களைப் பெற்ற தந்தையாக எண்ணுகிறார்கள்—வேட்டை கிளம்பிவிட்டது!
[போகிறான்.]

காட்சி முடிகிறது.

---

## நான்காம் காட்சி.

இடம்—காங்கேயன் துறைக் கருகில்.

விசாகனும். ஹேமாங்கியும் வருகிறார்கள்.

ஹே. நாம் குதிரைகளை விட் டிறிந்தபொழுது, போகவேண்டிய இடம் அருகி லிருப்பதாகப் புகன்றாயே என்னிடம். நான் முன்னால் வரவேண்டுமென்று எனக் கிப்பொழு திருந்தது போல், என் தாயாரும் ஏங்கி யிருக்கமாட்டார்கள் எப் பொழுதும்— விசாகா!—ஏ! மனுஷா! எங்கே என் பிராண நாதர்? உன்னை இவ்வாறு விழிக்கச் செய்யும்படி, உன் மனத் தில் என்ன இருக்கிறது? அந்தப் பெருமூச்சு, உன துள்ளம் வெடித்து வருவதேபோல், ஏன் வெளியில் வருகிறது? உன்னைப்போல் ஒருவன் சித்திரிக்கப்பட் டிருந்தால், தன் னையும் அறியாதபடி தயங்கி நிற்பவ னுருவென மதிக்கப் படுமே. உன் முறட்டுத் தோற்றமானது என் சாந்தமாம் அறிவைச் சாகடிக்கு முன், இன்னும் குறைந்த பய முடைப் பாவனையில் உன்னை நிறுத்துவையாக! சமாசாரம் என்ன என்று சொல்? கருணை யில்லாப் பார்வையுடன் அக் கடி தத்தை எனக்கு ஏன் நீட்டுகிறாய்? சந்தோஷ சமாசார மாயின், முக மலர்ச்சி முன்னுக் கிருக்கவேண்டும்; துக்க கரமான விஷய மாயின், உனது முகத்தை இப்பொழு திருப் பதுபோல் வைததிருக்க வேண்டியதுதான். என் பிராண நாதர் கையெழுத்து! அப் பாழும் பாண்டிய நாடு அவரை ஏதோ கபடத்திற் காளாக்கி யிருக்கவேண்டும். அவ ரேதோ கஷ்ட திசையி லிருக்கவேண்டும். நான் இதைப்

படித்தால் என் ஆவியைப் பறித்திடும் ஒருவேளை, உன் பேச்சாவது அதன் கொடுமையை மழுங்கிடச் செய்யலாம் சிறிது; ஆகவே பேசடா, அப்பா.

வி. தயை செய்து படியும் தாங்கள். பிறகு என்னைப்போன்ற துரதிர்ஷ்டம் பிடித்த பாபி புவியி லில்லையென்று காண்பீர்.

ஹே. [படிக்கிறாள்.] "உன் தலைவி, விசாகா, என் படுக்கையில் தாசியானாள். அதன் அத்தாட்சிகளெல்லாம் என் ஹிருதயத்தில் ரக்தம் பெருகச் சிறிக் கிடக்கின்றன. அற்ப சந்தர்ப்பங்களைக்கொண்டு நான் அவ்வாறு சொல்ல வில்லை. நான் அப்படியும் பழி வாங்குவேனென்று எவ்வளவு நிச்சயமா யிருக்கிறேனோ, எனது துயரம் எப்படி அசைக்க முடியாததோ, அவ்வளவு உறுதியான ருசுவைக்கொண்டே, நான் கூறுகிறேன். பழி வாங்கும் பாகம், அப்பா விசாகா, எனக்காக நீ செய்யவேண்டும். அவளது துரோஹத்தினால் உனது விஸ்வாசமும் மாசடையா திருந்தால், உன்னுடைய கைகளே அவளது உயிரைப் போக்கவேண்டும். காங்கேயன் துறையில் உனக்குச் சமயம் வாய்க்கச் செய்கிறேன். அதன் பொருட்டு அவளுக்கு நான் கடிதம் அனுப்பி யிருக்கிறேன். அவ்விடம் அவளைக் கொன்று, அவ்வாறு செய்ததாக எனக்கு ருசுப்படுத்தப் பயந்தையோ, அவள் துரோஹத்திற்கு நீயும் துணை செய்தவனாவாய், நீயும் எனக்கு அவளைப் போன்ற துரோஹியே"—

வி. ஏன்? என் கத்தியை நான் உருவுவானேன்? அந் கடிதமே அவள் கழுத்தினை அறுத்துவிட்டதே முன்னதாகவே!— அவதூறே அவள் கழுத்தை வெட்டியது. அதன் நுனி கத்தியினும் கூர்மையானதே. அதன் நா சிந்து நதியின் சர்ப்பங்களையெல்லாம்விட கடு விஷ முடைத்தே! அதி வேகத்துடன் பறக்கும் காற்றின்மீ தேறி, அதன் சுவாசமானது அஷ்ட திக்குகளிலும் பரவி, அங்குள்ள அரசர்கள், அரசிகள், பெரியோர்கள், கன்னியர், தாயார்கள், எல்

லோரையும் பொய் யாக்குகிறது;—அன்றியும் சமாதியில் இரகசியங்களுக்குள்ளும், இந்தப் பாம் பணைய பாழும் அ துாறு பிரவேசிக்கிறது.—என்ன சமாசாரம், அம்மணி ?

ஹே. அவருடைய படுக்கைக்குத் துரோஹமா? துரோஹஞ் செ வதென்றால் என்ன செய்வது ? அங்கு கண் ணுறங்காது காவ லிருந்து, எந் நேரமும் அவரைப்பற்றியே எண்ண மிடுவதா ? மணிக்கு மணி அழுதுகொண் டிருப்பதா இயற்கையால் உறக்கம் வந்திடின், அவரைப்பற்றி கனவு கண்டு, பயந்து விழித்து, தேம்பி அழுது, தூக்கம் கலைவதா அதுதானோ அவர் படுக்கைக்குத் துரோஹியா யிருப்பது அதுவா ?

வி. ஐயோ ! என் அம்மணி !

ஹே. நான் துரோஹியா ? ஈயாகாமா ! உனது மனோசாட்சிே எனக்கு அத்தாட்சி யாகட்டும். நீ அவரைத் தூர்த்தனெ று தூறினாய் ; அப்பொழுது காதகனைப்போல் கண்பட டாய். இப்பொழுது யோசிக்குமிடத்து, உனது முக நலத்தைக் காட்டியதாக நம்பவேண்டி யிருக்கிறது. பாண்டு நாட்டு மை பூசிய பரத்தை யெவளோ, அவரை மோசஞ் செய்திருக்கவேண்டும். வழக்கம் கடந்த வஸ்திரம்போல ஏழ்மையான நான் பழைமை யாய்விட்டேன். கூளத்தில் சேர்த்துவிடத் தகாதபடி நான் கொஞ்சம் செல்வாக் குட மைபற்றி, என்னைக் கிழித் தெறியவேண்டும் !—என்னை துண்ட மாக்கவேண்டும் ! ஆ ! மனிதர்களின் பிரமாணங் களே மடந்தையரை வஞ்சிப்பவைகள். அந்தோ ! கண வனே ! மேலுக்கு நன்மையாய்க் காட்டுவதெல்லாம், கபட தரிக்கும் வேஷமென, உமது மாறுபாட்டால் மதிக்கப்படும் வளரு மிடத்திற் பிறவாத, வஞ்சியரை வஞ்சிக்கும் வெளித் தோற்றமென எண்ணப்படும் !

வி. என் அம்மணி, என் வார்த்தையைக் கொஞ்சம் கேட்க வேண்டும்.

வஞ்சகர்கள் வார்த்தையினால் வாய்மையாளரும் பொய்யரெனப் புகலப்படுகிறார்கள். பாசாங்கு செய்பவர்கள் கண்ணீரினால், உண்மையாய்த் துக்கப்படுவோரும் சந்தேகத்திற் குள்ளாகிறார்கள்; உண்மையில் துரதிர்ஷடம் பிடித்தவர்களைப் பார்க்குமிடத்தும், இரக்க மில்லாதவர்களா யாக்குகிறது மனிதர்களை.—ஆகவே பிராணநாதா! உமது செய்கையானது உத்தமர்களையும், ஒப்பிடா வண்ணம் செய்கிறது. உமது பெரும் தவறானது, பெருமையையும் நற்குணத்தையும், பொய்மையும் புன்மையு மாக்குகிறது.—வாடா, அப்பா, நீயாவது உண்மையா யிரு. உனது எஜமானன் உத்திரவுபடி செய். அவரை நீ காணும்பொழுது அவரது கோரிக்கைபடி கீழ்ப்படிந்து நான் நடந்ததாக சாட்சி கூறுவாய். இதோ பார்! நானுகக் கத்தியை உருவுகிறேன். வாங்கிக்கொள் இதை, என் காதல் குடிகொண்டிருக்கும் கிருஹத்தை.—என் னிதயத்தை—குறிப்பிட்டு வெட்டு. பயப்படாதே; அவ்விடம் துய ரன்றி வேறொன் றில்லை. எவர் அதன் செல்வமா யிருந்தாரோ, அந்த உனது எஜமானன் அங் கில்லை, இப்பொழுது. அவர் கட்டளையை நிறைவேற்று. வெட்டு—வேறு சிறந்த காரணத்தில் நீ வீரனு யிருக்கலாம், இப்பொழுது பார்த்தால் பயங் காளிபோல் தோன்றுகிறாயே!

வி. போ தூர! பாழுங் கருவியே! என் கரத்தைப் பா ழாக்க முடியா தன்றல்.

ஹே. ஏன்? நான் எப்படியும் இறக்கவேண்டும். உன் கரத்தால் நான் மாளாவிட்டால், உன் எஜமானனுக்கு உண்மையாம் ஆளாகமாட்டாய் நீ. தற்கொலை புரியலாகாதென்னும், சர்வேஸ்வரனுடைய ஆக்ஞையானது, பயப்படச் செய்கிறது பல மிலா என் கரத்தை. இதோ என் னிதயம்! அதன்முன் ஏதோ இருக்கிறது.—பொறு பொறு! நாங்கள் ஒன்றும் எதிர்க்கமாட்டோம். உரையைப்போல் இணங்கி யிருப்போம். என்ன இருக்கிற திங்கே? கேடு சூழாக் கேசரி

நாதருடைய, அபத்தமாய் மாறிய, கடிதங்க ளெல்லவா எனது நம்பிக்கையை அழிப்பவைகளே, அகன்று போங்கள்! என் னிதயத்தைத் தாங்க ஏலாது உங்களால் இனி.—ஆ! பிராணநாதா! இவ்வாறுதான் புத்தி யற்ற பேதைகள் வஞ்சகர்கள் வாக்கினுல் மோசம் போகிறுர்கள். துரோஹஞ் செய்யப்பட்டவர்கள் அத் துரோஹத்தின் பலனை அதிகமாய் அனுபவித்தபோதிலும், துரோஹஞ் செய்பவனும் அதிக துக்ககரமான ஸ்திதியிலேயே நிற்கிறுன். ஆகவே, பிராணநாதா, என் தந்தையாகிய அரசரது ஆக்ஞைக்குக் கீழ்ப்படியாது நடந்து, என்னை நாடி வந்த எனக்குச சமானமான அரச குமாரர்களையெல்லாம் வெறுத்து நா னிகழ்ந்ததுபோல், மற்றவர்கள் நடப்பது சாதாரண மல்லவென்றும, அது மிகவும் அபூர்வ மென்பதையும், இன்று காண்பீர் நீர். நான் துக்கப்படுவதெல்லாம், இப்பொழுது தாம் இன் புறும் தோகையானவள், உம தாசையை மழுங்கச் செய்தவுடன், உமது மனமானது என் நினைவால், எவ்வளவு துயரப்படும் என எண்ணியே.—அப்பா! சீக்கிரம் ஆடானது கசாப்புக்காரனை வேண்டுகிறது வெட்டும்படி. எங்கே உன் கத்தி? உன் எஜமானன் வேலையைச் செய்வதில் மிகவும் மெதுவாய் இருக்கிறுய், அதுவும் நானே வேண்டும்பொழுது.

வி. தாயான என் அம்மணி, இவ் வேலையைச் செய்திடக் கடுங் கட்டளையைப் பெற்ற பின், அரை நொடியும் கண் ணுறங்கினவ னல்ல நான்.

ஹே. ஆனுல் அதைச் செய்து முடித்து, உறங்கப் போ.

வி. முதலில் என் கண்க ளிரண்டும் முழுப் பொட்டையாய்ப் போகுமாக!

ஹே. ஆனுல் ஏன் அதை எற்றுக்கொண்டாய்? போக்கைச் சொல்லி அத்தனைக் காதம் என் என்னை இழுத்து வந்தாய் இவ்விடத்திற்கு? எனக்கும் வேலை வைத்தாய்? உனக்கும்

வேலை வைத்தாய்? நம்முடைய குதிரைகளுக்கும் வேலை வைத்தாய்? நான் காணுமையால் அரண்மனை கோலாகலப் படு மல்லவா? நான் என்னவோ, அங்கு மறுபடியும் போகப் போகிற தில்லை. உனக் கென்னவோ தக்க சமயம் வாய்த் திருக்கிறது. இவ்வளவெல்லாம் ஏன் செய்தாய்? வெள் ளாடு எதிரில் நிற்க, வெட்டுக் கத்தியைக் கையிற் கொண்ட பின், வேண்டாமென்று திரும்பலா?

வி. கடுமையாம் அத் தொழிலை எப்படியாவது செய்யாம லிருக் கும்பொருட்டு, காலத்தைக் கழிப்பதற்கே யாம். இதற் குள்ளாக நான் ஒரு மார்க்கத்தை யோசித்திருக்கிறேன். என் அம்மணி, பொறுமையுடன் என்னைச் சற்றே கேட்க வேண்டும்.

ஹே. உனது நாவானது ஓயுமளவும் பேசு. சொல். வேசியென வே நான் தூஷிக்கப்பட்டேன். அக் காதகத்தினால் புண்படுத் தப்பட்ட என் காதுகள், வேறெந்த நோயையும் கவனி யாது; ஆகவே நீ எதை வேண்டுமென்றாலும் சொல்.

வி. ஆனால், அம்மணி, தாங்கள் திரும்பிப்போகமாட்டீர் என்று எண்ணினேன்.

ஹே. ஆம் எண்ணத்தில்; அதற்காகவே என்னைக் கொல்ல இங்கு கொண்டுவந்தாய்.

வி. அப்படி யல்ல, அம்மணி. என்னுடைய எண்ணம் யோக்கிய மானதாயின், அதற்குத் தக்க யுக்தியையும் அது கொடுத்து, அதை நிறைவேறச் செய்யும் என எண்ணினேன். என் எஜமானர் எதோ மோசந்தான் போயிருக்கவேண்டும். பாதகம் நன்றாய்ப் பழகிய பாபி எவனோ உங்க ளிருவருக் கும் இப்பாழுங் கேட்டினைச் சூழ்த்தி யிருக்கவேண்டும்.

ஹே. பாண்டியநாட்டுப் பரத்தை எவளோ ஒருத்தி.

வி. என் உயிர்மீதாணைப்படி அப்படி யிராது, அம்மணி. நீர் மடிந்ததாகமாத்திரம் செய்தி அனுப்புகிறேன். அதற்கு அத்தாட்சியாக எதாவது ரக்தக் குறி அனுப்புகிறேன்.

ஏனெனில் அவ்வாறு நான் செய்யவேண்டுமென உத்திரவா யிருக்கிறது. அரண்மனையில் உம்மைக் காணுது தேடுவார் கள்; ஆகவே, அதனை அது ஊர்ஜிதப்படுத்தும்.

ஹே. ஏனடா அப்பா, அதுவரையில் நான் என்ன செய்வது? எங்கே யிருப்பது? எப்படி உயிர் தரிப்பது? என் கணவ னுக்கு நான் இறந்தவ ளாயின், இவ்வுயிரில் எனக் கென்ன சுக முண்டு?

வி. நீர் அரண்மனைக்கு மறுபடியும் போனல்,—

ஹே. அரண்மனையு மில்லை, தந்தையு மில்லை இனிமேல். முற்றுகை போல் முற்றிலும் என்னைத் தன் காதல் என்னும் பாதகத் தால் பயப்படுத்தும் கமேளபா னிருக்கிருனே, அந்த உயர் குலத் துதித்த கொடிய மட்டி மடையன், அவனது அவலமும் வேண்டா மினி!

வி. அரண்மனையி லில்லாவிடின், சிங்களத்தில் நீர் வசிக்கலாகாது.

ஹே. ஆயின் மற் றெங்கே? கதிரவன் சிம்ஹள மொன்றிற்குன் காய்கிருனே? இரவு பகலெல்லாம் இந்தச் சிம்ஹளத் தன்றி, வே றிடத்தி லில்லையோ? இப் பூமண்டலத்தில் சிம்ஹள மானது எவ்வளவு அற்ப பாகமா யிருக்கிறது! இருந்தும் இல்லாததுபோல் காண்கிறது; ஒரு பெருந் தடாகத்தில் சிறு தாமரை மொட்டைப்போல் காண்கிறது. சிம்ஹளத்திற்கு வெளியிலும் ஜீவகோடிகள் உண்டென எண்ணுவாய்.

வி. மற்ற இடங்களைத் தாம் கருதுவது என் மனத்திற்கு சந்தோ ஷத்தைத் தருகிறது. நாளைத் தினம் பாண்டிய நாட்டு ராயபாரி லோகசேனர், காங்கேயன் துறைக்கு வருகிருர். உமது தற்கால துர் அதிர்ஷ்டத்திற் கேற்றபடி, உமது மனத் தை ஒருவாறு நிறுத்துவீராயின், உம்மை மற்றவர்களிட மிருந்து மறைத்து, மற்றவர்களை நீர் காணும்படியான மார்க் கத்திற் செல்லலாம்; சுயரூபத்துடன் செல்வது உமக்கு அபா யத்தை விளைவிக்கும்; ஆகவே நீர் உரு மாறிப் போகவேண் டும். ஒருவேளை பாசதாமருடைய இருப்பிடத் தருகிலேயே

போகலாம். அவரை நேரிற் காணாவிட்டாலும் அவரது நடவடிக்கைகளையெல்லாம், உள்ளபடி, நீர் அடிக்கடி, காதாறக் கேட்டறியும்படி, அத்தனை அருகாமையில் இருக்கலாம்.

ஸிஹ. ஆ! அதற்கு மார்க்கத்தைச்சொல். என் மானத்திற்கு அது அபாயத்தைத் தருவதாயினும், என் மரணத்திற்கே ஏதுவாயினும், அதை நான் முயல்வேன்.

வி. ஆனால் கேளும். இதுதான் சூட்சுமம். நீர் ஸ்திரீ என்பதை மறந்து விடவேண்டும்; மற்றவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடத்தலை விட்டு, கட்டளையிடுவதை மேற்கொள்ள வேண்டும்; உண்மையை உரைக்குமிடத்து, அக் குணங்களை அழகிய ஸ்திரீ உருவம் எடுத்து வந்தன எனக் கூறும்படியான, மடம், அச்சம், என்னும் அரிவையர்க்கு இன்றியமையாக் குணங்களை மாற்றி, ஓர் வாலிபனைப்போல் தைரியத்தை வஹிக்கவேண்டும். வாதாடுவதற்குச் சித்தமாயிருக்கவேண்டும், பதில் படக் கென்றுரைக்கவேண்டும், கோட்டானைப்போல் கோபங் கொள்வதற்கும் சச்சரவிடுவதற்கும் சித்தமாயிருக்கவேண்டும்; அன்றியும்—அந்தோ! நான் என்ன குரூரனாயிருக்கிறேன்—ஆயினும் வேறு மார்க்கமில்லை.—நாரியர்க்கு முக்கியமான குணமாம் நாணம் என்பதை, பகலவனும் பார்க்கும்படி வெளியிற் காட்டலாகாது, அல்லாமலும் உமது அழகிய ஆடை ஆபரணங்களையெல்லாம் முற்றிலும் மறந்து, சாதாரண உடை தரிக்கவேண்டும்.

ஸிஹ. சுருக்கிச் சொல், சீக்கிரம், உனது எண்ணத்திற்கு முடிவு தெரிகிறது. இதற்குள்ளாகவே நான் ஆடவனாய்விட்டேன்.

வி. முதலில் ஆடவனைப்போல் வேஷம் தரியும். இதை முன்பே யோசித்து அதற்குத் தக்கபடியான சட்டை, அங்கவஸ்திரம், தலை குட்டை முதலியனவெல்லாம் கொண்டுவந்திருக்கிறேன்—இதோ இந்தப் பையில் இருக்கின்றன. உமது வெளி வேஷத்தை மாற்ற உபயோகப்படும் இவைகளின் உதவியைக்கொண்டு, இந்த வயதுடைய வாலிபனுடைய பாவனைகளை உம்மால் எவ்வளவு வஹிக்க முடியுமோ, அவ்

வளாவு வஹித்து, உத்தமனை லோகசேனர் எதிரில் போய், உமக்கு நன்றாய்ப் பாடத் தெரியும் என்கிற விஷயத்தை அறிவித்து— சங்கீத ஞானம் அவருக்குச் சற்றேனு மிருக்குமாயின் எப்படியும் அவர் அதைக் கண்டு பிடிப்பார்.—அவரது பணிவிடை ஆளாக வேண்டுவீராயின், அவர் அப்படியே சந்தோஷமாய் ஒப்புக்கொள்வார் என்பதற்குச் சந்தேகமில்லை. அவரோ மிகுந்த உத்தம குணமுடையவர்; அன்றியும் அதைவிட அதிகமாய் பரிசுத்தமானவர். வெளி தேசத்திருக்குங்கால், உமக்கு வேண்டிய பொருளுதவி செய்யச் செல்வம் என்னிடத் துண்டு; உமக்கு எப்பொழுது வேண்டினும் உதவச் சித்தமா யிருக்கிறேன்.

ஹே. என் துயர்க்கு ஈசன் அருளிய ஆறுதல் நீயே. சரி, நீ விடை பெற்றுக்கொள், சீக்கிரம். இன்னும் யோசிக்க வேண்டிய விஷயங்கள் அநேகம் இருக்கின்றன, நற்சமயம் வாய்க்கும்பொழுது அவைகளை யெல்லாம் சரிப்படுத்துவோம். இந்த முயற்சியில் ஓர் வீரனைப்போல் துணிந்து, அதனால் வருவதையெல்லாம் ஒரு அரச குமாரனுடைய தைரியத்துடன் வஹிக்கிறேன். நீ சீக்கிரம் போ.

வி. நல்லது, அம்மணி. நான் சீக்கிரம் விடை பெறவேண்டும். இல்லாவிடின் என்னையும் காணாவிட்டால், அரண்மனையினின்றும் நீர் வந்துவிட்டதற்கு, என்மீது சந்தேகங் கொள்வார்கள். என் அருங் குணம் வாய்ந்த அம்மணி, இதோ ஒரு பெட்டியிருக்கிறது. இதை எனக்கு மஹாராணி கொடுத்தார்கள். அதி லிருப்பது அதிக விலை யுயர்ந்த பொருள். கடல்மீது செல்லுங்கால் அசௌக்கியமாயினும், வையகத்திருக்குங்கால் வயிற்று நோய் வந் துற்றாலும், இதில் மாத்திரை அளவு எல்லா வியாதியையும் மாற்றிவிடும். மறைவிடம் போய் மானிட னுடையைத் தரியும். எல்லாம் வல்ல கடவுள் உமக்கு நல் வழி காட்டுவாராக!

ஹே. அங்ஙனமே யாகுக! உனக்கு வந்தனம் செய்கிறேன்.

[போகிறார்கள்.]

**காட்சி முடிகிறது.**

## ஐந்தாம் காட்சி.

இடம்—சிம்ஹளநாதனுடைய அரண்மனையி லோர் அறை.

சிம்ஹளநாதன். அரசி, கபோபாலர். லோகசேனன்.

மந்திரிகள் வருகிறார்கள்.

சி அதுவரையில்தான்; அப்புறம் நீர் உத்திரவு பெற்றுக் கொள்ளலாம்.

லோ. மிகவும் சந்தோஷம், மஹாராஜா. எமது சக்கிரவர்த்தி எழுதிவிட்டார். நா னிவ்விடமிருந்து புறப்படவேண்டும். எனது எஜமானருடைய எதிரியாக உம்மை நான் தெரிவிக்கவேண்டி யிருக்கிறதே யென. உண்மையில் எனக்கு மிகவும் வருத்தமா யிருக்கிறது.

சி. ஐயா, நமது பிரஜைகள் அவரது ஆளுகைக்கு உடன்பட மாட்டார்கள். நாம் அவர்களைப் பார்க்கிலும் குறைந்த ராஜத்துவம் காண்பித்தல், நமது அரசுரிமைக்கு அழகாய்த் தோற்றாது.

லோ. ஆகவே, அரசே, கன்யாகுமரிவரையில் கரை மார்க்கமாய்க் காவலுடன் செல்ல, எனக்கு உத்திர வளிக்கவேண்டும்.—அரசியே, தங்களுக்குச் சகல சந்தோஷ முண்டாகுமாக!—ஐயா, உமக்கும்!

சி. மந்திரிகளே, அந்த வேலை உமதாக நியமித்தேன். அவர் கௌரவத்திற் குரியதை அணுவளவும் குறைக்கவேண்டாம். சரி, போய்வாரும் புண்ய சீலனும் லோகசேனரே.

லோ. என் பிரபுவே, உமது கரம்.

க. சிநேகமாய்க் கொள்ளும் அதை; ஆயினும் இதுமுதல் அதனை உமது வைரியாக வைத்திருப்பேன்.

லோ. ஐயா, ஜெயிப்பவன் இன்னெனென இனி நடக்கும் யுத்தமே தீர்மானிக்கவேண்டும். நான் வருகிறேன்.

சி. மந்திரிகளே, லோகசேனர் சேதுவினைக் கடக்கும் [*]பரியந்தம் கைவிடாது காத்துச் செல்லுங்கள். சுபமுண்டாகுக!

[மந்திரிகளும், லோகசேனரும் போகிறார்கள்.]

அ. களித்த முகத்துடன் போகிறார் அவர்; அதற்குக் காரணம் கொடுத்தது நமக்குப் பெருமை யாகும்.

க. அது மிகவும் நலமே. வெற்றி வீரர்களான சிங்களத்தாருடைய கோரிக்கைகளும் அதில் கலந் திருக்கிறது.

சி. லோகசேனன், சக்கிரவர்த்திக்கு இங்கே எப்படி இருக்கிறதென முன்பே எழுதி யிருக்கிறான். ஆகவே, நமது ரதங்களையும் குதிரை வீரர்களையும் ஆயத்தப்படுத்தவேண்டியது நமக்குத் தகுதி யாம். காலநாட்டில் முன்பே அமைக்கப்பட்டுள்ள அவனுடைய சைனியங்களை யெல்லாம் ஒருங்கு திரட்டி, சிமஹளத்தின்மீது படையெடுத்து வருவானென

அ. இது தூங்குகிற வேலை யன்று; துரிதமாய் முழுப் பலத்துடன் பார்க்கவேண்டிய விஷயம்.

சி. இப்படி முடியுமென நாம் முன்பே எண்ணி யிருந்தது, நாம் முற்படச் சித்தமா யிருக்கச் செய்தது. அதிருக்கட்டும்.—பிரிய சகி, நமது பெண் எங்கே? பாண்டியநாட்டான் எதிரிலும் வர இல்லை, தினத்திற் குரிய நமது பணிவிடையையும் நமக்குச் செய்ய வில்லை, நமது பார்வைக்கு ஏதோ வைரம் நிரம்பியவள்போல் காணப்படுகிறாளே யொழிய, கீழ்ப்படிந்து நடப்பவளாகக் காணோம். அதை நாம் கவனித் திருக்கிறோம்.—கூப்பிடு அவளை நமக் கெதிராக! நாம் அதிகமாய்ப் பொறுத்துக்கொண் டிருந்துவிட்டோம், இலேசாக!

[ஒரு சேவகன் போகிறான்.]

அ. மஹாராஜா, பாசதாமன் ஊரைவிட்டுத் துரத்தப்பட்ட பின், அதிகமாய் வெளியில் வராமல் வாழ்ந்து வருகிறாள்.

அரசே, அதற்குப் பரிஹாரம் காலக் கழிவே யாம். தங்களை நான் வேண்டிக்கொள்கிறேன், கடுமையான வார்த்தைகளை அவளிடம் கூறுதீர். கொடுஞ் சொற்களால் குழையும் நெஞ்ச முடைய பெண் ணவள்; சொற்களே அவளுக்குச் சூடுக ளாகும், சூடுகளே மரண மாம்.

சேவகன் திரும்பி வருகிறான்.

சி. எங்கே அவள்? அவள் மரியாதைக் குறைவிற்கு என்ன பதில் கூறப்போகிறாள்?

சே. சித்தம், மஹாராஜா! அவர்களுடைய அறைகளெல்லாம் பூட்டப்பட் டிருக்கின்றன. நாங்கள் எவ்வளவுதான் உரத்த சப்தத்துடன் தட்டிப் பார்த்தாலும் பதில் ஒன்றையும் காணோம்.

அ. மஹாராஜா, நான் கடைசி முறை பார்க்கப் போனபோது தான் மறைவா யிருப்பதைப்பற்றி மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டாள். ஆகவே தன் துயரத்தால், தான் தினந் தோறும் தம்மைக் கண்டு கடமைப்படி செய்துவரும் வழி பாடு செய்யக் கூடாமையா யிருக்கிறதென்று, தமக்குத் தெரியப்படுத்தும்படி சொன்னாள் என்னை. நமது சபையில் நடந்த பெருங் காரியம், அதை என் கவனத்தி லில்லாத படி மறக்கச் செய்தது.

சி. அவள் கதவுகள் பூட்டப்பட் டிருக்கின்றனவா? கொஞ்சம் காலமாக யாரும் பார்க்க வில்லை? நான் அஞ்சுவது பொய் யா யிருக்கும்படி ஜகதீசன் கிருபை செய்வாராக!

[போகிறான்.]

அ. தம்பி, மஹாராஜாவைப் பின் தொடர்ந்து போ.

க. அவளுடைய ஆள் விசாகனை, அந்தப் பழைய வேலைக்காரனை, நான் இந்த இரண்டு நாளாகப் பார்க்க வில்லை.

அ. போ, போய்த் தேடிப்பார். [கனேபரன் போகிறான்.]

விசாகா, பாசதாமன் பட்சமே நிற்கும் பேதையே'—அவ

னிடம் எனது மருந் தொன் றிருக்கிறது. அதைப் புசித்தது
தான் அவன் காணாமைக்குக் காரணமா யிருக்கவேண்டு
மெனக் கோருகிறேன். அவன் அதை அருமையாம் மருந்
தென எண்ணுகிறான். ஆயினும்—அவளைப்பற்றி—அவள் எங்
கே போயிருப்பாள்? ஒருவேளை ஆறாத் துயரத்திற்கு ஆளா
யினளோ? அல்லது விரகதாபத்தைச் சகியாது பாசதாமன்
பக்கலில் பறந் தோடி னளோ? போய்விட்டாள்—மடிந்தோ
—அழிந்தோ! எப்படி யிருந்தபோதிலும் என் முடிவிற்கு
இரண்டும் பயன்படும் அவள் தொலைந்தால், சிங்களத் தரசு
நா னிடு பிச்சை யாம்.

மறுபடியும் க்ளோபரன் வருகிறான்.

என்ன, தம்பி? என்ன சமாசாரம்?

க. அவள் ஓடிவிட்டாள் என்பதற்குச் சந்தேக மில்லை. உள்ளே
போய் மஹாராஜாவுக்குச் சமாதானம் சொல்லும். அவர்
கோபாவேசங் கொண்டிருக்கிறார்; அருகிற் போகவும்
அனைவரும் அஞ்சுகின்றனர்.

அ. மிகவும் நலமே. இன்றிரவு அவர் படுந் துயரமானது மறு
நாள் உதயத்தை அவர் காணாதிருக்கும்படி செய்யுமாக!
[போகிறான்.]

க. அவள்மீ தெனக்கு ஆசையு மிருக்கிறது, வெறுப்பு மிருக்
கிறது; அவள் அழகு வாய்ந்த அரச குமரியே. மற்றெல்லா
ஸ்திரீகளையும்விட மிகுந்த சௌந்தர்யங்க ளெல்லாம் இவ்
விடம் குடிகொண் டிருக்கின்றன. ஒவ்வொரு ஸ்திரீயினு
டைய உத்தமத்தை ஒருங்கு திரட்டி இவள் உருவாக்க,
அவைகளெல்லாம் ஒருங்கு சேர்ந்தபடியால், அவர்கள் எல்
லோரையும்விட, அதிகமாய்ப் பிரகாசிக்கிறாள். ஆகவே
அவள்மீது ஆசைப்படுகிறேன் நான். ஆயினும் என்னை
வெறுத்து, அந்த இழிவாம் பாசதாமன்மீது இச்சைப்படு
வது, அவள் அறிவிற்கு அவதூறாகி, அவள் அருமையை
யெல்லாம் அழித்துவிடுகிறது; அது விஷயத்தில் அவளை

நான் வெறுக்கவேண்டி வருகிறது, அன்றியும் பழிவாங்க வேண்டியும் வருகிறது. ஏனெனில், மூடர்கள்—

விசாகன் வருகிறான்.

யார் அது? என்ன! ஏனடா, புறப்படுகிறாயா என்ன? வா இப்படி. ஆ! கூட்டிக் கொடுக்கும் பாதகா! எங்கே உன் தலைவி? ஒரு வார்த்தையில் சொல். இல்லாவிடில் உடனே உன்னைக் கொன்று யமபுரம் அனுப்புவேன்.

வி. ஐயோ! மஹாப் பிரபு!

க. எங்கே உன் தலைவி? சுவாமிமேல் ஆணை, மறுபடியும் உன்னைக் கேளேன் நான்! வாயை மூடிக்கொண் டிருக்கிற பாதகா! உன் மார்பினின்றும் இந்த மர்மத்தை நான் அறிகிறேன்; அதைப் பிளந்தாவது இந்த ரகசியத்தைப் பெறுகிறேன். துர்க் குணத்திற் கோர் களஞ்சியமாம், நற் குணமென்பது எள்ளளவு மில்லாத, அப் பாசதாமனுடன் இருக்கிறாளோ?

வி. ஐயோ! என் பிரபுவே, அவருடன் எப்படி இருப்பார்கள்? அவர்கள் எப்பொழுதுமுதல் காணோம்? அவர் மதுரையிலிருக்கிறாரே.

க. எங்கே இருக்கிறாள் அவள்? வா அருகில். இனி தாமதம் உதவாது. அவள் என்ன ஆனாள் என்று உடனே நேராக எனக்கு ரூபி.

வி. ஐயோ! மஹாப் பிரபுவே!

க. மஹா பாதகனே! உன் மறு வார்த்தையில், உன் தலைவி இருக்குமிடத்தைத் தெரிவி உடனே, மஹாப்பிரபுவெல்லாம் இனி உதவாது. சொல்! ஒரு க்ஷணம் சும்மா இருப்பாயாயின், அதுவே உன் கண்டனமாம், அதுவே உன் மரணமாம்.

வி. ஆனால் ஐயா, அவர்கள் ஓடிப்போன விஷயத்தில் நானறிந்த சரித்திரமெல்லாம் இக் கடிதமே.

[ஒரு கடிதம் கொடுக்கிறான்.]

க. அதை நாம பார்க்கட்டும்—பாண்டியன் பட்டணம்வரை யில் நான் அவளைப் பின் தொடர்கிறேன்.

வி. [ஒரு புறமாக] இந்த யுக்தி செய்யாவிடின் நா னிறக்கவேண்டியதே. அவள் வெகு தூரத்தி லிருக்கிறாள். இதைக் கொண்டு இவ னறிவது, இவனைப் பயணப் படுத்துமே யொழிய, அவளைப் பயத்துக் குட்படுத்தாது.

க. ஹாம் !

வி. [ஒரு புறமாக] என் எஜமானனுக்கு அவள் மடிந்ததாக எழுதுகிறேன். அம்மணி ! தாங்கள் சுகமாய்த் திரிந்து, சுகமாய்த் திரும்பி வருவீராக !

க. அடே ! இதில் எழுதி யிருப்பது உண்மைதானா ?

வி. அப்படித்தான் நான் எண்ணுகிறேன், ஐயா.

க. இது பாசதாமன் கை யெழுத்தே, அதை அறிவேன் நான். அடே, நீ பாதகனா யிராதபடி, எனக்கு உண்மையான ஊழியனாகி, நா னுன்னை உபயோகிக்கக் கருதும் வேலைகளை விடா முயற்சியுடன் செய்வா யானால்.—அதாவது, நான் என்ன பாப கிர்த்தியம் செய்யச் சொன்னபோதிலும், அதைப் படுக்கென உண்மையிற் செய்து முடிப்பாயாயின், —உன்னை உண்மையான ஆள் என எண்ணுவேன். பிறகு உன் குறைகளைத் தீர்க்க என் செல்வத்தையும், உனக்கு உயர்ந்த உத்தியோகங்கள் கொடுக்க என் வார்த்தையையும், நீ வேண்ட வேண்டிய தில்லை.

வி. நல்லது, எனது பிரபுவே.

க. நீ என்னிடம் ஊழியம் செய்கிறாயா ? பொறுமையுடனும் மாறுபடாமலும், ஒன்றுமில்லாத அப் பிச்சைக்காரன் பாசதாமனையே விடாது பின் தொடர்ந்தபடியால், நன்றி யறிதலின்பொருட்டே, எனது நல்ல சுறுசுறுப் புள்ள வேலை

யாளாய் இராமற் போகாய்—என்னிடம் வேலை யாளாய் இருக்கிருயா?

வி. ஐயா, அப்படியே, செய்கிறேன்.

க. உனது கையைக் காட்டு. இதோ என் பை. உன்னிடம் உனது பழய எஜமானனுடைய உடை ஏதாவ திருக்கிறதா?

வி. என் வீட்டில் இருக்கிறது, பிரபு, எனது தலைவியாம் எஜமானியிடமிருந்து விடை பெற்றபோது அவர் அணிந்து கொண்டிருந்த ஆடை.

க. நீ எனக்குச் செய்யும் முதல் வேலை, அந்த ஆடையை இங்கே கொண்டு வருவதே யாம்; அது உன் முதல் ஊழியமாம், போ.

வி. அப்படியே செய்கிறேன், பிரபு. [போகிருன்.]

க. "காங்கேயன் துறையில் உன்னைச் சேர்கிறேன்."—அவனை ஒன்று கேட்க மறந்தேன். பிறகு ஞாபக மிருக்கும் அது. பாதகா! பாசதாமா! அவ்விடத்திலேயே, உன்னை நான் கொல்கிறேன்.— எப்படியாவது இந்த ஆடை வருமாக! அவள் ஒரு முறை சொல்லி யிருக்கிருள்—அதை நினைத்தாலும் என் வயறு பற்றி எரிகிறது.—கண் காட்சியாம் குணங்களோடு கூடின என் கம்பீரமான உருவத்தைப்பார்க்கிலும், பாசதாமனுடைய அற்ப ஆடையை அதிகமாக மதிப்பதாக. அந்த ஆடையை நான் உடலில் அணிந்தே அவள் கற்பினை யழிக்கிறேன். முதலில் அவனைக் கொல்லவேண்டும்—அவள் கண் முன்பாகவே; அதில் எனது ஆண்மையைக் காண்பாள், அவள் என்னை வெறுத்ததிற் கெல்லாம் தக்க வேதனை யதுவே யாம். அவனைக் கீழே கிடத்தி, மடிந்த அவன துடலை நான் வாய் வந்தமட்டும் வைத பிறகு, அப்படியே அவளை அரண்மனைக்கு அடித்து ஓட்டிக்கொண்டு வருகிறேன், கால் நடையாய். சந்தோஷத்துடன் என்னை வெறுத்தாள் அவள், நான் ஆநந்தத்துடன் அவள்மீது பழி வாங்குகிறேன்.

ஓர் ஆடையுடன் விசாகன் மறுபடியும் வருகிறான்.

இதுதானே அந்த ஆடை?

வி. ஆம், எனது பிரபுவே.

க. அவள் காங்கேயன் துறைக்குப் போய் எத்தனை காலமாயது?

வி. இன்னும் அங்கே போய்ச் சேர்ந்திருக்கமாட்டார்கள்.

க. இந்த ஆடையை என் அறைக்குக் கொண்டுவா. அதுதான் என்னுடைய இரண்டாம் கட்டளை உனக்கு. மூன்றாவது, என் எண்ணத்தைப்பற்றி நீ மௌனமா யிருக்கவேண்டு மென்பதே. உன் கடமைப்படி செய்; உனக்குப் பெரிய உத்தியோகம் தானாய் வரும். என் பழி தீர்ப்பு காங்கேயன் துறையி லிருக்கிறது; அங்கு நான் சிறகு கொண்டு பறக்க முடியுமாயின்! வா என்னுடன், எனக்கு உண்மையா யிரு. [போகிறான்.]

வி. நான் நஷ்டப்படும்படி கஷ்டப்படச் சொல்லுகிறாய். உனக்கு உண்மையா யிருப்பதென்றால், உத்தம ரான என் எஜமானனுக்குப் பொய்யனாகவேண்டும்; அதற்கென்னவோ நான் ஒருகாலும், உடன்படேன். போ, காங்கேயன் துறைக்கு, நீ தேடிப் போகும் அவளை அங்கே காணமாட்டாய். ஜகதீசன் அவளுக்குக் கருணை பொழிவாராக! இந்த மடயன் வேகம் தாமதப்படுமாக! கஷ்டமே இவன் கண்டபலனாகுக! [போகிறான்.]

காட்சி முடிகிறது.



## ஆரும் காட்சி.

இடம்—வேலை நாடு. பாலராயன் குகை யெதிர்.

ஹேமாங்கி ஆடவ னுடையில் வருகிருள்.

ஹே. ஆடவனுடைய வாழ்வு அதிக கஷ்ட முடைத்தேயென் அறிகிறேன். எனக்கு மிகவும் இளைப்பா யிருக்கிறது. இரண்டிரவாக பசும் புற் றரையே என் பள்ளி யாக்கினேன். எனது தீர்மானம் என்னைத் தாங்காவிட்டால், நான் நோயில் வீழ்ந் திருக்கவேண்டியதே. காங்கேயன் துறையே! மலையின் சிகரத்திலிருந்து விசாகன் உன்னை எனக்குக் காட்டியபொழுது நீ கூப்பிடு தூரத்தில்தா னிருந்தாய். ஆ! ஈசனே! தரித்திரர்களுக்கு முன்பாக தர்ம சத்திரங்களும் தாவி யோடுகின்றன என்று எண்ணுகிறேன்—நான் கூறுவது அவர்கள் போய் இளைப்பாறக்கூடிய இடங்களைப்பற்றி. நான் வழி தப்பமாட்டேன் என்று இரண்டு பிச்சைக்காரர்கள் என்னிடம் சொன்ஞர்கள். பிணியுடை வறிஞர்கள், தாங்கள் செய்த பாபத்திற்கு அப் பிணி விதிக்கப்பட்ட தண்டனையென வறிந்தும், பொய் பேசுவார்களா? ஆம், இதில் ஆச்சரிய மில்லை, மேலாம் செல்வமுடையாரே மெய் பேசுவ தில்லையே. எல்லாச் செல்வ மிருந்தும் இழிதல், வயிறு வளர்க்க வேண்டி அசத்தியம் பேசுதலினும், புன்மையே யாம். வறிஞர்களைவிட, வையக மாளும் அரசர் அசத்திய மாடுவதே, அதிக ஹீன மாம். என் ஆருயிர்க் காதலரே! தாம் அந்த அசத்தியவாதிகளுள் ஒருவ ரானீர். இப்பொழுது உம்மைப்பற்றி நான் நினைக்குமளவில், என் பசி பறந்தோடிப் போயது. இப்பொழுதுதான் சற்று முன்பாக, பசியின் கொடுமையால், கீழே விழ இருந்தேன். ஆயினும், இதென்ன? இதோ ஒரு பாதை போகிறது அதற்கு; ஏதோ மிருக மிருக்கும் குகை. நான் கூப்பிடா திருத்தலே நல மாம். எனக்குக் கூப்பிடவும் பயமா யிருக்கிறது. ஆயினும் பசியானது, ஆவியை முற்றிலும் பறிக்குமுன், அதற் கொரு பய மின்மை

யைக் கொடுக்கிறது. சுகமும் சம்பத்துமே பயங்காளிகளைச் சிருஷ்டிக்கிறது. கஷ்டகாலமே தாளாண்மைக்குத் தாயா யிருக்கிறது எப்பொழுதும்.—ஓய்! யார் உள்ளே? நாகரீக முடைய தேதேனும் உள்ளிருந்தால் பேசட்டும். காட்டு மிரு கமா யிருந்தால்!—விலைக்காவது இரவ லாகவாவது ஏதே னும் கொடுக்க முடியுமா? ஓய்!— பதிலைக் காணோம். ஆனால் நான் உள்ளே பிரவேசிக்கிறேன். என் கத்தியை உருவிச் செல்லுதல் நலம். என் எதிரி, அதைக் கண்டு நான் பயப்படுவதுபோல் பயப்படுவா னாயின், அதைக் கண் ணெடுத்தும் பாரான். ஈசனே! அப்படிப்பட்ட பகைவனை அருள்வீராக! [குகைக்குள் போகிறாள்.]

பாலசார்யன், ஆர்வராகன், கிரிதரன் வருகிறார்கள்.

பா. அப்பா, பாலதரா, வேட்டையில் நீதான் வென்றாய்; ஆக வே, விருந்தில் நீ எஜமானனா யிருப்பாய்; கடுவேலனும் நானும் சமயற்காரனும் பரிசாரகனு மாகிறோம். இதுவே நமது ஏற்பாடு. முயற்சியி லுண்டாம் உற்சாகம், அது மேற்கொள்ளும் முடிவு ஒன் றிராவிடின், வாடி வதங்கிப் போம். வாருங்கள், சாதாரண பதார்த்தங்களுக்கும், நமது பசி ஓர் ருசியைக் கொடுக்கும். துருப் பிடித்த சோம்பலுக்கு, தூய இலவம் பஞ்சும் உறுத்தும்; கஷ்டப் பட்ட ஓய்வு, கட்டாந் தரையிலும் படுத்துக் குறட்டை விடும்.—இங்கு எல்லாம் க்ஷேமமா யிருக்குமாக; பேதை இல்லமே, உனக்கு நீயே காவல்!

கி. எனக்கு மிகவும் களையா யிருக்கிறது.

ஆ. வேலையினால் இளைப் படைந்தபோதிலும், பசிமாத்திரம் அதி கமா யிருக்கிறது.

கி. .. குளிர்ந்த இறைச்சி குகைக் குள் இருக்கிறது; நாம் கொன் றது சமைக்கப்படுகிறவரையில், அதை மெல்லத் தின்று கொண் டிருப்போம்.



பா. பொறுங்கள்! உள்ளே வராதீர்கள்—[உள்ளே பார்த்து] அம் துணவைப் புசித்துக்கொண் டிராவிட்டால், ஓர் அணங்கு இவ்விடம் இருப்பதாக எண்ணி யிருப்பேன்.

கி. என்ன விசேஷம், ஐயா?

பா. ஈசன் ஆணை! தெய்வலோக வாசியே! இல்லாவிடின் இவ் வுலகில் இணையிலாப் பொருளோ! தெய்வீகமே பைய னுருக் கொண்டு வந்திருக்கிறது, பாருங்கள்!

ஹேமாங்கி வெளியே வருகிருள்.

ஹே. ஐயா எஜமானர்களே! எனக்கொரு தீங்கும் செய்யாதீர். இக் குகைக்குள் நுழையுமுன், நான் கூப்பிட்டுப் பார்த்தேன். நான் புசித்ததை, விலைக்காவது அல்லது வேண்டியாவது வாங்கலாமென எண்ணினேன். வாஸ்தவத்தில், நான் ஒன் றையும் திருட வில்லை. தரைமீது பொன் சிதறிக் கிடக்கக் கண்டபோதிலும் திருடி யிருக்கமாட்டேன். நான் புசித்த உணவிற்கு இதோ பணம் நான் புசித் தானவுடன் அதை உண விருந்தவிடம் வைத்துவிட்டு, என் பசி தீர்த்தவர்களை வாழ்த்திவிட்டுப் போயிருப்பேன்.

கி. பணமா, பிள்ளாய்?

ஆ. பொன்னும் வெள்ளியும் எல்லாம் புழுதியாய்ப் போகுமாக! அசுத்தமான தெய்வத்தை வணங்குபவர்களே அதை ஒரு பொருட்டாக மதிப்பார்கள்.

ஹே. நீங்கள் கோபங்கொண் டிருப்பதாகக் காண்கிறேன். நான் செய்த தப்பிதத்திற்கு என்னைக் கொல்வதானல், அதைச் செய்திராவிடின், நான் மடிந்திருப்பேன் என்று அறியுங்கள் நீங்கள்

பா. எங்கே போகிருய் நீ?

ஹே. காங்கேயன் துறைக்கு.

பா. உன் பெயர் என்ன?

ஹே. ஐயர், என் பெயர் பாடலன். என்னுடைய பந்து ஒருவர் பாண்டி நாட்டிற்குப் போகிறார். அவர் காங்கேயன் துறையில் நாவாய் ஏறுகிறார். அவரிடம் போக வந்தவன், வழியில் பசியாற்றாது, இத்தவ நிழைக்க நேரிட்டது.

பா. அழகிய பிள்ளாய், எங்களை முறடர்களென மதியாதே. நாங்கள் வசிக்கும் இக் கறடு முறடாம் வாஸ ஸ்தலத்தைக் கொண்டு எங்களைக் கடின சித்த முடையவர் என்று எண்ணாதே. உன்னைச் சந்தித்தது சந்தோஷ மாச்சுது! ஏறக் குறைய இருட்டிவிட்டது இப்பொழுது. நீ புறப்பட்டுப் போகுமுன் உனக்கு நல்ல விருந் தளிக்கிறோம். இங் கிருந்து அதைப் புசித்துப் போகவேண்டுகிறேன்.—அப்பா, இப் பிள்ளைக்கு நல் வரவு கூறுங்கள்.

கி. அப்பா, நீ யொரு பெண்பிள்ளையா யிருப்பின் உன் காதலைப் பெற உன்னை மிகவும் வேண்டி யிருப்பேன். உண்மையில், நான் உன்னை விலைக்கு வாங்குவதேபோல், வேண்டுகிறேன்.

ஆ. அவன் ஓர் ஆடவனா யிருப்பதைக் கொண்டு நான் சந்தோஷ மடைகிறேன். ஆகவே அவனை எனது சகோதர னாக எண்ணி, ஆசை கொள்வேன்.—நெடுநாள் பிரிந்து, பிறகு நேர்ப் பட்ட, என் சஹோதரனுக்குக் கொடுக்கும் பிரியமான நல்வரவு, உன்னுடைய தாம்.—வாராய்! முக மலர்ச்சியோடிரு. உனது நண்பர்கள் மத்தியி லிருக்கிறாய் நீ.

ஹே. நண்பர்கள் மத்தியிலா! ஆ! சஹோதரர்கள் மத்தியிலா? —[ஒரு புறமாக] இவர்கள் எனது தந்தையின் புதல்வர்களாய் இருக்க லாகாதா எனக் கோருகிறேன். அங்ஙனம் இருக்கு மாயின், என் செல்வாக்கானது குறைந்த தாகும்; அப்படியாவது, என் பிராணநாதா, உமக்குச் சரியான ஸ்திதியி லிருப்பேனாக!

பா. ஏதோ துக்கத்தை நினைந்து வருந்துகிறான்.

கி. அதை நான் தீர்க்கக்கூடு மாயின்!

ஆ. அல்லது நானுவது தீர்க்கக் கூடுமாயின்! அது எ[illegible] யிருந்திருந்த போதிலும், அது என்ன கஷ்டம் தருவதா யிருந்த போதிலும், என்ன அபாயகரமான தாயினும்! ஈசனே!

பா. பிள்ளைகளே, நான் சொல்வதைக் கேளுங்கள்.

[அவர்களுடன் இரகசியமாய்ப் பேசுகிறான்.]

ஹே. உயர் குலத் துதித்தவர் இழி குலத் துதித்தவர் என்னும் உலக பேதத்தைக் கருதாவிடத்து—இக்குகையை விடப் பெரிதா யிராத இல்லத்தை உடைய, தங்கள் வேலைகளைத் தாங்களே பார்த்துக்கொள்ளும், தங்கள் மனுேசாட்சியே மதிக்கின்ற உத்தம குணமுடைய கனவான்களும், இவர்களிருவரைவிட எதில் மேம்பட்டவர்க ளாவார்கள்! ஈசனே, என்னை மன்னிப்பீராக! என் பிராணநாதன் மாறிய பிறகு, இவர்களுக்குத் தோழனுய் இங்கேயே வாழ்ந்திருக்க, என் பெண்மையை விட்டு ஆடவனு யிருக்க விரும்புகிறேன்.

பா. அப்படியே ஆகட்டும்;—அப்பா, குழந்தைகளே, நமது வேட்டையை வதக்குவோம். அழகிய சிறுவனே, வா உள்ளே, பசியுடன் பேசிக்கொண்டிருப்பது, பாரமான காரியம். நாம் புசித் தானவுடன் முறைப்படி உன் விர்த்தாந்தத்தைக் கேட் டறிகிறேம்—நீ சொல்லப் பிரியப்படும்வரையில்.

கி. கிட்ட வா, அப்பா.

ஆ. ஆந்தைக்கு இரவும், வானம்பாடிக்கு விடியற் காலமும், இதை விட அதிக சந்தோஷத்தைத் தராது.

ஹே. ஐயா, உமக்கு வந்தனம்.

ஆ. கிட்ட வா, அப்பா. [போகிறார்கள்.

காட்சி முடிகிறது.



## ஏழாம் காட்சி.

இடம்—மதுரை.

இரண்டு மந்திராலோசனைத் தலைவர்களும் தளகர்த்தர்களும் வருகிறார்கள்.

மூ. ம. மஹாராஜாவின் திருமுகத்தின் தாத்பர்யம் இதுதான். சாதாரண படைகள், பணவர்களுடனும் தாலமாதியருடனும் யுத்தம் புரிந்துகொண்டிருப்பதாலும், காலவ தேசத்தி லிருக்கும் நமது சைனியமானது, நம தாளுகையினின்றும் நழுகிப் போன சிங்களவருடன் எதிர்த்துப் போர் புரிய சக்தி போதுமானதா யிராததாலும், நமது தேசத்துப் பிரதானவீரர்களை இவ் விஷயத்தின்பொருட்டு அனுப்பும்படி ஆக்யாபித்திருக்கிறார். லோகசேனரை தன் பிரதிநிதியாக நியமிக்கிறார். தளகர்த்தர்க ளாகிய உங்களுக்கு, இச் சைனியத்தை உடனே சேர்ப்பதில், தனது முழு அதிகாரமும் கொடுத்திருக்கிறார். வேந்தர் நெடுநாள் வாழ்வாராக !

த. சைனியங்களுக்குச் சேனுபதி லோகசேனரா ?

இ. ம. ஆம்.

த. காலவ தேசத்தில் இப்பொழு திருக்கும் சைனியத்திற்கா ?

மூ. ம. ஆம், நான் முன் பெடுத் துரைத்த சைனியங்களுக்கு; அவைகளுடன் நீங்கள் சேர்க்கும் சைனியங்களும் ஒருங்கு சேர வேண்டும். உங்களுடைய ஆக்ஞையில் இத்தனை பெயரைச் சேர்க்கவேண்டுமென்பதும், அவைகள் எப்பொழுது புறப்பட வேண்டுமென்பதும், நிர்ணயித்திருக்கும்.

த. எங்கள் கட்டளையை நாங்கள் நிறைவேற்றுகிறோம்.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



# நான்காம் அங்கம்.



## முதல் காட்சி.

இடம்—வேலை நாடு. பாலராயன் குகை யருகிலுள்ள காடு.

கலேபாரன் வருகிறான்.

விசாகன் குறித்தது உண்மையாயின் அவர்கள் சந்திக்கவேண்டிய இடத்திற்கு அருகாமையில் வந்திருக்கிறேன். அவனுடைய ஆடை எனக்கு எவ்வளவு சரியாக அமைந்திருக்கிறது! இந்தத் தையற்காரனைச் சிருஷ்டித்தவன், அவன் மனைவியையும் எனக்குச் சரியாக ஏன் சிருஷ்டித்திருக்கலாகாது? அதிலும்—அந்தப் பதத்தை உபயோகிப்பதற்காக மன்னிக்கவேண்டும்.—ஒரு ஸ்திரீயின் தகுதி, மாறி மாறி வரும் அவள் குணத்தைப் பொருந்தியதாகும், என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ் விஷயத்தில் என் வேலைத் திறத்தை நான் காட்டவேண்டும். இவ் விஷயத்தில் என்னைப் பற்றி என்னிடமே நான் பேசிக்கொள்ளலாம். ஏனெனில், தன்னுடைய அறைக்குள்ளிருந்து, தன் கண்ணாடியை எடுத்து ஒருவன் தன்னையே பார்த்துக்கொள்வது, தற் புகழ்ச்சியாம் டம்பம் ஆகாது. நான் சொல்லவந்த தென்னவென்றால், என் னுடலின் உருவமானது, அவனுடையதைப்போல் அழகாய்த்தான் அமைந்திருக்கிறது, அவனைப்போல் நானும் நல்ல வாலிபத்தி லிருக்கிறேன், அவனைவிட அதிக பலசாலி, செல்வத்தில் அவனுக்குக் குறைந்தவ னல்ல, காலானுகூலத்தில் அவனைவிட மேம்பட்டவன், அவனைப் பார்க்கிலும் உயர் குடிப் பிறப் புடையவன், மொத்தமாய் யுத்தம் புரிவதில் அவனைப்போலவே தேர்ந்தவன், தனியா யெதிர்த்துச் சண்டை போடுவதில் அவனிலும் அதிக பெயர் பெற்றவன். இவ்வளவெல்லாம் இருந்தும், இந்தப் பிடிவா

தக்காரக் குட்டி, என்னை வெறுத்து, அவனை விரும்புகிறாள். மனிதர்கள் வாழ்வு என்ன அநித்தியம்! பாசதாமா, உன் தோளின்மீது வளர்ந்துவரும் உன் தலையானது, இன்னும் ஒரு மணி நேரத்திற்குள்ளாக அதை விட்டுப் பிரிந்து போம்; உன் மனைவி பலவந்தப்படுத்தப்பட்டு எனக்கு உட்படுவாள்; உன் முகத்திற் கெதிராக உன் ஆடைக ளெல்லாம் துண்டம் துண்டமாகக் கிழித் தெறியப்படும்; இவையெல்லாம் செய் தானபின், அவளை அவன் தகப்ப னிடம் வீட்டிற்குக கழுத்தைப் பிடித்துத் தள்ளிக்கொண்டு போகிறேன். நான் இவ்வளவு அதிகமாய்ப் பலவந்தப்படுத் தியதற்காக, ஒருவேளை அவர் கொஞ்சம் கோபம் கொண் டாலும் கொள்வார், ஆயினும் என் தமக்கை அவரது கோபத்தை அடக்கியாளும் சக்தியுடையவர்க ளாதலால், அவற்றை யெல்லாம், என்னிடமுள்ள புகழத் தக்க குணங்க ளாக மாற்றிவிடுவார்கள். என் குதிரை ஜாக்கிரதையாகக் கட்டப்பட்டிருக்கிறது.—கட்கமே! வெளியே வா, ஓர் துர்க் கிருத்தியத்தைச செய்வதற்கு! என் அதிர்ஷ்டவசத்தால் அவர்கள் என் கையில் சிக்குவார்களாக! இதுதான் அவர் கள் சந்திக்க ஏற்படுத்திய இடம், விவரங்களெல்லாம் சரி யா யிருக்கின்றன; அந்தப் பயலுக்கு என்னை மோசம் செய்யத் தைரிய மிராது. [போகிறான்.]

காட்சி முடிகிறது



## இரண்டாம் காட்சி.

இடம்—பாலராயன் குகைக் கெதிர்.

பாலராயன், கிரிதரன், ஆர்வராகன், ஹேமாங்கி குகையிலிருந்து வெளியே வருகின்றனர்.

பா. [ஹேமாங்கிக்கு] அப்பா, உனக்கு உடம்பு சௌக்கிய மில்லை நீ இங்கேயே குகையில் இரு. நாங்கள் வேட்டையை முடித்துக்கொண்டு உன்னிடம் வந்து சேர்கிறோம்.

ஆ. [ஹேமாங்கிக்கு] தமபி, இங்குதா னிரு. நாம் அண்ணன் தம்பிக ளல்லவா ?

ஹே. மனிதனும் மனிதனும் அங்ஙனமே இருக்கவேண்டும். ஆய் னும் எல்லாம் ஒரே மண்ணா யிருந்தபோதிலும், களி மண் ணும் களி மண்ணும், கனத்தில் பேதப்படுகிறது. உடம்ட எனக்கு மிகவும் அசௌக்கியமா யிருக்கிறது.

கி. நீங்கள் வேட்டைக்குச் செல்லுங்கள்; நானிவனுடன் இருக் கிறேன்.

ஹே. அவ்வளவு அசௌக்கியமா யில்லை நான்—ஆயினும் நான் சுவஸ்தமா யில்லை. ஆனால், நோயிற் படுமுன், சாகக் கிடப்ட வன்போல் பாசாங்கு செய்யும், அத்தனை படுக்காளியாட பட்டணவாசி யன்று. ஆகவே நான் என்னை விட்டுவிட்டுப் பே கும்படி உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன். வழக்கம்போ வேட்டைக்குப் போங்கள். அப்யாசத்தில் மாறுபாடு அனை திலும் மாறுபாடாம். எனக்குச் சுக மில்லை உண்மையே ஆயினும் நீங்கள் பக்கத்திலிருப்பதனால் நான் சுவஸ்த மனை யப்போகிற தில்லை. ஜன சங்கத்திற் பிரிய மில்லாதவனுக் ஜன சங்கம் சந்துஷ்டியைத் தராது. எனது அசௌக்கிய த்தைப்பற்றி எடுத்துக்கூற எனக்குச் சக்தியிருப்பதால், நா அதிகமாய் அசௌக்கியமா யில்லையென் றெண்ணவேண்டு நீங்கள் என்னை இங்கு நம்பிவிட்டுப் போங்கள். என்னை யன்றி வேறொருவரையும் நான் அடித்துப் பறியேன். அ

னம் ஒருகால் செய்வேனாயின், ஆருயிர் போக வேண்டியவனே.

கி. ஆசையா யிருக்கிறேன் உன்மீது நான். அதை நான் வெளியிட்டுவிட்டேன். அதன் அளவும் ஆழமும் எந்தைமீது எனக் குரியதே யாம்.

பா. என்ன ? எப்படி ? எப்படி ?

ஆ. அப்படிக் கூறுதல் பாபமாயின், ஐயனே, என்னையும், என் நல் லண்ணன் பாபத்திற் குடன்படுத்திக்கொள்ளுகிறேன். இப் பிள்ளைமீது ஏனோ நான் பிரியமா யிருக்கிறேன் என் றறிகிலேன். ஆசையின் காரணம் ஒரு காரணமு முடைத் தானதன்று, என்று தாங்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். வாயிலில் பாடையை வைத்து அதில் படுக்கவேண்டியவன் ஆரெனும் கேள்வி வருமாயின் "எந்தையே, இச் சிறுவனன்று" என்று கூறிடுவேன் நான்.

பா. [ஒரு புறமாக] உயர் குடிப் பிறப்பிற் குரிய எண்ணங்கள் ! பிரகிருதியின் பெருமையே பெருமை ! பெருமையினின்றும் பெருமையே ஜனிக்கும் ! பயங்காளிகள் வயிற்றில் பயங்காளிகளே பிறக்கின்றனர்; அற்ப விஷயங்கள் அற்பங்களையே உண்டுபண்ணுகின்றன. சுபாவத்தில் சுத்தமாம் மணியும் தவிடு மிருக்கின்றன, அழகும் அருவெறுப்பு மிருக்கின்றன. நான் அவர்கள் தந்தை யல்ல; ஆயினும் என்னைவிட அதிகமாய் ஆசைப்படத் தக்க இவன் ஆர் என்பதே ஆச்சரியமா யிருக்கிறது.—காலை ஒன்பது மணி ஆய்விட்டது.

ஆ. தம்பி, போய் வருகிறோம்.

ஹே. உங்களுக்கு நல்ல வேட்டை கிடைக்குமாக !

ஆ. உனக்கு உடம்பு சுவஸ்தமாகுமாக !—ஐயா, இதோ வந்துவிட்டேன்.

ஹே. [ஒரு புறமாக] என்ன பிரியமான பிராணிகள் ! ஈசனே ! நான் என்ன பொய் வார்த்தைகளைக் கேட்டிருக்கிறேன் ! நமது

அரண்மனை வாசிகள், அங்கிருப்பது தவிர மற்றெல்லாம் அநாகரீகமுடைய தென்கிறார்களே. அனுபவமே! அவற்றையெல்லாம் நீ அபத்தமாக ரூபிக்கிறாய். கம்பீரமுடைய கடலானது கடுஞ் சந்துக்களை உற்பத்தி செய்கிறது. அதில் சங்கமமாகும் அற்ப நதிகளோ, சமைத்தற்குரிய ஜலசரங்களைச் சிருஷ்டிக்கிறது. இன்னும் நான் அசௌக்கியமாகத் தானிருக்கிறேன்; மனம் சௌக்கிய மில்லை.—விசாசா, உன்னுடைய மருந்தைப் புசித்துப் பார்க்கிறேன் இப்பொழுது.
[மருந்தைக் கொஞ்சம் புசிக்கிறாள்.]

கீ. அவனை நான் அதிகமாக ஆராய்ந் தறிய முடிய வில்லை. தூய குலத் துதித்தவ னாயினும் துரதிர்ஷ்டசாலியா யிருப்பதாகச் சொன்னான். அசத்தியத்தினால் அவலப்படுத்தப்பட்டவ னாயினும், தான் சத்திடம் தவறாதவனெனவே தெரிவித்தான்.

ஆ. அப்படித்தான் எனக்கும் சொன்னான். ஆயினும் இனி பிற்காலம் நான் இன்னும் அறியலாமெனவும் கூறினான்.

பா. காட்டிற்கு! காட்டிற்கு!—அப்பா, கொஞ்ச நேரம் உன்னைத் தனியே விட்டுப் போகிறோம். உள்ளே போய் இளைப்பாறு.

ஆ. நாங்கள் சீக்கிரம் வந்துவிடுவோம்.

பா. அசௌக்கியத்திற் கிடங் கொடாதே. நீதான் எங்கள் அகத்தின் வேலையைப் பார்த்துக்கொள்ளவேண்டும்.

ஹே. சௌக்கியமோ, அசௌக்கியமோ, உங்களுக்கு நான் கட்டுப்பட்டவனே. [குகைக்குள் போகிறாள்.]

பா. அப்படியே எப்படியு மிருப்பாயாக! இச் சிறுவன் எவ்வளவுதான் தாழ்ந்த ஸ்திதியை அடைந்தபோதிலும் நல்ல வம்சத்தி லுதித்தவனாகக் காணப்படுகிறான்.

ஆ. குயிலை வெட்கிடச் செய்யும் குரலுடன் பாடுகிறான்!

கீ. என்ன நன்றாகச் சமைத்தான்! நமது கிழங்குகளையெல்லாம் என்ன பக்குவமாய் நறுக்கினான்; நமது கஞ்சிக்குக்

காரமிட்டதும், சக்கிரவர்த்தினி சௌக்கிய மில்லாதிருக்க, அவளுக்குப் பத்தியம் செய்ததுபோ லல்லவோ இருந்தது.

ஆ. எவ்வளவு பெருந் தன்மையோடு பெரு மூச்சுடன் புன்சிரிப்பைச் சேர்க்கிறான்.—அப்படிப்பட்ட நகைப்பா யிருப்பதிற் கில்லையே யென்று, பெருமூச்சானது அவ்வித மானது போல். உன்னத ஆலயத்தை விட் டிழிந்து, மானுமிகளும் வாய் வந்தபடி வழங்கிடும் மட்டிக் காற்றுடன் கலக்கிறதே, என்று, பெருமூச்சை நகையானது ஏளனம் செய்வது போலும் தோற்றுகிறது.

கீ. துயரமும் பொறுமையும் அவனிடம் அதிக ஆழமாய் வேரூன்றி இருப்பதாக நான் மதிக்கிறேன்.

ஆ. பொறுமையே! நீயே வளர்வாயாக! அதற்கு மூத்ததான அசுத்தமாம் துயரமானது அழிந்து பிரிய, நற் குணக் கொடியே நாளடைவில் பெருகுமாக!

டா. பெரும் பக லாய்விட்டது. வாருங்கள் போவோம்.—யார் அங்கே?

களேபரன் வருகிறான்.

க. ஓடிப்போன ஆசாமிகளில் ஒருவரையும் காணோம். அந்தப் பாதகன் என்னைப் பரிஹாசம் செய்திருக்கவேண்டும்—எனக்குக் களையா யிருக்கிறது.

பா. ஓடிப்போன ஆசாமிகள்! நம்மை யன்றோ குறிக்கிறான்? இவனைத் தெரியு மெனக்குக் கொஞ்சம். இவன்தான் களேபரன், அரசியின் தம்பி. நம்மை மோசம் செய்து ஏதோ பிடித்துப்போக வந்திருக்கிறார்களென அஞ்சுகிறேன். இந்தப் பல வருடங்களாக அவனைப் பாராவிட்டாலும், அவன்தான் என நன்றாய் அறிவேன். நியாயத்திற்குப் புறம்பானவர்களாக நாம் மதிக்கப்பட் டிருக்கிறோம். ஆகவே நாம் நிற்க லாகா திங்கு!

கி. அவன் ஒருவனே !·தாமும் தம்பியும் இவனோடு வேறு யாராவது வந்திருக்கிறார்களாவெனத் தேடிப் பாரும் அருகாமையில். உடனே புறப்படும்படி, கேட்டுக்கொள்ளுகிறேன் உங்களை. நான் ஒருவனாக அவனைப் பார்த்துக்கொள்ளுகிறேன்.

[பாலராயனும். ஆர்வராகனும் போகிறார்கள்.]

க. பொறு !—யார் நீங்கள் என்னைக் கண்டு இவ்விதம் ஓடுபவர்கள் ? மாபாதகர்களாம் மலைவாசிகளா என்ன ? அவர்களைப் பற்றி நான் கேள்விப்பட் டிருக்கிறேன்.—அடே, முறியா ! நீ யாரடா ?

கி. முறியன் என்று என்னை அழைத்தவனை முகத்தின்மீது குத்தாது பதில் சொல்வதைவிட, அதிகமான அடிமைத்தனம் நான் செய்ததாக அறிகிலேன் எப்பொழுதும்.

க. நீ ஒரு பெரும் திருடன் ! நியாயத்திற்கு விரோதமாகச் செய்யும் பாதகன் ! ஆட்படுவாய் எனக்கு நீ, திருடா !

கி. யாருக்கு ? உனக்கா ? நீ யாரடா ? உனக் கிருப்பதுபோல் எனக்கும் பெருத்த கை யொன் றில்லையா? தைரிய மில்லையா? உனது வார்த்தைகள் மாத்திரம் என்னுடையவைகளைவிட பெருத்தனவே, ஒப்புக்கொள்ளுகிறேன்; ஏனெனில் நான் சண்டை போடும் ஆயுதம் என் வாயி லில்லை. நீ யார் சொல், நான் ஏன் உனக் காட்படவேண்டும் ?

க. அடே, இழிவாம் பாதகனே ! என் ஆடையைப் பார்த்தால் நான் இன்னா னென உனக்குத் தெரிய வில்லையா ?

கி. உன்னையும் தெரிய வில்லை, உன் பாட்டனா ரான அந்த தையற்காரப் பாபியையும் தெரிய வில்லை. அவன் இந்த ஆடைகளைச் செய்தான், இந்த ஆடைகள் உன்னை இவ் வாறு செய்ததுபோலும்.

க. அடே ! மட்டி மடையா ! என் தையற்காரன் இவைகளைச் செய்ய வில்லை.

கீ. ஆனால் இவ்விடம்விட் டோடிப்போய், அவைகளை உனக்குக் கொடுத்தவனுக்கு வந்தனம் செய். நீ யேதோ மடையனு யிருக்கிறாய்; உன்னை உதைப்பது எனக் கிஷ்ட மில்லை.

க. கேடுகெட்ட திருடா! என் பெயரைமாத்திரம் சொல்வேனாயின் நீ நடுநடுங்க வேண்டியதே.

கீ. உன் பெயர் என்ன?

க. காதகா! என் பெயர்—களேபரன்!

கீ. காதகப் பாதகா! உன் பெயர் களேபரனு யிருந்தா லென்ன? அதைக் கேட்டு நான் நடுங்குவானேன்? அதைவிட தவளை, பாம்பு, சிலந்தி, என்று இருக்கு மாயின் சீக்கிரம் நடுக்க முண்டாகும்.

க இன்னும் உனக்குப் பய முண்டாகும்படி, அன்று, அப்படியே நீ மயங்கிப் போகும்படி, நான் அரசியின் தம்பியென அறிவாய்!

கீ. ஐயோ! அதைப்பற்றி எனக்கு வருத்தமா யிருக்கிறது, உன் குடிப் பிறப்பிற் குரிய குண முடையவனைக் காட்டவில்லையே யென்று

க. உனக்கு இன்னும் பய மில்லையா?

கீ. நான் எவர்களை மதிக்கிறேனோ, அவர்களுக்கே நான் பயப்படுவேன்—மதி யுடையோர்க்கு.—மடையர்களைக் கண்டால் நான் நகைப்பதே யொழிய, பயப்படுவ தில்லை.

க. ஆனால் உடனே சாவாய் நீ! என் சொந்தக் கையினுல் உன்னைக் கொன்றபின், சற்று முன்பாக இங் கிருந் தோடிப் போனவர்களைப் பின் தொடர்ந்து சென்று, உங்களுடைய தலைகளை யெல்லாம் கண்டி நகரத்தின் கொத்தளங்களில் கட்டித் தொங்கவிடுகிறேன். வா, மலை வாழும் பாதகா!

[சண்டை செய்துகொண்டு இருவரும் போகிறார்கள்.]

பாலராயனும், ஆர்வாரகனும் மறுபடியும் வருகிறார்கள்.

பா. வேறு ஆட்கள் வெளியில் இல்லை.

ஆ. உண்மையில் ஒருவருமே யில்லை. நீர் அவனைக் கண்டு தப்பாக எண்ணினீர் என்பதற் கைய மில்லை.

பா. நான் சொல்வதற் கில்லை. நான் அவனைப் பார்த்து நெடு நாளாயது; ஆயினும் முன் பிருந்த அவன் முகச் சின்னங்கள் இத்தனைக் கால மாயும் அப்படியே மாறாமல்தா னிருக்கின்றன; அவனது குரலின் ஜாடையு மப்படியே இருக்கிறது; அவன் பேசுகிற வெடிப்பும் அங்ஙனமே. அவன்தான் களேபரன் என்று உறுதியாய்ச் சொல்வேன்.

ஆ. இங்குதான் அவர்களை விட்டுச் சென்றோம். என் தமயன் அவனுடன் வார்த்தையாடியே காலம் கழிப்பானாக! அவன் மிகுந்த குரூரன் என்று சொல்லுகிறீரே!

பா. மனுஷ்ய சுபாவமே அவனிடம் குறைவாயிருப்பதால், அவன் பெரும் பயங்களை அறியாதவனா யிருக்கிறான், ஏனெனில் நமது அறிவே நம்மைப் பெரும்பாலும் பயப்படச் செய்கிறது.—ஆயினும் இதோ பார், உன் தமயன் வருகிறான்.

கிரிதரன் களேபரன் தலையை எடுத்துக்கொண்டு மறுபடியும் வருகிறான்.

கி. இந்தக் களேபரன் ஒரு மடையன்; வெறும் பை, உள்ளே நாணயம் ஒன்று மில்லை. பீமசேனனாலும் இவன் மூளையைச் சிதறச் செய்ய முடியாது, ஏனெனில் இவனுக்கு மூளையே முன்பு இல்லை! ஆயினும் இதை நான் செய்திராவிட்டால், இவன் தலையை நான் தூக்குவதுபோல், என் தலையை இந்த மடையன் தூக்கி யிருப்பான்.

பா. என்ன வேலை செய்தாய் நீ!

கி. நான் செய்த வேலையை நன்று யறிவேன்; அவனே கூறியபடி, அரசியின் தம்பியான ஒரு களேபரன் என்பவன் தலையை

வெட்டினேன். அவன் என்னை மலைவாசியென்றும், பாதக னென்றும் அழைத்து, தன் ஒருகையால் நம்மையெல் லாம் ஜெயித்து, ஈசன் அருளால் இப்பொழுது வளருமிட மிருந்து நமது தலைகளை நிலை பெயரச் செய்து, கண்டி நகரத் தின் கொத்தளங்களில் கட்டிவிடுவதாகச் சொன்னான்.

பா. நாம் எல்லாம் அழிந்தவர்களே !

கி. ஏன், அண்ணா ? நம்மிடமிருந்து போக்குவதாக அவன் சபதம் செய்த நம்முடைய உயிர் தவிர, நாம் இழக்கக் கூடியது நம்மிடம் வேறென்ன இருக்கிறது ? நியாய சட் டம் நம்மைக் காப்பது கிடையாது; அப்படி யிருக்கும்பொ ழுது வீராப்புப் பேசும் நிணக் குவியல் ஒன்று நம்மைப் பய முறுத்தி, நியாயவாதியும், கொலைஞனும், தானேயாக நியமித்துக்கொள்ளும்படி, நாம் அந்த நியாய சட்டத்திற் கஞ்சி இடங் கொடுப்பானேன் ?—வேறு என்ன ஆட்களை வெளியிற் கண்டீர் நீர் ?

பா. ஒரு பிராணியும் எங்கள் கண்ணிற்குப் புலப்படவில்லை. தீர்க் காலோசனை செய்து பார்க்குமிடத்து, அவனுடன் ஆட்கள் எப்படியும் வந்திருக்கவேண்டும். அவனது சுபாவம், ஒரு கெடுதியினின்றும் மற்றொரு இன்னும் கேடாம் கெடுதிக்கு, எப்பொழுதும் மாறுதலை உடைய தாயினும், என்னதான் பித்தம் பிடித்தாலும், அல்லது புத்தி மாறினும், அவனை ஒரு வரு முட னில்லாதபடி, தனியா யிங்கு வந்திடச்செய்யாது. ஒருவேளை அரண்மனையில், நம்மைப்போன்றவர்கள் இங்கு குகையில் இருந்து, வேட்டை யாடி, நியாயத்திற்குப் புறம் பானவர்களாய், வசிக்கிறார்களென்றும், காலக் கழிவில் இன் னும் பல மதிகப்பட்டு எதிரிகளாகலாமென, வதந்தி உண் டாயினு மிருக்கலாம். அதை அவன் கேள்விப்பட்டு, தான் போய் நம்மை யெல்லாம் ஜெயித்துக்கொண்டு வருவ தாக வீரம் பேசி, சபதம் செய் திருக்கலாம்; அவன் சுபா வம் அப்படிப்பட்டது; ஆயினும், அவன் தானாகத் தனியாய்

வந்திருக்கமாட்டான், அப்படிப் போகவும் அவனை விட்டிருக்கமாட்டார்களென எண்ணுகிறேன். ஆகையால், இந்த உடலுக்குத் தலையைப்பார்க்கிலும் படு விஷமுள்ள வால் ஒன்றிருப்பதாக எண்ணி, நாம் பயப்படுவதற்குத் தக்க காரணங்க ளிருக்கின்றன.

ஆ. இனி வருவது ஈசன் விதிப்படி இருக்கட்டும். எப்படி யிருந்தபோதிலும் என் தமயன் செய்தது சரியே.

பா. இன்று எனக்கு வேட்டையின்மீது விருப்பமே யில்லை. அச்சிறுவன் பாடலன் அசௌக்கியமானது, என்னைச் சீக்கிரம் திரும்பி வரும்படி உந்தியது.

சீ. என் கழுத்தின்மீது வீசிய, அவனது சொந்தக் கத்தியினாலேயே, அவன் தலையை வெட்டினேன். இதை நமது குன்றிற்குப் பின்னால் ஓடும் அருவியில் போட்டுவிடுகிறேன்; அது சமுத்திரத்திற் கடித்துக்கொண்டு போய், அங்குள்ள மச்சங்களுக்கு, இவன் அரசியின் தம்பி களேபரன், எனச் சொல்லட்டும்; அவ்வளவே நான் கவனிப்பது எல்லாம்.

[போகிறான்.]

பா. இது பழிவாங்கப்படுமென நான் பயப்படுகிறேன். பாலதரா, இந்த வீரமானது உனக்குப் பொருந்தியதே யாயினும், நீ இதைச் செய்யாதிருப்பாயாக!

ஆ. நான் அதைச் செய்திருப்பேனாக! அந்தப் பழி என்னையே பின் தொடரும்பொருட்டு. பாலதரா, தமயன் என உன்னிடம் எனக்கு வாஞ்சையே, ஆயினும் நான் அன்றி நீ இத் தொழிலைச் செய்தது, எனக்குப் பொறாமை யாகவே யிருக்கிறது. பழி வாங்கும்பொருட்டு பலம் எல்லாம் ஒருங்குகூடி, நாம் பதில் சொல்லும்படி, நம் மிருவரையும் தேடிவந் தெதிர்க்குமாக!

பா. சரி, செய் தாய்விட்டது!—இன்று இனி வேட்டை வேண்டாம். நமக்குப் பல னில்லாதபடி அபாயத்தை நாம் தேடிப்

போகவும் வேண்டியதில்லை. போ நீ, நமது குன்றிற்கு. நீயும் பாடலனும் சமையுங்கள். ஆத்திரமுடைய பாலதரன் திரும்பி வருமளவும் இங்கிருந்து, அவனைப் போஜனத்திற் கழைத்து வருகிறேன் உடனே.

ஆ. ஐயோ! பாபம்! பாடலன் தேக சுகமின்றி இருக்கிறான். விருப்பமுடன் அவனிடம் போகிறேன் நான். அவனுக்கு ரக்த புஷ்டி யுண்டாக, பதினாயிரம் களேபரர்களின் ரக்தம் பெருகச்செய்து, அந்தத் தர்ம காரியத்தின்பொருட்டு என்னைப் புகழ்ந்துகொள்வேன். [போகிறான்.]

பா. பிரகிருதி என்னும் தெய்வீகமே! இந்த இரண்டு ராஜ குமாரர்களிடத்தில் நீ எவ்வளவு உண்மையாகப் பிரகாசித்துக் காட்டுகிறாய்! நீலோற்பலங்களின்மீது, அதன் அழகிய மொட்டுகளையும் அதிகமாய் அசைக்காதபடி மெல்லென வீசும் தென்றலைப் பார்க்கிலும், மிருதுவா யிருக்கிறார்கள்; ஆயினும் அவர்களது க்ஷத்ரிய உதிரம் கொதிப்படைந்தால், மலையி னுச்சியி லிருக்கும் பெரு மரங்களை யெல்லாம் தாழ் வரைகள்வரையில் வணங்கும்படி செய்யும் சண்ட மாருதங்களைப்போல், அந்தனைக் குரூரமா யிருக்கிறார்கள்; வேறொருவரால் கற்பிக்கப்படாமலே, அவர்களிடம் அரசர்க்குரிய பெருந்தன்மையும், மானமுமே, மற்றவர்களிடம் காணா மரியாதையும், தானாக எதேச்சையாய் வளர்ந்தும் விதைத்ததுபோல் பலனைத் தரும் வீரமும், கண்ணுக்குப் புலப்படா சுபாவமானது, அவர்களிடம் உண்டுபண்ணுவது என்ன ஆச்சரியம்! ஆயினும் களேபரன் இங்கு வந்ததும், அவன் இப்படி மரணமடைந்ததும், நமக்கு என்ன அனர்த்தம் விளைக்குமோ என அஞ்சுகிறேன்.

கிரிதரன் மறுபடியும் வருகிறான்.

கி. எங்கே என் தம்பி? அந்த மூடக் களேபரன் மண்டையை அவன் தாயாரிடம் ஆற்றில் அடித்துப் போகவிட்டேன்,

தூதனுக. அவன் திரும்பி வருதற்கு அவன் உடல்தான் ஜாமீன்.

[துக்ககரமான சங்க நாதம் கேட்கிறது.]

பா. நான் குடைந் தெடுத்த சங்கம்! அப்பா! பாலதரா, கேள், அது சப்திக்கிறது! கடுவேலன் அதைச் சப்திக்கவேண்டிய சந்தர்ப்ப மென்ன இப்பொழுது?—அதோ கேள்!

சி. அவன் வீட்டிலா இருக்கிருன்?

பா. இப்பொழுதுதான் அங்கு போனுன் அவன்.

சி. அவன் எண்ண மென்ன? என் பிரியமான தாயார் மடிந்த பிறகு அது இதுவரையில் சப்தித்ததே யில்லை இம் மாதிரி யான சங்கீதமெல்லாம் பெருந் துயரங்கள் நேரிடும் சமயங்களிலேயே ஒலிக்கவேண்டும். விசேஷம் என்ன? ஒன்று மில்லாததற்கு உற்சாக மடைதல் குரங்குகளின் குதூஹலமாகும்; அற்ப விஷயங்களுக்கு அலலப்படல் அதி பால்யர் களின் அழுகை யாம். கடுவேலனுக்குப் பயித்தியம் பிடித்ததா என்ன?

பா. அதோ பார்! வருகிருன் அவன். நாம் கடிந்து பேசும் துக்கத்திற்குக் காரணத்தைக் கரத்தி லேந்தி வருகிருன்!

மடிந்ததுபோ லிருக்கும் ஹேமாங்கியை ஆர்வாரகன் கையில் தாங்கி வருகிருன்.

ஆ. நாம் அத்தனை ஆசையாய் வைத்திருந்த அழகிய கிளி, ஆவி நீங்கியது! இதைப் பார்க்கவேண்டி நேரிட்டதைவிட, குதிக்கவேண்டிய காலத்தைக் கோலூன்றும் காலமாக்கி, பதினறு வயது வாலிபத்தினின்றும் அறுபது வயது விபோதிகனுகி மாற இசைந்திருப்பேன்.

சி. அருமையாம் அழகிய அதிசயமே! நீ உயிர் வாழ்ந்தபொழுது உன் உடலை நீ தாங்கியதில், அரைப் பங் களவு அழகாய் உன்னை என் தம்பி தாங்க வில்லை.

பா. ஹா, சோகமே! உனது கடலின் கரையினைக் கண்டவர் யாவர்? உன்னிடம் அகப்பட்டுத் தத்தளிக்கும் மாந்தர் தப்பிப் பிழைக்கக் கைப்பற்றத்தக்க புணையினைக் கண்டறிந்தார் யார்?—அருஞ் செல்வமே! நீ வாழ்ந்திருப்பா யாயின் என்ன உத்தமனாய் வளர்ந்திருப்பா யென்பது ஈசனே அறிவார்! ஆயினும், அந்தோ! அருங் குழந்தாய், சோகத்தினால் நீ சிறு வயதிலேயே மடிந்தாய்!—நீ பார்த்தபொழுது எப்படி இருந்தான்?

விரைத்துப்போய், நீங்கள் பார்க்கிறபடி, இவ்வாறு நகைத்த முகமாய்; உறக்கத்தில் ஏதோ கொசு கூச்சங் காட்டியது போல், யமனது பாசத்தைக் கண்டு பயப்படுபவன்போல் அல்லாமல், வலது கன்னம் அணையின்மீது வைத்தவனாய்.

கி. எங்கே?

ஆ. தரைமீது; கைகளை இப்படிச் சேர்த்தவண்ணம்; அவன் உறங்குவதாக எண்ணி, நான் அடி வைக்கும்பொழுது எனது பாதரட்சைகள் அதிக சப்தம் செய்தன என நினைத்து, அவைகளை என் காலினின்றும் எடுத்துவிட்டுச் சென்றேன் அருகில்.

கி. ஏன்? இன்னும் அவன் உறங்குவதுபோல்தா னிருக்கிறது; அவன் ஆவி போயிருநதால் தன் படுக்கையையே சமாதியாகக் கொள்வான்.—தேவமாதரே உனது சமாதியைச் சூழ்ந்து நிற்பார்! கிருமிகள் ஒன்றும் உன்னைக் கிட்ட மாட்டா!

ஆ. பாடலா! நான் இங்கு வாழ் நாளெல்லாம், வசந்த காலமெல்லாம், அழகிய புஷ்பங்களால் உனது துக்கமுடைச் சமாதியை சிருங்காரிப்பேன். உனது முகம் ஒத்த அரவிந்தமும், கண் ணொத்த நீலோற்பலமும், உனது சுவாசமொத்த வாசனையுடைய மல்லியும், வாரி இறைப்பேன், உன் உடல்மீது. புஷ்பங்கள் கிடைத்தற் கரிய மழைக்

காலத்திலும் உன்னை மறவா திங்ஙனமே மலர்கள் தூவு வேன். தங்கள் தகப்பனார்களுடைய அபரிமிதமான ஐஸ்வர்யத்தை யடைந்தும், அவர்களுக்குச் சமாதி யொன்றும் கட்டாது வாழும் சீமான்களை வெட்கிடச் செய்யும்படி, வன தேவதைகளே உனது சமாதியின்மீது பூ மழை பொழிந்து அலங்கரிப்பார்களாக!

கி. போதும் நிறுத்து, துக்ககரமான இவ் விஷயத்தில் பெண் பேதையைப்போல் பிதற்றுதே. நாம் சமாதியில் வைத்திடு வோம் இவனை. இனி நாம் செலுத்தவேண்டிய கடனைக் கழிப்போம், வியர்து பேசி வெறுங் காலம் போக்கவேண் டாம்.—போவோம் சமாதிக்கு!

ஆ. எங்கே வைப்போம் இவனை, சொல்.

கி. நமது தாயார், மாயூரவல்லியண்டையில்.

ஆ. அப்படியே செய்வோம். அண்ணு, பாலதரா, முன்பொருகால் பாடி நமது தாயாரைப் படுக்க வைத்ததுபோல், நமது குரல் கள் வயதினுல் உடைந்திருந்தபோதிலும், இவனையும் சங்கீ தத்துடன் சமாதியில் வைப்போம். அதே ராகமும், அதே பாட்டும் பாடுவோம். மாயூரவல்லி என்பதற்குப் பதிலாக பாடலன் என்று மாற்றவேண்டியதே, அவ்வளவுதான்.

கி. கடுவேலா, என்னுல் பாட முடியாது, நான் அழுது உன் னுடன் அந்த வார்த்தைகளைக் கூறுகிறேன். ஏனெனில் துக்ககரமான சங்கீதம், ஸ்ருதி தப்பு மாயின், பொய்யி னைப் புகலும் போதகர்களையும், மடாதிபதிகளையும்விட இழிந்த தாகும்.

ஆ. ஆனுல் நாம் அதை ஒப்புவிப்போம்.

பா. பெரும் துயரங்கள், அற்ப துக்கங்களை ஆற்றும் ஔஷதங்க ளாகின்றன என்பதை அறிகிறேன்! இதோ பாருங்கள், களேபரனை முற்றிலும் மறந்துவிட்டோம். குழந்தைகளே, அவன் அரசியின் தம்பி. அவன் நமது வைரியாக வந்த

போதிலும், அதன் பலனை அநுபவித்துவிட்டான். உயர்ந்தன வாயினும், இழிந்தன வாயினும், மடிந்தபின், எல்லாம் ஒரு மண்ணே யாகும்! ஆயினும், உலகில் தெய்வீகத்திற் கொப்பான மரியாதையானது, உயர்ந்ததென்றும், தாழ்ந்ததென்றும், ஸ்தான பலத்தினால் பேதிக்கச் செய்கிறது. நமது எதிரி ராஜகுமாரன், நமது பகைவனைதுபற்றி அவனை நீங்கள் கொன்றபோதிலும், அவனை அரசர்க் குரிய மரியாதையுடன் நீங்கள் சமாதியில் வைக்கவேண்டும்.

சி. நீர் போய் அவனைத் தயைசெய்து கொண்டு வாரும். இருவரும் மரித்தபின, மயானக் காவலாளியி னுடல் மன்னவனுடலுக்குச் சமான மானதே யாம்.

ஆ. தாங்கள் போய்க் கொண்டு வருவதானால், நாங்க ளிருவரும் அந்தப் பாட்டை ஒன்றாய்ப் பாடுகிறோம் அதுவரையில்.—அண்ணா, ஆரம்பி. [பாலராயன் போகிறான்.]

கி. அப்படி யல்ல, கடுவேலா, இவன் தலையைக் கிழக்கு முகமாக வைக்கவேண்டும. நமது தந்தை அதற்கு ஒரு காரணம் கூறுவார்.

ஆ. ஆம், உண்மையே.

கி. வா ஆனால், கொண்டுபோய் வைப்போம் அவனைச் சமாதியில்.

ஆ. அப்படி—ஆரம்பி. [பாடுகிறார்கள்.]

திருச்சிற்றம்பலம்.

செழுக்கமலத் திரளனநின் சேவடி சேர்ந்தமைந்த
பழுத்தமனத் தடியருடன் போயினர்யான பாவியேன்
புழுக்கணுடைப் புன்குரம்பைப் பொல்லாக்கல்வி ஞானமிலா
அழுக்கு மனத் தடியேன் உடையா யுன் னடைக்கலமே.

வழுங்குகின்றாய்க் குன்னருளா ரமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின்றேன் விக்கினேன் வினையேயென் விதியின்மையாற்
றழுங்கருந்தே னென்ன தண்ணீர்பருகத் தந்துய்யக்கொள்ளாய்
அழுங்குகின்றேன் உடையா யடியேனுன் னடைக்கலமே.

திருச்சிற்றம்பலம்.

பாலராயன், கனேபரன் முண்டத்தைத் தூக்கிக்கொண்டு, மறுபடியும் வருகிறான்.

கி. எங்கள் சமாதிக் கிரியை தீர்ந்தது; வாரும், அவனைக் கீழே வையும்.

பா. இதோ சில புஷ்பங்க ளிருக்கின்றன. இரவில் இன்னும் கொஞ்சம் சாத்துவோம். இரவின் பனி தங்கிய மலர்களே சமாதிக்குப் பக்குவமான புஷ்பங்கள்—இவர்களை மல்லார்ந்து படுக்க வையுங்கள்—நீங்கள் புஷ்பங்களைப்போல் இருந்தீர்கள், இப்பொழுது வாடிப்போ யிருக்கிறீர்கள். இப்பொழுது நாங்கள் உங்கள்மீது தூவும் இந்த மூலிகைகளும், இவ்வாறே வாடி வதங்கிப்போம்.—வாருங்கள் போவோம். பக்கமாய்ப் போய் வணங்கிப் பிரார்த்திப்போம் பகவானை. எந்த மண் அவர்களை உற்பத்தி பண்ணியதோ, அதனிடமே மறுபடியும் போய்ச் சேர்ந்தார்கள். அவர்களது இன்பமும் துன்பமும், எல்லாம், இன்றுடனே தீர்ந்தது.

[பாலராயன், கிரிதரன், ஆர்வராகன் போகிறார்கள்.]

ஹே. [கண் விழித்து] ஆம், ஐயா! காங்கேயன் துறைக்குத்தான்; வழி எப்படி? உமக்கு மிகவும் வந்தனம்.—அந்தப் புதரைக் கடந்தா?—அதற்கும் இதற்கும் இன்னும் எவ்வளவு தூரம்? தயைசெய்து சொல்லவேண்டும்.—அப்பாடா! இன்னும் ஆறு காத மிருக்குமா?—இரவெல்லாம் நடந்தேனே—சரி, நான் படுத் துறங்குகிறேன். பொறு! பக்கத்தில் யார்? ஈசனே! ஜகதீசனே! [முண்டத்தைக் கண்டு] இப் புஷ்பங்களெல்லாம் இவ் வுலக வின்பங்களைப் போலவும், இந்த ரக்தம் படிந்த மனிதன், அதன் துன்பத்தைப்போலவும் காணப்படுகிறான்! இதெல்லாம் கனவா யிருக்குமெனக் கோருகிறேன். சற்று முன்பாக, நான் ஒரு குகையி லிருந்து உத்தமப் பிராணிகளுக்கு உண வளித்ததாக, எண்ணி யிருந்தேன். ஐயோ! அது அங்ஙன மன்றே. அது ஒன்றுமில்

லாததாலாகிய வெட்ட வெளிச்சமே! காற்றின்மீ தெய்யப் பட்ட மதி மயக்கத்தினு லுண்டான மருட்சியே! நமது கண்களும், நமது புத்தியைப்போல், சில சமயங்களில் பொட் டையாய்ப் போகின்றன. உண்மையில், பயத்தினல் இன் னும் என் உடல் நடுங்குகின்றது. கடுகின் மூக் களவு கரு ணையின் திவலை உம்மிட மிருக்குமாயின், ஈசனே, அதில் ஒரு பங்கையாவது எனக் கருளும்! இன்னும் அந்தக் கனவு இருக்கிறதே இங்கே! நான் விழித்துப் பார்க்கும்பொழுதும் உள்ளே யிருப்பதுபோல், வெளியிலும் இருக்கிறதே! என் மனம் எண்ணுவ தன்றே இது! பிரத்யட்சமாய் இருக்கி றதே! தலை யற்ற முண்டம்! ஆ! என் பிராணநாதருடைய ஆடை! ஐயோ! அவரது கால்களை நா னறிவேன்! இது தான் அவரது கை! அவருடைய பத்மம்போன்ற பாதம், போர் வீரர்க் குரிய துடை, பீமனது மார்பு,—ஆயினும் முருகனைப்போன்ற அவரது முக மெங்கே! ஈசனே! இதென்ன கொடுங் கொலை! என்ன? அதைக் காணும்! விசாகா! மதி யிழந்த காந்தாரி பாண்டவர்களுக் கிட்ட சாப மெல்லாம், என்னுடைய சாபத்துடன் சேர்ந்து, உன் தலையில் விழுமாக! நீயும் அந்தப் பரமபாதகன் களேபர னுடன் கூடி, என் பிராணநாதர் தலையை இங்கே வெட்டி விட்டாய்! எழுதுவதும் படிப்பதுமே இனி துரோகமா குக! அப் பாதகன் விசாகன் தன் பொய்க் கடிதங்களின் உதவியால்—அந்தப் பாழும் பாபி—உலகில் உயர்வு ஒப்பு இல்லா இவ்வுடலினின்றும் சிரேஷ்டமான சிரசைச்சேதித்து விட்டான். ஆ! பிராணநாதா! ஐயோ! உமது சிரம் எங்கே யிருக்கிறது? எங்கே போயது? ஐயோ! எங்கே அது! விசாகன் உம்மை ஹிருதயத்திற் குத்திக் கொன்று அத் தலையுடன் விட்டிருக்க லாகாதா? இது எப்படி நேர்ந்திருக் கும்? விசாகனலா? ஆம், அந்தப் பாபியும் களேபரனும் தான். பொறாமையும் பே ராசையுங் கூடியே இத் துன் பத்தை இங் கிழைத்தன! ஆ! இப்பொழுது எல்லாம்

தெரிகிறது, தெரிகிறது! அவன் மிகுந்த விலை யுயர்ந்த நன்மை பயக்கும் மருந்தென எனக்குச் சொல்லிக் கொடுத்த ஔஷதம், என் ஐம் பொறிகளையும் அடக்கும் சக்தி யுடையதாக நான் காண வில்லையா? அது எல்லாவற்றையும் ஊர்ஜ்ஜிதப்படுத்துகிறது முற்றிலும். இது விசாகனும் களேபரனும் செய்த வேலையே! ஐயோ!— அகஸ்மாத்தாய் இங்கு நம்மைக் காண்பவர்க்கு, நாம் அதிக கோரமாய்த் தோற்றும்பொருட்டு, உமது ரக்தத்தினால் எனது முகம் சிவந்து காட்டும்படிச் செய்கிறேன். ஹா! பிராணநாதா! பிராணநாதா! [மூர்ச்சையாகிறாள்.]

லோகசேனன், ஒரு தளகர்த்தன், இன்னும் மற்ற ராணுவ உத்தியோகஸ்தர், ஒரு ஜோசியன் வருகிறார்கள்.

த. அவர்களுக்கு உதவியாக, காலபுரத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருந்த சைனியங்கள், உமது இச்சையின்படி, சமுத்திரத்தைத் தாண்டி வந்து சேர்ந்தன; காங்கேயன் - துறையில், உமது கப்பல்களோடு உம்மிடம் வந்திருக்கிறார்கள்; அவர்கள் எல்லாம் சித்தமா யிருக்கிறார்கள்.

லோ. மதுரையிலிருந்து என்ன செய்தி?

த. நமது சங்கத்தார் பாண்டிய நாட்டில் உறையும் வீரர்களை யெல்லாம் எழுப்பிவிட்டார்கள். அவர்களெல்லாம் எப்படியும் தங்கள் தேசத்திற்குப் புகழைக் கொண்டுவரவேண்டுமென்னும் முழு மன துடையவர்கள். வீரனான, சீய நாதன் தம்பி சயாகாமன், அவர்களை யெல்லாம் அழைத்து வருகிறான்.

லோ. அவர்கள் எப்பொழுது வந்து சேர்வார்கள் என்று எண்ணுகிறாய்?

த. காற்று திரும்பியவுடன்.

லோ. இந்த ஆயத்தமானது, தமது கோரிக்கைகள் கைகூடுமெனக் கோரச் செய்கிறது. இப்பொழுது நம்மிட மிருக்கும் சைனியங்களை யெல்லாம் ஒருங்கே சேர்க்கும்படி உத்திரவு செய்; தளகர்த்தர்களெல்லாம் இவ் வேலையைப் பார்க்கும்படி செய்.

[தளகர்த்தன் போகிறான்.]

பிறகு, ஐயா, இப்பொழுது நடக்கப்போகிற யுத்தத்தைப் பற்றி ஆரூட மெப்படி யிருக்கிறது ?

ஜோ. நேற்றிரவு தெய்வ கடாட்சத்தால் நான் ஒரு கனவு கண்டேன். நான் பட்டினி யிருந்து, ஏதாவது குறி காட்ட வேண்டுமென்று பகவானைத் தொழுது, படுத் துறங்கினேன். அப்பொழுது பாண்டிநாட்டு மகர மொன்று தென் திசை நோக்கி இவ்விடம் வந்து இங் குள்ள ஜோதியிற் கலந்ததாக கனவு கண்டேன்; என் பாவ கிர்த்தியங்கள் என் திருஷ்டியைக் கெடுத்திராவிட்டால், நான் கண்டதின் பலன், நமது படைகளுக்கு ஜெயத்தைக் குறிக்கவேண்டும்.

லோ. அப்படியே பலமுறை கனவு காண்பாயாக! அப்படியே உண்மையில் நடந்தேறுமாக '—ஆ! பொறு! இதென்ன தலை யில்லா முண்ட மொன்று கிடக்கிற திங்கே? இந்தப் பாழை நோக்குங்கால் சற்றுமுன் உயிர் குடிகொண் டிருந்த உத்தமமான உடலம்போல் தோற்றுகிறது.—என்ன? ஒரு வேலையாள்! அவனும் மரித்தானோ? அல்லது அவன்மீது உறங்குகின்றானோ? இறந்ததாகத்தான் எண்ணுகிறேன்; மடிந்ததின்மீது படுத் துறங்க சுபாவம் ஒப்பாது, வெறுத்திடும் - இந்தப் பையன் முகத்தைப் பார்ப்போம்.

உ. ஐயா! அவன் உயிரோ டிருக்கிறான்.

லோ. ஆனால் இவ் வுடலைப்பற்றி இவன் நமக்குத் தெரிவிப்பான்.—சிறு பிள்ளையே! உன் விர்த்தாந்தத்தை எமக்குச் சொல்வாய். அவைகள் கேட்கப்படவேண்டுமென்று விரும்புவது போல் தோற்றுகின்றன. ரக்தம் பெருகும் உனது தலை

அணையாகக் கொள்ளும் தலையில்லா இவன் யார்? சுவாமி சிருஷ்டித்த வண்ணமிராது, இந்த உத்தம உருவை இவ்வாறு அலங்கோலமாய்ச் செய்தவன் யார்? உனக்கும் இந்தப் பரிதாப மாம் பாழுக்கும் என்ன சம்பந்தம்? இது எப்படி நேர்ந்தது? யார் இது? நீ யார்?

ஹே. நான் ஒன்றும் இல்லாதவன். அன்றேல் ஒன்று மில்லா திருப்பது, இதைவிட மேலான தாம். இவர் என் எஜமானாக இருந்தவர், அதி சூரனுன நற்குண முடைய சிம்ஹளவீரன், மலைவாசிகளால் கொல்லப்பட் டிங்கே கிடக்கிறார்.—ஐயோ! இனி அப்படிப்பட்ட எஜமானன் இவ் வுலகில் எனக்குக் கிட்டமாட்டார்! தெய்வ லோகமுதல் பாதாளம்வரை நான் தேடிச் சென்றாலும், பணிவிடை செய்யப் பரிந்து கூவினும், நல்லோர் எல்லோரையும் பரீட்சித்தாலும், எவ்வளவுதான் உண்மையோடு ஊழியம் செய்தாலும், இவரைப்போன்ற நாதன் கிடைப்ப தரிது!

லோ. அந்தோ, பிள்ளாய்! உனது எஜமானன் ரத்தம் பெருகக் கிடைப்பதைவிட, நீ அவர் பொருட் டழுவதானது என்னை உருகச் செய்கிறது; அவர் நற் பெயர் என்ன சொல் அப்பா?

ஹே. ராஜசேகர சாம்பன்.—[ஒரு புறமாக] நான் பொய் புகன்று, அதனால் ஒரு கெடுதியும் செய்யாவிட்டால், ஈசனே அதைக் கேட்டபோதிலும், என்னை அதன்பொருட்டு மன்னிப்பார்.—என்ன கேட்கிறீர் இன்னும்?

லோ. உன் பெயர்?

ஹே. பாடலன், ஐயா.

லோ. உன் பெயர் உனக்குத் தகுந்ததா யிருக்கிறது; உன் பெயருக்குத் தகுந்த உருவ மிருக்கிறது உன்னிடம், உருவத்திற்குத் தக்க பெயரா யிருக்கிறது. என்னிடம் ஊழியனா யிருந்து பார்க்கிறாயா? உன்னுடைய பழய எஜமானனைப்போல் அவ்வளவு நற்குணம் வாய்ந்தவன் என்று, என்னைச் சொல்லிக்

கொள்ளமாட்டேன். ஆயினும் இதைமாத்திரம் உறுதியாய் நம்பு, அவரைப்போலவே உன்மீது பிரீதி வைத்திருப்பேன். தன் பிரதிநிதிமூலமாக எனக்கு அனுப்பப்பட்ட, பாண்டிய ராஜன் கடிதங்களைவிட, உன் நன்னடக்கையானது, உன்னை என்னிடம் அதிகமாய்ச் சிபாரிசு செய்கிறது. என்னுடன் வா.

ஹே. ஐயா, உமது பின்னுல் வருகிறேன். ஆயினும் ஈசனுக் குவப்பாம்படி, ஏழ்மையான மண் வெட்டிகளாகிய என் கைவிரல்களினுல் ஆழமாய்க் குழியொன்று தோண்டி, ஈக்கள் மொய்க்காவண்ணம் அதில் என் எஜமானனை அடக்கம் செய்கிறேன். பிறகு இந்தக் காட்டு இலை கொடிகளால், அவர் சமாதியைப் பரப்பி, அதன்மேல் நா னறிந்தபடி நூறு ஜெபம் இரு முறை செய்துவிட்டு, அழுது பெரு மூச்சு விட்டுவிட்டு, அங்ஙனம் அவர் ஊழியத்தினின்றும் விடைபெற்று, உம்மைப் பின் தொடர்கிறேன், என்னை உமது ஊழியனுகக் கொள்ள விரும்புவீ ராயின்.

லோ. ஆம், அப்பா; அப்படியே செய். உனது எஜமானனு யிருப்பதைவிட உன் தந்தையாக இருக்க என் னிஷ்டம்.—நண்பர்களே! நாம் செய்யவேண்டிய கடமையை இச் சிறுவன் நமக்குக் கற்பித்தான். நல்ல புஷ்பங்கள் மணங் கமழும் இடமொன்றைப் பார்த்து, அவ்விடம் நமது ஈட்டிக் கோடாலிகளால் ஒரு சமாதி தோண்டுவோம் இவனுக்கு. வாருங்கள், எடுங்கள் அவனை.—குழந்தாய், உன்னுல் உனது எஜமானன் சிபாரிசு செய்யப்படுகிறுன்; ஆகவே, உனது எஜமானன் சுத்தவீரர்களால் சமாதியில் வைக்கப்படுவான். வருத்தப்படாதே இனி. உன் கண்ணைத் துடைத்துக்கொள். சில சமயங்களில் நாம் கீழே விழுதல், இன்னும் அதிக சந்தோஷத்துடன் எழுவதற் கோர் ஹேதுவாகிறது.

[போகிருர்கள்.]

காட்சி முடிகிறது.

## மூன்றும் காட்சி.

இடம்—சிம்ஹளம். சிம்ஹளநாதன் அரண்மனையில் ஓர் அறை.

சிம்ஹளநாதன், மந்திரிகள், விசாகன், மற்ற வேலையாட்கள் வருகிறார்கள்.

சி. போ மறுபடியும்; அவளுக்கு உடம்பு எப்படி யிருக்கிறதென்று போய்ச் செய்திகொண்டுவா என்னிடம்.

[ஒரு வேலையாள் போகிறான்.]

அவள் தம்பி காணாமற்போனதுமுதல் ஒரு ஜுரம், ஓர் வித பயித்தியம், அதனால் அவளுயிரே ஹானியில் இருக்கிறது. ஜகதீசனே! எல்லாத் துயரங்களும் ஒரே சமயத்தில் என்னை வந்து எவ்வளவு பீடிக்கின்றன! இதுவரையில் எனக்குப் பெரும்பாலும் ஆறுதலா யிருந்த ஹேமாங்கியும் போய்விட்டாள்; என் அரசி வியாதியால் மிகவும் பீடிக்கப்பட்டு படுக்கையிற் கிடக்கிறாள், அதுவும் என்மீது பகைவர் பயங்கரமாய்ப் படையெடுத்து வருங்கால்; தற்காலத்தில் அதிகமாய் உதவத் தக்க அவளது தம்பியும் போய்விட்டான். நான் மீள்வேன் என்னும் கோரிக்கையும் நான் கொள்ள இடங் கொடாதபடி, இவைகளெல்லாம் என்னைப் பீடிக்கின்றன!—ஆயினும், அடே பயலே, அவள் புறப்பட்டுப்போன விஷயம் நீ நன்று யறிந்திருக்கவேண்டும்; அங்ஙனம் இருந்தும் ஒன்றும் அறியாதவன்போல் பாசாங்கு செய்கிறாய்; ஆகவே, உன்னைக் கொடிய வேதனையிற்படுத்தி, உண்மையை உன்னிடமிருந்து வெளிப்படுத்துகிறோம்.

வி. மஹாராஜா, என் னுயிர் தங்களுடையது, அதைத் தம திச்சைப்படி செய்ய உமது பாதத்தில் சமர்ப்பிக்கிறேன். ஆயினும், என்னுடைய எஜமானியைக் குறித்து, அவர்கள் இப்பொழுது எங் கிருக்கிறார்கள், ஏன் போனார்கள், எப்பொ

மூது வர உத்தேசங்கொண்டிருக்கிறார்கள், என்பது ஒன்றை யும் அறியேன் நான். மஹாராஜாவை வேண்டிக்கொள்ளு கிறேன், தாங்கள் எப்பொழுதும் அடியேனைத் தம்முடைய உண்மையான ஊழியனாக மதிக்கவேண்டும்.

மூ. ம. எம்மிறையே, தம்முடைய மகள் காணாமற்போன தினம் இவன் இங்கிருந்தான்; இவன் எல்லா விஷயங்களிலும் தமக்குக் கீழ்ப்படிந்து உண்மையான ஊழியனாய் நடந்து கொள்வான் என்று, நான் உத்திரவாதமிருப்பேன். களே பரரைப்பற்றி,—அவரைத் தேடிக் கண்டுபிடிக்கும் விஷ யத்தில் அஜாக்கிரதை என்பது கொஞ்சமேனும் இல்லை. சந்தேகமின்றி அவர் எப்படியும் கண்டுபிடிக்கப்படுவார்.

சி. என்ன கஷ்ட காலமா யிருக்கிறது!—[விசாகனுக்கு] இம் முறை உன்னைச் சும்மா விட்டுவிட்டோம். ஆயினும் நமது கோபமானது முற்றிலும் தணிய வில்லை.

மூ. ம. மஹாராஜா அவர்களுக்கு விண்ணப்பம்.—கால தேசத்தி னின்றும் சேர்க்கப்பட்ட பாண்டிய சைனியங்கள், நமது கடற்கரை யோரம் வந்து சேர்ந்திருக்கின்றன. அவர்க ளுடன், மதுரைச் சங்கத்தாரால் அனுப்பப்பட்ட சில முக் கிய வீரர்களும் வந்திருக்கிறார்கள்.

சி. ஹா! எனது ராணியும் அவள் தம்பியும் இப்பொழுது என் பக்கத்திலிருந்து ஆலோசனை கூறுவார்க ளாயின்! இவ் விஷயங்களை யெல்லாம் கேட்டு நான் திக்பிரமை கொண்டவனா யிருக்கிறேன்.

மூ. ம. எம்மிறையே, நாம் சித்தம் செய்திருக்கும் சைனியமானது, இப்பொழுது நாம் கேள்விப்படும் பகைவர் சைனியத்தை எதிர்க்கப் போதுமானது; இன்னும் அதிகமாய் வந்தால், அதற்கும் தாம் சித்தமா யிருக்கிறீர். இப்பொழுது இருக் கும் குறையெல்லாம், பகைவர்மீது செல்ல ஆவல்கொண்

டிருக்கும் இச் சைனியங்களுக்கு, அங்ஙனம் செய்யும்படி உத்திரவு கொடுக்கவேண்டியதுதான்.

சி. மிகவும் சந்தோஷம்.—நாம் புறப்படுவோம். நம்மை நாடி வருவதை நாமாக எதிர்கொண்டு சந்திப்போம். பாண்டிய நாட்டினின்றும் நம்மை அல்லற்படுத்த வருவதைக் குறித்து நாம் பயப்படவில்லை; இங்கு நம்மைப் பீடிக்கும் துன்பங்களைக் குறித்தே துயரப்படுகிறோம்—போங்கள்!

[விசாகன் தவிர, மற்றெல்லோரும் போகிறார்கள்.]

வி. ஹேமாங்கிதேவி கொல்லப்பட்டதாக நான் அவருக்கு எழுதிய பிறகு, எனது எஜமானனிடமிருந்து ஒரு கடிதமும் வரவில்லை. என்ன ஆச்சரியம்! அடிக்கடி எனக்குச் சங்கதி தெரிவிப்பதாக வாக்களித்த என் எஜமானியிடமிருந்தும் ஒரு சமாசாரமும் வரவில்லை. கம்பரர் கதி என்னவாயிற்றோ, அதுவும் தெரியவில்லை. எல்லா விஷயங்களிலும் மனம் குழப்பமடைந்திருக்கிறேன்—ஜகதீசன்தான் எல்லாவற்றையும் சரிப்படுத்தவேண்டும். நான் எவ்விஷயத்தில் துரோகியாகக் காணப்படுகிறேனோ, அவ் விஷயத்தில்தான் உண்மையான ஊழியனாயிருக்கிறேன்; உண்மையாயிருக்கும்பொருட்டு பொய்யனாகிறேன்; இப்பொழுது நடக்கப்போகிற யுத்தமானது, எனது நாட்டின்மீது நான் பிரியம் வைத்திருப்பதை, அரசர்க்குக்கூட அறிவிக்கும், இல்லாவிட்டால், இச் சண்டையில் நான் மடிவேன். காலக்கழிவே மற்றச் சந்தேகங்களையெல்லாம் நிவர்த்திக்கவேண்டும். மாலுமிகளால் ஓட்டப்படாத சில கப்பல்களும், அதிர்ஷ்டவசத்தால் சுகமாய்த் துறைமுகம் வந்து சேர்கின்றன.

[போகிறான்.]

காட்சி முடிகிறது.



## நான்காம் காட்சி.

இடம்—வேலே. பாலராயன் குகைக் கெதிர்.

பாலராயன், கிரிதரன், ஆர்வராஜன் வருகிருர்கள்.

கி. ஆரவாரமானது நம்மைச் சுற்றிலும் இருக்கிறது.

பா. இதை விட்டுப் போவோம் நாம்.

ஆ. ஐயா, யுத்தங்களினின்றும், துணிகரமான காரியங்களினின்றும், நம துயிரைப் பாதுகாத்து வாழ்வதில், நமக் கென்ன சந்தோஷ மிருக்கிறது ?

கி. அன்று, நாம் ஒளிந்திருப்பதினல் நம்முடைய கோரிக்கைகள் என்ன ஈடேறப்போகின்றன ? இம் மார்க்கத்தில், பாண்டியர் நம்மைச் சிங்களவரென்று கொல்லவாவது போகிருர்கள், அல்லது அவர்களுக்கு அனுகூலமா யிருக்கும்வரையில், சொந்த இனத்தார்க்குத் துரோகிகளான முறட்டுப் பாதகர்களென்று நம்மை நல்வர வழைத்து, அவர்கள் வேலே முடிந்ததும், பிறகாவது நம்மைக் கொல்லப்போகிருர்கள்.

பா. குழந்தைகளே, மலேமீது இன்னும் உயரமாய்ப் போவோம். அங்கே நம்மைப் பாதுகாத்துக்கொள்வோம். அரசனுடைய சைனியத்திற்கு நாம் போவோம் என்பது அடாது; நம்மை அவர்களுக்கு இன்னூ ரென்று தெரியாது, அவர்களுடைய படைக் கணக்கில் நாம் குறிக்கப்பட்டவர்க ளல்ல. ஆகவே, சற்று முன்பாக மடிந்துபோன களேபரன் மரணத்தைக்குறித்து அவர்கள் விசாரிக்கு மளவில், நாம் எங்கே வாழ்ந்துவந்தோ மென்பதை நாம் வெளியிடவேண்டி வரும்; அதன் மூலமாக நாம் செய்த வேலேயும் பலவந்தமாக வெளிப்படுத்தப்பட்டு, அதற்காக யம வாதனைக் குட்படுத்தி நம்மைக் கொல்வார்கள்.

கி. ஐயா, இச் சந்தேகமானது இச் சமயத்தில் உமக் கேற்றதான தன்று, எங்களுக்கும் திர்ப்திகரமா யில்லே.

ஆ. பாண்டியர்களுடைய குதிரைகள் கனைத்தலைக் கேட்டு, அவர்கள் தங்கியிருக்கும் கூடாரங்களருகில் போடப்பட்ட தீ மூட்டங்களையுங் கண்டு, அவர்களுடைய கண்களும் காதுகளும் இப்படிப்பட்ட முக்கியமான விஷயங்களால் இப்பொழுது நிரம்பி யிருக்கும்பொழுது, நம்மைக் கவனித்து, நாம் எங்கிருந்து வந்தவர்கள் என்பதை விசாரிப்பதில், அவர்கள் தங்கள் காலத்தைப் போக்குவார்கள் என்பது, மிகவும் சந்தேகமான விஷயம்.

பீ. ஆ! சைனியத்தில் அநேகர் என்னை அறிவார்கள். அநேக வருஷங்களுக்கு முன்பாக, அவன் சிறுவனா யிருந்தபோது நான் களேபரனைப் பார்த்தது, நீங்கள் அறிந்தபடி, இன்னும் என் மனத்தில் மாறா திருந்தது. அன்றியும், நான் அவருக்கு உதவி செய்ய அரசன் அருகனல்ல; நீங்களும் அவர் மீது பிரியம் வைக்கக் காரண மில்லை. என்னை நாட்டைவிட்டுத் துரத்தினதா லன்றோ, நீங்கள் தக்கபடி வளர்க்கப்படாது இந்தக் கஷ்டமான கதியை அனுபவிக்கவேண்டிவந்தது; நீங்கள் பிறந்தபொழுது உங்களால் அனுபவிக்கப்படத் தக்கதாய்க் குறிக்கப்பட்ட மேன்மையெல்லாம் பாழாயின; இவ்வாறு கோடை காலத்தில் வெயிலால் வாட்டப்பட்டும், மாரி காலத்தில் பனியால் நடுக்க முற்றுச் சுருங்கியும், அடிமைகளைப்போல் வாழ்ந்துவருகிறீர்கள்.

கி. இவ்வாறு உயிருடன் வாழ்வதைவிட, அவ்வுயிரைவிட்டு நீங்கலாம். ஐயா, சைனியங்க ளிருக்கு மிடம் போகலாம் வாரும். என்னையும் என் தம்பியையும் ஒருவருக்கும் தெரியாது. உங்களைப்பற்றியோ, உங்களை மறந்துவிட்டு, அநேக வருஷங்க ளானபடியாலும், இந்த வருஷங்களில் நீர் அதிக முதுமை யடைந்திருக்கிறபடியாலும், உம்மை ஒருவரும் ஒன்றும் கேட்கமாட்டார்கள்.

ஆ. இதோ ஒளி தரும் சூரியன்மீ தாணைப்படி, நான் அங்கே போவேன். இதை என்னென்று சொல்வது? இதுவரை

யில் மனிதன் மடிந்ததை நான் கண்டதே யில்லை! பேதைக ளை முயல், ஆடு, மான் முதலிய அற்பமான பிராணி களின் ரக்தத்தைத் தவிர, வேறொரு ரக்தத்தையும் கண் கொண்டு கண்ட தில்லை! முதுகுக்கு ஜேணயில்லாமலும் காலுக்கு அங்கபடி யில்லாமலும், என்னைப்போன்ற வே றொருவன் ஏறிய ஒரு குதிரைமீ தன்றி, நான் சவாரி செய்த தில்லை! பரிசுத்தமான இப் பரிதியை நான் பார்ப்ப தற்கும் வெட்கப்படுகிறேன், நன்மையைத் தரும் அவனது கிரணங்களை நான் அனுபவித்தும், இத்தனை காலமாக ஒன்று மறியா எளியவனாக இருந்ததின்பொருட்டு.

கி. ஈசன்மீ தாணைப்படி நான் போவேன், ஐயா. நீர் என்னை ஆசீர்வதித்து, எனக்கு உத்திரவு கொடுப்பதானல், நான் என்னை மிகவும் ஜாக்கிரதையாகப் பாதுகாத்துக்கொள்ளு கிறேன்; நீர் அங்ஙனம் செய்யமாட்டேன் என்றால், நான் அத்து மீறி நடந்ததற்காக, தக்க தண்டனை, பாண்டியர்கள் கையினின்றும் என் தலைமீது வீழட்டும!

ஆ அங்ஙனம் நானும் சொல்லுகிறேன்,—அங்ஙனமே ஆகுக!

பா. உங்களுடைய உயிரையே நீங்கள் அவ்வளவு எளிதாய் மதிப் பதானல், வயதினல் தளர்ந்து மெலிந்த என் னுயிரை நான் அதிகமாய்க் காக்க ஒரு காரணத்தையும் காண்கிலேன். உங்க ளிஷ்டப்படியே செய்யுங்கள், குழந்தைகளே! உங்க ளுடைய தேசத்தின்பொருட்டு நடக்கும் யுத்தத்தில், நீங்கள் ஒருகால் மரிக்கும்படி நேர்ந்தால், அவ்விடமே என் படுக்கையு மாகும், அங்கேயே நானும் மரிப்பேன். அழைத்துப் போங்கள், போங்கள். [ஒரு புறமாக] காலமா னது நீடித்துக் காட்டுகிறது. அவர்கள் அரச குலத் துதித் தவர்க ளென்பது வெளி வந்து எல்லோருக்கும் தெரிகிற வரையில், அவர்களுடைய ரக்தமானது, இழிவாய் எண் ணும்படி செய்கிறது.

[எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

# ஐந்தாம் அங்கம்.

---

## முதல் காட்சி.

இடம்—சிம்ஹளப் பாசறைக்கும் பாண்டிய பாசறைக்கும் இடையி லுள்ள ஓர் வெளி.

பாசதாமன் ஒரு ரக்தம் படிந்த சவுக்கத்துடன் வருகிருன்.

ஆம், ரக்தம் படிந்த சவுக்கமே! உன்னை நான் வைத்திருக்கிறேன்; ஏனெனில், நீ இவ்வாறு சிவக்கப்படவேண்டுமென்று நான் கோரினேன். மணம் புரிந்தோரே! சரியான மார்க்கத்தினின்றும் சற்றே பிறழ்வதற்கு, உங்களில் ஒவ்வொருவரும் இவ்வாறு செய்வதாயின், தங்களைபபார்க்கிலும் மேலான தங்கள் மனையாட்டிகளை எத்தனை பெயர் மாளும்படி செய்யவேண்டும்!— ஆ! விசாகா! நல்ல ஊழியன் ஒவ்வொருவனும் எல்லாக் கட்டளைகளையும் நிறைவேற்றுகிருனே? நியாயமானவைக ளன்றி வேறு செய்திடக் கடமைப்பட வில்லையே?—ஈசனே! எனது குற்றங்களுக்காக என் மீது பழி வாங்கி யிருப்பீ ராயின், இதைச் செய்திட நான் உயிர் வாழ்ந் திருக்கமாட்டேனே! அங்ஙனம் ஆகியிருக்குமாயின், செய்த குற்றத்திற்குப் பிராயச்சித்தம் செய்யும்படி உத்தமமான ஹேமாங்கியை உயிர் வாழ்ந்திருக்கவிட்டு, உமது பழிக்குத் தக்க பாத்திரமான பாபி என்னைக் கொன்றிருப்பீர்! ஆனால், அந்தோ! சில பெயரைச் சிறிய பிழைகளுக்கெல்லாம் இவ் வுலகினின்றும் கொண்டுபோய்விடுகிறீர், இனி அவர்கள் பிழை செய்யாதிருக்கும் பொருட்டு, அவர்கள்மீ துள்ள பிரீதியினுல்; மற்றுஞ் சிலரையோ, ஒன்றைவிட ஒன்று கேடான, பிழைக்கு மேல் பிழைகளைச் செய்யவிடுகிறீர்; அவர்கள் இவ்வுலகில் நலனைப் பெறினும், மேலுலகை நினைத்துப் பயப்படச்செய்கிறீர். ஆனால் ஹேமாங்கி உமக்குச்

சொந்தமானவள்; உம திச்சைப்படி செய்யும்; அதற்குக் கீழ்ப் படிந்து நடக்கும் வண்ணம் அடியேனுக் கருளும்!—பாண்டி நாட்டுப் பிரபுக்களுடன் நா னிங்கு கொண்டுவரப்பட் டிருக் கிறேன், என் மனைவியின் ராஜ்யத்திற் கெதிராக யுத்தம் செய்யும்பொருட்டு.—சிம்ஹளமே! உனது தலைவியைக் கொன்றதே போது மெனக்கு. சுகமாய் வாழ்! உன்னைப் புண்படுத்தவும் மாட்டேன் நான்.—ஆகவே, ஈசனே! என் எண்ணத்தைச் சற்று பொறுமையுடன் கேளும். இப் பாண் டி நாட்டு வேஷத்தைக் களைந்துவிட்டு சிம்ஹளத்துச் சேவ கனைப்போல் உடை தரிக்கிறேன். அப்படியே, நான் யாரு டன் வந்தேனே, அவர்களையே எதிர்த்துப் போர் புரிகி றேன். அப்படியே, எவள்பொருட்டு என் வாழ்வின் ஒவ் வொரு சுவாசமும் ஒரு மரணமோ, அப்படிப்பட்ட ஹே மாங்கியே! உன்பொருட்டு என் னுயிரை விடுவேனாக! இவ் வாறு ஒருவரு மறியாதபடி, தயையு மின்றி, வெறுப்பு மின்றி, ஆபத்திற்கு ஆளாய், என்னையே நான் ஆக்கிக்கொள்ளுகி றேன். என் ஆடையினால் தோற்றுவதிலும், அதிக வீரமா னது என்னிட மிருக்கிறதென அன்னியர் அறியும்படி செய்கிறேன். ஈசனே! கேசரி வம்சத்தாரின் பல மனைத்தும் என்னிடம் புகும்படி செய்வீராக! உலகத்தின் தோற் றத்தை வெட்கிடச் செய்யும்பொருட்டு, இவ்வண்ணம, வெளி யிற சிறிதும் உள்ளே பெரிது மாம் வேஷத்தைப் பூண ஆரம் பிக்கிறேன். [போகிறான்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி.

இடம்—அதே யிடம்.

*ஒரு புறமாக லோகசேனன், ஜயாகாமன், பாண்டிய சைனியங்களும், மற்றொரு புறமாக, ஒரு அற்ப சேவகனைப்போல் பின் தொடரும் கேசரிநாத பாசதாமனுடன் சிம்ஹள சைனியங்களும், வந்து, ரங்கத்தைக் கடந்து வெளியே போகின்றன.*

*பிறகு சண்டை செய்துகொண்டு ஜயாகாமனும் பாசதாமனும் வருகிறார்கள்.*

*பாசதாமன் ஜயாகாமனை ஜெயித்து அவன் கத்தியைப் பிடுங்கி உடைத்தெறிந்துவிட்டு செல்கிறான்.*

நான் செய்த கடுங் குற்றத்தின் சுமையானது, என் ஹிருதயத்தை வருத்தி என் ஆண்மையையெல்லாம் அறவே போக்குகிறது. இத் தேசத் தரச குமரியாம் ஓர் உத்தமியை நான் மோசம்செய்தேன். அதன்பொருட்டு இங் குள்ள காற்றும் என்மீது பழி வாங்கி என்னைப் பல ஹீன னாக்குகிறது. இல்லாவிடின், மனித சிருஷ்டியில் வடிக்கட்டிய பட்டியாகிய இந்தக் கடையன், எனது தொழி லாகிய வாள் யுத்தத்தில் என்னை வெல்லுவனோ ? சுத்த வீரனென்னும் பெருமையை என்னைப்போன்றவர் சுமந்திருப்பது வெறுக்கத்தக்க வீம்பேயாம். சிம்ஹளமே ! இக் கடையன் எங்கள் நாட்டுப் பிரபுக்களை மீறி யிருப்பதுபோல், உங்கள் தேசத்துப் பிரபுக்கள் இவனைவிட மேம்பட் டிருப்பாராயின், நடக்கும் யுத்தத்தின் முடிவு, நாங்கள் மனிதரினும் கீழ்ப்பட்டவர்களாயும், நீங்கள் தேவர்களாயும், மதிக்கப்படுவீர்களென்பதே யாம்.

[போகிறான்.]

யுத்தம் நடக்கிறது. சிம்ஹள சைனியங்கள் முதுகிட்
டோடுகின்றன. சிம்ஹளநாதன் சிறையாக்கப்படுகிறான்.
பிறகு அவனை மீட்கும்பொருட்டு பாலராயன்,
கிரிதரன், ஆர்வராகன் வருகின்றனர்.

பா. நில்லுங்கள்! நில்லுங்கள்! நாம் நிற்கும் பூமி நமக் கனுகூலமான ஸ்தானம். இந்த சந்து காக்கப்பட் டிருக்கிறது. நம்மை முதுகிட் டோடச்செய்வதெல்லாம் நம்மை மோசம் செய்யும் பயமே.

கி. ஆ. நில்லுங்கள்! நில்லுங்கள்! நின்று சண்டை போடுங்கள்!

பாசதாமன், சிம்ஹளத்தா ருதவிக்கு வந்து சேர்கிறான்.
எல்லோருமாய்ச் சேர்ந்து சிம்ஹளநாதனைச்
சிறை மீட்டுச் செல்கின்றனர்.

பிறகு லோகசேனன், ஈயாகாமன், ஹேமாங்கி
வருகின்றனர்.

லோ. போ, பிள்ளாய்! போர் வீரர்களை விட்டு ஓடிப்போய் உன்னைக் காப்பாற்றிக்கொள்! வீர லட்சுமியே கண் மூடப் பட்டதுபோல், எல்லாம் குழப்பமாகி, நண்பரை நண்பரே கொல்கின்றனர்.

ஈ. இதெல்லாம் அவர்களுக்குப் புதிதாய் வந்த உதவியின் வேலை.

லோ. இன்றைத் தினம் ஜெயம் எவ்வாறு விந்தையாய்த் திரும்பியது! நாம் உடனே உதவியை நாடவேண்டும், இல்லாவிடின் இவ்விடம் விட் டோடவேண்டும்.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## மூன்ரும் காட்சி.

இடம்—யுத்தகளத்தில் மற்ருெரு புறம்.

பாசதாமனும், ஒரு சிம்ஹளகனவானும் வருகிருர்கள்.

சி. க. அவர்கள் எதிர்த்து நின்ற இடத்திலிருந்தா வருகிருய்?

பாச. ஆம், அப்படித்தான்; ஆயினும் உம்மைப் பார்க்குமிடத்து ஓடினவர்களிட மிருந்து வருவதாகக் காண்கிறது.

சி. க. ஆம், அப்படியே.

பாச. ஐயா, அதனுல் உமக்குக் குறைவொன்று மில்லை; ஏனெனில், எல்லாம் முறியடிக்கப்பட்டபின், ஜகதீசனே வந்து சண்டை செய்து வெற்றியைத் திருப்பியதாக எண்ணவேண்டும். அரசரது இரு பாரிசமும் முறியடிக்கப்பட்டு, சைனியமெல்லாம் சிதறுண்டுபோக, எங்கும் சிம்ஹளவர் முதுகுதான் காணப்பட. ஒரு சிறு சந்தின் வழியாக ஓட்ட மெடுத்தனர்; பகைவரோ அதிக தைரியங்கொண்டவர்களாய், நாக்கைக் கடித்துக்கொண்டு, எங்ஙனும் வெட்டிக்கொண்டு வந்தார்கள்; அவர்களுக்கு ஆயுதங்கள் போதாமையா யிருந்தனவே யொழிய, அந்த ஆயுதங்களுக்கு வேலை குறைவாயில்லை; சிலரை மரண காயப்படுத்தி வீழ்த்தினர், சிலரைச் சொற்ப காயத்துடன் விட்டனர்; சிலரோ வெறும் பயத்திஞல் கீழே விழுந்தனர்; இவ்வாறு அச் சிறு பாதையானது முதுகிட் டோடும்பொழுது காயம்பட்டு மடிந்தவர்களாலும், பிறகு நீடிய வெட்கத்திஞல் சாதற்பொருட்டு உயிர் தரிக்கும் பயங்காளிகளாலும், நிரப்பப்பட்டது, அணை போல.

சி. க. எங்கே இந்த சந்து?

பாச. யுத்தம் நடந்த இடத்திற் கருகாமையில், இரு புறமும் சுவர்போல் மண்மே டிட்டதாய்.—இந்த இடமானது வயோதிக வீர ஞெருவனுக்கு மிகுந்த அநுகூலத்தைத் தந்தது.

—அவன் மிகவும் உத்தமன் என்று உரைக்கவேண்டும் நான்; உண்மையில், அவனது வெண்மையான தாடி தெரிவித்தபடி அநேகம் வருஷம் இந் நாட்டில் வாழ்ந்தவனாகக் காணப்பட்டான், அப்படி இந் நாட்டில் வாழ்ந்ததற்காக அதற்குத் தக்க பிரதிசெய்தான்.—அச் சந்திற்குக் குறுக்காக, அவனும் அவனுடனிருந்த இரண்டு சிறுவர்களுமாகத் தடுத்து நின்றனர். அச் சிறுவர்களோ—பகைவரைக் கொன்று குவிப்பதைவிட, பள்ளத் தாக்குகளில் பம்பரமாடத் தக்கவர்கள்; நாணத்தினாலாவது, அல்லது தம்முடைய அழகைக் காப்பாற்றும் பொருட்டாவது, முக்கா டிட்டுக்கொள்ளும் மங்கையரின் முகத்தைப் போன்ற முக முடையவர்கள்—இம் மூவர்களும், ஓடுபவர்களைப் பார்த்து "ஓடி மடிவது நமது சிம்ஹளத்து ஆட்டுக் கூட்டங்களே யொழிய, நமது ஆண் மக்க ளல்ல. முதுகு காட்டி ஓடும் பேதைகளே! போங்கள் அந்தகார முடை அருநரகிற்கு!—நில்லுங்கள்! இல்லாவிடின் நாங்களே பாண்டியர்களாக மாறி, எந்த மரணத்திற் கஞ்சி மிருகங்களைப்போல் ஓடுகிறீர்களோ, அந்த மரணத்தை மிருகங்களுக்கு வழங்குவதுபோல், உங்களுக்கு வழங்குவோம். திரும்பி நின்று முகத்தைச் சுளித்தாவது பாருங்கள், அம் மரணத்தி னின்றும் தப்பலாம் ஒருவேளை; நில்லுங்கள்! நில்லுங்கள்!" என்று கூவினார்கள். இம் மூவர்களும், மூவாயிரம் பெயர்போல் தைரிய முடையவர்களாய், நில்லுங்கள் நில்லுங்கள்! என்று கூவிக்கொண்டே, அத்தனைப் பெயர் போல் சண்டை போட்டார்கள்; ஏனெனில் மூன்று பெயர் சண்டை போட மற்றவர்களெல்லாம் சும்மா இருப்பதனால், அம் மூவரே சைனியம் முற்று மாகின்றனர். அவர்களுக்கு அந்த இடம் மிகவும் அனுகூலமா யிருந்தது. அவர்களுடைய மேன்மையான வீரமானது, மற்றவர்களுக்கு, மந்திர பலத்தால் முண்டாக்குவதுபோல், உற்சாகத்தை உண்டாக்கியது;—அவ்வருங் குணமானது அரிவையரையும் ஆண் மக்களாக மாற்றியிருக்கும்.—ஆகவே அது, முகம் வெளுத்து

பயந் தோடுவோர்களை யெல்லாம் வெட்கத்திற் குட்படுத்தி, கொஞ்சம் தைரிய மடையச்செய்தது. மற்றவர்கள் ஓடு வதைக் கண்டு தாமும் ஓடிய சிலர்,—அந்தோ! இம்மாதிரி யான பிழை முதல் முதல் யுத்தத்திற்குச் செல்பவர்களுக் குள் சாதாரணமாக உண்டு—அவர்களைப்போல் திரும்பி காம்பீரத்துடன் நின்றவர்களாய், எதிர்க்கும் வேடர்களின் ஈட்டியைப் பார்த்து கர்ஜ்ஜிக்கும் சிங்கங்களைப்போல் கர்ஜ்ஜித் தனர். உடனே துரத்துவோர்கள் தடுக்கப்பட்டவர்க ளாய் நிதானித்தனர், பின் வாங்கினர், சீக்கிரத்தில், முறியடிக் கப்பட்டு கோலாகலமாய் ஓடினர். எந்த வழியாகக் கழு குகளைப்போல் வந்தனரோ, அதே வழியாகக் கோழிக் குஞ்சுகளைப்போல் பறந் தோடினர். ஜெயசாலிகளாய் வந்த வழி, அடிமைகளாய் ஓட்ட மெடுத்தனர். கப்பற் பிரயாணங்களில் கஷ்ட காலத்தில் துண்டு மரங்களும் துணை யாவதுபோல், நமது பயங்காளிகள், பயந் தோடுபவர்களின் முதுகினைப் பார்த்ததும், உயிரை இழந்தவர்கள்போ லிருந்த வர்க்கெல்லாம் உற்சாகத்தைக் கொடுத்தனர். ஈசனே! அவர் கள் பகைவரை எவ்வாறு குத்திக் கொன்றனர்! சிலர் முன்னால் கொல்லப்பட்டனர். சிலர் குத் துயிராய் வீழ்த் தப்பட்டனர். சிலர் முன் னணியி லிருந்த தங்கள் சொந்த சிநேகிதர்களையே மிதித்துச் சென்றனர். முன்பு ஒருவ னால் பத்துப் பெயர் துரத்தப்பட்டனர்; அந்தப் பத்துப் பெயரில் ஒவ்வொருவனும், இப்பொழுது இருபது பெய ரைக் கொல்பவ னாயினன். முன்பு எதிர்ப்பதன்முன் சாகக் கிடந்த பயங்காளிகள், இப்பொழுது மற்றவர்களுக்குக் கண் டால் மரணத்தைப்போல் பயந் தருவதாயினர்.

சி. க. என்ன ஆச்சரியமான சந்தர்ப்பங்கள் ஒன்று கூடின!—ஒரு சிறிய சந்து! ஒரு கிழவன்! இரண்டு வாலிபர்கள்!

பாச. வேண்டாம், அதைப்பற்றி ஆச்சரியப்படவேண்டாம். நீர் கேள்விப்படுகிற விஷயத்தைப்பற்றி ஆச்சரியப்பட நீர்

சிருஷ்டிக்கப்பட் டிருக்கிறீரே யொழிய, ஆச்சரியமான காரி யங்களைச் செய்ய சிருஷ்டிக்கப்பட வில்லை; இவ் விஷயத் தைப்பற்றி கவனம் ஒன்று வேண்டுமோ உமக்கு? வேடிக்கை யார்த்தமாக வெளிப்படுத்துகிறீரா அதை? இதோ ஒன் றிருக்கிறது கேளும்.

"சிம்ஹளவரைக் காத்து, பாண்டியரை அழித்தது
சிறுவர் இருவர், கிழவன் ஒருவன், சந்தொன்று பாரீர்."

சீ. க. ஐயா, என்மீ துமக்குக் கோபம் வேண்டாம்.

பாச. அந்தோ! எதன் பொருட்டு? எவன் தன் பகைவனை எதிர்த் து நிற்கத் தைரிய மின்றி இருக்கிருனோ, நான் அவனது நண் பனு யிருக்கிறேன். அவன் எப்படிச் செய்யவேண்டி அவ சிய மாகிறதோ அங்ஙனம் செய்வா னாயின், அவன் என் சிநேகத்தினின்றுங் கூட, சீக்கிரத்தில் பறந் தோடுவான் என்பதை அறிவேன் நான்; எதுகை மோனையுடன் பேச எனக் கிடங் கொடுக்கீர்!

சீ. க. நீர் கோபங்கொண் டிருக்கிறீர், நான் வருகிறேன்.

[போகிருன்.]

பாச. வருவ தேது?—இவரும் ஒரு கனவான்! என்ன பரிதாபப் படத் தக்க கௌரவம்! ரணக்களத்தி லிருந்துகொண்டே, என்ன சமாசாரம் என்று என்னைக் கேட்கிருனே! ஆ! இன்றைத் தினம் தங்கள் தோலைக் காப்பாற்றும்பொருட் டு, எத்தனைப் பெயர் தங்கள் மானத்தை இழக்கச் சித்தமா யிருந்தார்கள்? அதன்பொருட்டு முதுகிட் டோடி முடி வில் உயிரிழந் திருப்பார்கள்? கூக்குர லழுகையைக் கேட்ட விடத்தும், கூத்தனை நான் கண்டிலேன்; என் துயரத் தால் என் ஆவி அழியாது காக்கப்பட்டுவருகிறதே! படு வன் அடிக்கும் அடி என்மீது படமாட்டேன் என்கிறதே! விகார ஸ்வரூப முடைய அவன், புதிய போஜன பாத்தி ரங்களிலும், மிருதுவாம் மெத்தைகளிலும், தித்திக்கும்

வார்த்தைகளிலும், மறைந்திருப்பது மா விந்தையே! அன்றி யும் யுத்தத்தில் அவனது உடைவாட்களை உபயோகிக்கும் எங்களைவிட, அதிக சேவகர்களை உடைத்தா யிருப்பது என்ன ஆச்சரியம்!—நல்லது, எப்படியும் அவனை நான் கண்டுபிடிக்கிறேன். ஏனெனில், இனி நான் சிம்ஹளத்தா னல்லாதுபற்றி, சிம்ஹளத்தார்க்கு உதவுவதை விட்டு, நான் வந்த கோலத்தை மறுபடியும் கொண்டேன். இனி நான் யுத்தம் புரியேன். எனது தோளினைத் தொடும் எந்த அற் பனுக்கும் நான் ஆட்படுகிறேன். பாண்டியர் கொன்ற திங்கு பல வாயிர முயிர்களே! சிம்ஹள வீரர் பழி வாங்கவேண்டி யதும் பல வாயிர மாம்! எனக்கோ, என்னைச் சிறையினின் றும் மீட்பது மரணமே; நான் வந்தது, எந்தப் பக்கத்திலா வது என் ஆவியை இழக்கவே; இனி அதை நா னிங்கு தரியேன்; இவ்விடமிருந்து கொண்டுபோகேன், ஹேமாங் கியின்பொருட்டு எவ்விதமாவது அதை முடிப்பேன்.

இரண்டு சிம்ஹள தளகர்த்தர்களும் போர்வீரர்களும் வருகிறார்கள்.

ம. த. ஜகதீசனைப் புகழ்வோமாக! லோகசேனன் பிடிக்கப்பட் டான். அந்தக் கிழவனும் அவனது பிள்ளைகளும் நம்மைக் காக்க வந்த தேவதைகளெனவே எண்ணப்படுகின்றனர்.

இ. த. நான்காவது மனிதன் ஒருவ னிருந்தான், ஒரு அற்ப உடை யில்; அவனும் அவர்களோடு கூடி எதிர்த்தான்.

ம. த. அப்படித்தான் சொல்லுகிறார்கள். ஆயினும் எங்குத் தேடி யும் அவர்களில் ஒருவனையும் காணோம்.—நில் லங்கே! யார் நீ?

ாச. என் பட்சத்தார் எனக் குதவி செய்திருப்பார்க ளாயின், இங்கே பதுங்கி யிருக்கமாட்டாத பாண்டிய படை வீரன்.

இ. த. பிடித்துக் கட்டுங்கள் இந்த நாயை! எல்லாம் கழுகுகளுக் கிரை யாயின என்றெடுத்துக் கூறவும், ஒரு பாண்டியப் பதரும் திரும்பிப் போக லாகாது! இவன் வீரத்தைப்பற்றி உளறுவதினால், ஏதோ உயர்ந்த உத்தியோகத்தி லிருப்பவன் போல் காண்கிறான். இவனை அரசரிடம் கொண்டு வாருங்கள்.

சிம்ஹளநாதன், பாலராயன், கிரிதரன், ஆர்வராகன்,

விசாகன், பாண்டிய சிறைகளுடன் வருகின்றனர்.

தளகர்த்தர்கள் பாசதாமனை சிம்ஹளநாதனெதிரிற் கொண்டுபோய் சமர்ப்பிக்கின்றனர். அரசன் அவனை ஒரு காவலாளியிடம் ஒப்புவிக்கிறான்.

காட்சி முடிகிறது.



## நான்காம் காட்சி.

இடம்—ஓர் சிறைச்சாலை.

பாசதாமனும் இரண்டு சிறைச்சாலைச் சேவகர்களும் வருகிறார்கள்.

மு. சி. உன்னை இப்பொழுது யாரும் திருடிக்கொண்டு போகமாட்டார்கள். உன்னைத் தாள் பூட்டி யிருக்கிறதே; ஆகவே உண்டு சுகமா யிரு, அகப்பட்ட வரையில்.

இ. சி. அல்லது உயி ரிருக்கும் வரையில்.

[இரண்டு சிறைச் சாலைச் சேவகர்களும் போகிறார்கள்.]

பாச. சிறையே! நீ என் மனத்திற்கு சந்தோஷத்தையே தருகிறாய், ஏனெனில் என் துயரத்தினின்றும் என்னை விடுதலை செய்து கொள்வதற்கு, நீயே ஒரு மார்க்க மாகிறாய் என எண்ணுகிறேன். இப்பொழுதும், குன்மநோயுடைய ஒருவனைப் பார்க்

கினும் உயர்ந்த பதவியில்தா னிருக்கிறேன்; ஏனெனில், அவன், தவறாத வயித்திய னாகிய யமனால் சுவஸ்தப்படு வதை விட்டு, எந் நேரமும் அந் நோயுடன் வருந்திக்கொண் டே யிருக்க விரும்புகிறான்; நானோ அப்படி யன்று; அந்த யமன் என்னை இச் சிறையினின்றும் விடுவிப்பான். என் மனோ சாட்சியே! என் கை கால்களைவிட, நீ அதிகமாய்க் கட்டப்பட் டிருக்கிறாய். ஜகதீசனே! அத் தளையினின்றும் என்னை விடுவித்துக்கொள்ள எனக்குப் பிராயச்சித்தத் தை யருளும்; பிறகு நான் சுதந்தரனா யிருக்கலாம் எக் காலமும். நான் துயரப்படல்மாத்திரம் போதுமானதோ? அவ்வாறே, குழந்தைகள் தங்கள் தாய் தந்தையரை மண் ணுலகில் சமாதானப்படுத்துகின்றனர்; ஜகதீசனோ, அவர் களைவிட அதிக கருணையுள்ளவா. நான் பிராயச்சித்தம் செய்ய வேண்டாமா?—வெறுப்புட னல்லாது, விருப்பத் துடன் நான் அணியும் இவ் விலங்குகளுடன் நான் பிராயச் சித்தம் செய்வதே நல மாகும். எனது பாபத்தினின்றும் விடு பட்டுப் பரிசுத்த மாவதற்கு, நான் பிரதி செய்யவேண்டி யதா யிருந்தால், என்னிடம் ஒன்றையும் மிகுதியாய் வைக்க வேண்டாம், எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளும். தவ ணைப்படி கடனைச் செலுத்தாத கடனாளிகளிடமிருந்து, அதற்காகப் பத்தி லொரு கூறு, அல்லது ஆறில் ஒரு கூறு, அல்லது மூன்றில் ஒரு கூறு, வாங்கிக்கொண்டு, மிகுதியைக் கொண்டு அவர்களை உயிர் வாழவிடும் பாபிகளைவிட, நீர் பச்சாத்தாபம் அதிகமா யுடையவர் என்பதை நான் அறி வேன். அப்படி நீர் செய்யவேண்டுமென்று நான் கோர வில்லை. ஹேமாங்கியின் ஆருயிரைப் போக்கினதற்காக, என் னுயிரை எடுத்துக்கொள்ளும்; அதைப்போல் அவ் வளவு விலை யுயர்ந்ததா யில்லாவிட்டாலும், இதுவும் ஓர் உயிரே; அதை நீரே சிருஷ்டித்தீர்., மனிதர்களுக்குள் நாணயங்கள் மாற்றிக்கொள்ளுங்கால் ஒவ் வொன்றையும் நிறுத்துப் பார்ப்ப தில்லை, கொஞ்சம் இடை குறைவா

யிருந்தபோதிலும் அதன்மீதுள்ள முத்திரையின்பொருட்டு அந் நாணயங்களை வாங்கிக்கொள்கின்றனர். ஆகவே, என் உயிர் உமதாகையால், அதை நீர் எடுத்துக்கொள்வதில் என்ன தடையிருக்கப்போகிறது? ஆகவே, ஜகதீசனே, இக் கணக்கை முடிவு செய்யவேண்டுமென்றிருந்தால், என் உயிரை வாங்கிக்கொண்டு, இச் சிறையினின்றும் என்னை விடுவியும்.—ஆ! ஹேமாங்கி! மௌனத்தில் உன்னுடன் பேசுகிறேன். [உறங்குகிறான்.]

சவுக்கமான சங்கீதம். கனவில் தோன்றுவதுபோல்
வயோதிகனான பாசதாமன் தந்தை, சுசீல கேசரிநாதன்,
போர் வீரன் உடை பூண்டு வருகிறான்.

அவன் கையைப் பற்றினவளாய் வயது முதிர்ந்த அவன் மனைவி,
பாசதாமன் தாயார், வருகிறாள். பிறகு இரண்டு வாலிபர்,
பாசதாமன் தமயன்மார், யுத்தத்தில்
மடிந்ததுபோன்ற காயத்துடன் வருகின்றனர். பாசதாமனை
இவர்களெல்லாம் சுற்றி வந்து ஈசனைக் குறித்துத்
தியானிக்கின்றனர்.

உடனே விருஷப வாகனரூடராய் பரமேஸ்வரன் தோன்ற
அவர்களெல்லாம் நமஸ்கரிக்கின்றனர்.

அவர் அவர்களுக்கெல்லாம் ஆசீர்வாதம் செய்த பிறகு,
பாசதாமன் மார்பின்மீது ஒரு பட்டயத்தை வைத்துவிட்டு
மறைகின்றனர். மற்ற உருவங்களும் வணங்கி
மறைந்துபோகின்றன.

பாச. [விழித்து] உறக்கமே, எனக்கு நீ மூதாதையாயிருந்து, ஒரு தந்தையையீந்தாய்; ஒரு தாயையும், இரண்டு சோதரர்களையும் சிருஷ்டித்தனை! ஆயினும், சீ! என்ன ஏளனம்! போய்விட்டனர்! தோன்றிய உடனே மறைந்துவிட்டனர் விரைவில். நானும் விழித்துக்கொண்டேன்.—உயர்ந்த ஸ்திதியி

லிருப்பவர்கள் அருள்வாரென்று நம்பும் பேதையர்கள், என்னைப்போல்தான் கனவு காண்கின்றனர்; விழித்து, ஒன்றுமில்லாதிருக்கக் காண்கின்றனர். ஆயினும், அந்தோ! நான் வேறெதையோ கவனிக்கிறேன். தங்களுக்கு நற்பாக்கியம் கிடைக்குமெனஅநேகர் கனவும் காண்கிறதில்லை, அதைப் பெறுதற்கு யோக்கியதையுமில்லா திருக்கின்றனர்; இருந்தும் எல்லா வித பாக்கியங்களையும் பெறுகின்றனர். அதுபோல் எனக்கும், இந்த அருமையாம் சந்தர்ப்பம் வாய்த்தது; என்ன காரணம்பற்றியோ அறிகிலேன்.— என்ன தேவதைகள் இங்கு வந்து போயின? ஒரு பட்டயம்? என்ன அருமையான பொருள்! டம்பமாம் இவ்வுலகில் உள்ளிருப்பதைவிட விலையுயர்ந்த மேற்போர்வையுடைத்தா யிராதே! அரண்மனை வாசிகளைப்போலல்லாது, மேலுக்குக் காட்டுவதுபோல் உள்ளேயும் உத்தம அர்த்த முடையதா யிருப்பையாக! [படிக்கிறான்.] "ஒரு சிம்ஹத்தின் குட்டியானது, தன்னைத் தானே அறியாது, தேடாது கண்டு, அழகிய காற்றின் கொடியால் அணைக்கப்படும்பொழுது, பெரிய வோர் ஆல மரத்தினின்றும் பெருங் கிளைகள் வெட்டப்பட்டு, அநேக வருட காலமாய் அழிந்துபோய், மறுபடியும், உயிர்த்து, பழய மரத்துடன் சேர்க்கப்பட்டு, புதிதாய் எப்பொழுது வளருமோ, அப்பொழுதே, பாசதாமன் படுந் துயரங்கள் முடிவு பெறும்; சிம்ஹளம் அதிர்ஷ்ட முடைய தாகி வளமையும் வாழ்வு முடையதாய்ப் பெருகி யோங்கும்"—இன்னும் கனவு தான்; அல்லது பயித்தியக்காரர்கள் புத்தி யின்றிப் பிதற்றும் பித்தே யாம்; இரண்டு மாம், அல்லது ஒன்று மில்லை. அர்த்த மின்றி அறைதலாம்; அன்றேல், புத்தி பகுத்தறியக் கூடாத பேதையரின் பேச்சாம். எதுவா யிருந்த போதிலும், என் உயிர் வாழ்வும், அங்ஙனமே இருக்கிறபடியால், அந்த அனுதாபத்தைப்பற்றி, அடைக்கலம் செய்துவைக்கிறேன் இதை!

முதல் சிறைக் காவலாளி மறுபடியும்
வருகிறான்.

மு. சி. வாரும், ஐயா; யமனூர் விருந்திற்குச் சித்தமா யிருக்கிறீரா?

பாச. காந்திப்போ யிருக்கிறேன்; நிரம்ப காலமாகச் சித்தமா யிருக்கிறேன்.

மு. சி. உம்மைத் தூக்கித் தொங்கவிடப்போகிறார்களையா; அதற்குச் சித்தமா யிருந்தால், நீர் நல்ல பக்குவ மான உணவு தான்.

பாச. அவ்வாறு நான் பார்ப்பவர்கள் கண்களுக்குத் தக்க உணவாவே னாயின், என்னைத் தூக்கி விட்ட பலனைப் பெறுவார்கள்.

மு. சி. நீர் செலுத்தவேண்டிய கடன் என்னவோ அதிகந்தான். ஆயினும் இதிலொரு சௌக்கிய முண்டு; அதாவது அப்புறம் பாக்கி கொடுக்கவேண்டுமென்று உம்மை ஒருவரும் கேட்கமாட்டார்கள். உம்முடைய சாப்பாட்டிற்காக ஒரு சத்திரக்காரனுக்கும் பணம் கொடுக்கவேண்டிய தில்லை; சந்தோஷத்தை விலைக்கு வாங்குகிறதே, விட்டுப் பிரியுங்கால் அதிகமாய்த் துக்கத்திற்குக் காரணமா யிருக்கிறது; வரும் பொழுது, உணவின்றி களைத்து வந்து சேர்கிறீர், போகும் பொழுது, அதிகமாய்க் குடித்துத் தள்ளாடிக்கொண்டு போகிறீர்; அதிக பணத்தைச் செலவழித்தோமே என்கிற வருத்தம், அன்றியும் அதற்காகத் தண்டிக்கப்பட்டோமோ என்கிற வருத்தம், பையில் பணமில்லா திருப்பதற்காக துக்கம், தலையில் மூளை யில்லா திருப்பதற்காகத் துக்கம்; குடித்த வெறியினால் தலை பளு வாகிறது, குடித்த செலவினால் பை இலே சாகிறது.—இனிமேல் இந்தக் கஷ்டமெல்லாம் இல்லாம லிருக்கலாம் நீர்!—ஹா! ஒரு காசு விலை பெறும்படியான கயிறு என்ன கர்மம் செய்கிறது பாரும்! ஆயிரக் கணக்கான கடன்களை யெல்லாம் பைசல் செய்து

விடுகிறது ஒரு நிமிஷத்தில்; கடன்களை யெல்லாம் தீர்ப்ப தில், அதைவிட உண்மையான சிநேகிதன் ஒருவரும் கிடைக் யாது இவ் வுலகில்; நடந்தேறியது, நடக்கிறது, நடக்கப் போகிறது, எல்லாவற்றையும் அடியுடன் பைசல் செய்து விடுகிறது. உம்முடைய கழுத்துதான் ஈடுமானம், அதைக் கொடுத்துவிட்டால் எல்லாம் தீர்ந்து போகிறது.

உயிர் வாழ்வதில் உனக் கிருக்கும் சந்தோஷத்தைவிட, சாவ தில் எனக்குச் சாலவும் சந்தோஷம்.

ஆம், ஐயா; படுத் துறங்குபவன் பல் நோயைக் கவனியான்; ஆயினும், கொலையாளி படுக்கையைச் சித்தம் செய்ய, அதில் உம்முடைய தூக்கத்தைப்போல் தூங்கவேண்டியவன், அந்த உத்தியோகஸ்தனுடன் ஸ்தானத்தை மாற்றிக்கொள் ள விரும்புவான் என எண்ணுகிறேன்; ஏனெனில், நீர் போகவேண்டிய மார்க்கம் உமக்கே தெரியாம லிருக்கிறதே, அதைக் கவனியும்.

நான் போகவேண்டிய மார்க்கம் எனக்கு நன்றாய்த் தெரி யும், அப்பா.

யமதர்ம ராஜனே உமக்குப் பிரத்தியட்ச மாகி வழி காட்டு கிறாரா என்ன? அவரைப் பார்த்தவர்களோ, நான் இதுவரை யிற் பார்த்த தில்லை அந்த வழியில் போயிருக்கிறோம் என் பவர்களாவது உமக்கு வழி காட்டவேண்டும், அல்லது நிச் சயமாய் நீர் அறியாததை அறிந்ததாக, நீர் தவறாக எண்ண வேண்டும். நீர் கண்ணை மூடிக்கொண்டபின் காணப்போகி றது கர்த்தன் ஒருவருக்குத்தான் தெரியும்; உமது பிரயா ணத்தின் முடிவைப்பற்றி, நீர் திரும்பி வந்து ஒருவருக்கும் சொல்ல முடியாதென்று நினைக்கிறேன்.

அப்பா, நான் சொல்வதைக் கேள்; நான் போகிற மார்க்கத் தில் பின் தொடர்ந்து வருவதற்கு எல்லோருக்கும் கண் இருக்கிறது, அதை மூடிக்கொண்டு அதை உபயோகிக்க மாட்டோம் என்பவர்களுக்குத் தவிர.

மு. சி. ஒருவன் கண் பெற்ற பேறு, குருட்டுப் பாதையைக் காண்பதற்கேயாவது, என்ன பரிஹாசமான விஷயம் இவ் வகிலத்தில்! இவ்வாறு அந்தகனுயிருப்பது, அந்தக னுலகிற்குச் செல்வதற்கே, என்று உறுதியாய் நம்புகிறேன்.

ஒரு தூதன் வருகிறுன்.

தூ. அவனுடைய தளைகளைத் தறித்துவிடு. உனது சிறையாளியை அரசர் அருகிற் கொண்டுவா.

பாச. நீ நல்ல செய்தி கொண்டுவருகிறுய்.—என்னை விடுதலை செய்வதற்கே கூப்பிடப்படுகிறேன்.

மு. சி. அப்புறம் என்னைத்தான் தூக்குப் போடவேண்டும்.

பாச. காவலாளியை விட கவலை யில்லாதவ னுவாய் நீ அப்பொழுது; காலனது நாட்டில் காவல் வேலை யில்லை!

[பாசதாமனும், தூதனும் போகிறுர்கள்.]

மு. சி. யமதர்ம ராஜன் பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டு பிள்ளைகளைப் பெறவேண்டுமென்று விரும்பினவனைத் தவிர, இவனைவிட, சீக்கிரத்தில் சாகவேண்டுமென்று இச்சை கொண்டவனை நான் பார்த்ததில்லை இதுவரையில். ஆயினும், இவன் பாண்டிய நாட்டானுயினும், இவனைவிட பாதகர்கள் இன்னும் உயிர் வாழவேண்டுமென்று விரும்புகிறுர்கள் என்பதை, என் மனுசாட்சி நன்றுய் அறியும். அவர்களில் சிலர் தங்கள் விருப்பிற்கு விரோதமாகவே மரண மடைகிறுர்கள்; அவர்களில் நான் ஒருவ னுயின், அங்ஙனந்தான் நானும் செய்வேன். நமக்கெல்லாம் ஒரே மாதிரி மனசாயிருந்தால், எவ்வளவு நன்றுய் இருக்கும்! ஆனுல், அப்பொழுது தூக்கு மரங்களுக்கும் வேலை யிராது, தூக்குப் போடுவோர்க்கும் வேலை யிராது! நான் பேசுவது என் சொந்த வேலைக்கு விரோதமான விஷயம்; ஆயினும் என் கோரிக்கையானது, இச் சிறைக் காவலாளியின் வேலையை விட, சிறந்த வோர் வேலையைப் பெறும்பொருட்டே.

[போகிறுன்.]

காட்சி முடிகிறது.

## ஐந்தாவது காட்சி.

இடம்—சிம்ஹளநாதன் கூடாரம்.

**சிம்ஹளநாதன், பாலராயன், கிரிதரன். ஆர்வராகன், ப்ரசாகன். மந்திரிகள், உத்தியோகஸ்தர்கள், சேவகர்கள் வருகின்றனர்.**

சி. ஈசன் கருணையினால் எமது அரசுரிமையைக் காத்திட்ட கனவான்களே, எமக் கருகில் நிற்பீராக. கவின் பெற்ற கவசங்களையும் வெட்கிடச் செய்த வெறும் கந்தை யணிந்து, கேடென்பதறியாத கேடயங்கள் முன்னால் நிர்வாணமான தன் மார்புடன் நின்றவனை, அத்தனை அரும்போர் புரிந்த, அந்த எளிய வீரன் அகப்பட வில்லையேயென்று, எம் மிதயம் துயரப்படுகிறது. நமது தயாளமானது ஒருவனை அதிர்ஷ்டசாலியாக்கக் கூடுமாயின், அந்த மனிதனைக் கண்டு பிடிப்பவனை, அங்ஙனம் ஆக்கும்.

பா. அத்தனை எளியவிடம் அவ்வளவு மேன்மையாம் வீரத்தை நான் என்றும் கண்ட தில்லை. வெளிக்கு வறுமையையும் வல்லமை இன்மையையுமே காண்பித்த ஒருவனிடம், அத்தனைப் பராக்கிரமச் செயல்களைக் கண்டது ஆச்சரியமே.

சி. அவனைப்பற்றி ஒரு சமாசாரமு மில்லையா ?

வி. இறந்தவர் கூட்டத்தும், இருந்தவர் கூட்டத்தும், எல்லாவிடத்தும் தேடியும் அவரைப்பற்றி ஒன்றும் தெரிய வில்லை.

சி. அவருக்கு நாம் கொடுக்க எண்ணிய கொடைக்கு நாமே வாரீசாக இருக்கவேண்டி வந்ததேயென எனக்கு வருத்தமா யிருக்கிறது. அதையும் சிம்ஹள மெனு முடலுக்குச் சிறந்த வோர் உயிர்போன்ற உங்களுக்கு அளிக்கிறோம்.

[பாலராயன், கிரிதரன், ஆர்வராகன், மூவரையும் நோக்கி]

உங்களாலேயே சிம்ஹளம் உயிர் தரிக்கின்றதென்ன நாம் ஒப்புக்கொள்ளவேண்டியதே! நீங்கள் எத் தேசத்தவர் என்று வினவக் காலம் இதுவே, அதைத் தெரிவியுங்கள்.

பா. அரசே, நாங்கள் யாழ்ப்பாணத்தில் உயர் குலத்தில் உதித்தவர்கள். அதைவிட அதிக பெருமை பாராட்டல், உண்மையாயு மிராது, உத்தமு மன்று; வேண்டுமெனில் நாங்கள் சத்யவான்கள் என்று சாற்றலாம்.

சி. முழுந்தா ளிடுங்கள் !— [மூவரும் முழுந்தா ளிட்டு வணங்கியதும்] யுத்தத்தில் அதி ரதர்களாய் உம்மை அழைத்தோம், எழுந்திருங்கள்! எப்பொழுதும் நம தருகி லிருக்கவேண்டிய அமைச்சர்களாக உங்களை ஆக்யாபித்தோம்; உங்கள் பதவிக்குத் தக்கபடி அந்தஸ்துகளையும் அளிப்பேன் இனி.

கருணாலயனும், பாங்கியரும் வருகிறார்கள்.

உங்கள் முகத்தினால் ஏதோ விசேஷ மிருக்கிறதாக அறிகிறோம்.—நமது வெற்றியை இநத வாட்ட முடைய முகத்துடன் ஏன் எதிர்கொள்கிறீர்? வெற்றி பெற்ற சிம்ஹளவாசிகளைப்போல் காணபபட வில்லை நீங்கள், தோல்வி யடைநத பாண்டியரைப்போலவே தோற்றுகிறீர்.

க. மஹாராஜா! ஜெய முண்டாகுக! தங்கள் சந்தோஷத்தைக் கெடுததற்பொருட்டு, மஹாராணியவர்கள் மரித்ததைக் கூறவேண்டியவனா யிருக்கிறேன்.

சி. வயித்தியனுக் கன்றி, வே றெவனுக்கு இவ் வருத்தத்தைத் தரு மொழி உரித்தானதா யிருக்கும். வயித்தியத்தினால் வாழ்க்கையை நீடிக்கச் செய்தபோதினும், வயித்தியனையும், காலன் ஒரு நாள் கட்டிக்கொண்டே போவான் என்று எண்ணுகிறோம்—எப்படி மரித்தாள் அவள்?

க. பயப்படத் தக்க பயித்தியத்தோ டிறந்தார்கள். அவர்களது உயிர் வாழ்க்கை உலகத்திற் கெத்தனைக் கொடியதா யிருந்த

தோ, அத்தனைக் கொடியதா யவர்களுக்கும் முடிந்தது. தங்கள் உத்திரவின்மீது, அவர்கள் அறிவித்தபடி நான் தங்களுக்குத் தெரிவிக்கிறேன். நான் ஏதேனும் தவறாய்க் கூறிடின், அவர்களது பாங்கிகளாகிய இவர்கள் என்னைச் சரிப்படுத்துவார்கள்; இவர்கள் அரசியின் அந்திய காலத்தில் அருகி லிருந்தார்கள் அழுத கண்களுடன்.

சொல் சீக்கிரம்.

முதலில், தங்கள்மீ தெப்பொழுதும் தான் காதல் கொண்டில்லை யென்றும், உம்மால் வந்த பெருமையை யன்றி, உம்மை விரும்ப வில்லையென்றும் ஒப்புக்கொண்டார்கள். மன்னனும் உமது மஹிமையையே மணந்ததாகவும், உமது ஸ்தானத்திற்கே மனைவியா யிருந்து, உம்மை வெறுத்ததாகவும் கூறினார்கள்.

அவள் ஒருத்தியே இதை அறிந்தவள். அதுவும், இதை அவள் அந்திய காலத்தில் கூறி யிராவிடின், அவளது வாய் வெளியிட்டதாகவும் நம்பி யிருக்கமாட்டேன். சொல் பிறகு.

தான் மிகவும் உண்மையான பிரியம் வைத்திருந்ததாக வெளிக்குக் காட்டிய உமது பெண், தன் பார்வைக்குப் படுபாம்புபோ லிருந்ததாகவும், ஒப்புக்கொண்டார்கள் அவர்கள் ஓடிப்போனதால் தடைப்பட்டதே யொழிய, இல்லாவிடின், அப் பெண்ணி னுயிரை விஷத்தால் போக்கிவிட்டிருப்பார்க ளாம்

ஆ! என்ன கூர்மை யுடைய கொடும் பாபி! ஆடவரின் ஆழத்தை அறிந்தார் யார்?—இன்னு முண்டோ ஏதாவது?

ஆம், அரசே,—இன்னும் கேடானது. உட்கொண்டவுடன் ஒவ்வொரு நிமிஷமும் கொஞ்சம் கொஞ்சமாக ஆவியை அழித்துக் குன்றச் செய்யவல்ல கொடிய பாஷாணம் ஒன்று, தமக்காகத் தன்னிடம் வைத்திருந்ததாக ஒப்புக்கொண்டார்கள். அது உமதாவியை மெல்ல மெல்ல அழிக்கும்

காலையில், கண் விழித்தும், முத்த மிட்டும், அழுதும், முற்றும் உமக் குபசாரணை செய்து, மேல்வேஷத்தால், உம்மை மோசம் செய்து, அவர்கள் வலையில் நீர் நன்றாய்ச் சிக்கிடவுடன், மகுடத்தைத் தன் தம்பிக்குப் புனைய நீர் ஒட்புக்கொள்ளும்படி செய்ய எண்ணினார்களாம். விந்தையாய் அவர் காணாது மறைந்திடவே, தன் எண்ணம் ஈடேறாதவர்களாய், வெந் துயர்ப்பட்டவர்களாய், வெட்க மின்றி ஜகதீசன் திருவுளத்திற்கு விரோதமாய்த் தான் எண்ணியதை யெல்லாம் வெளியிட்டு, தான் முயன்றதெல்லாம் முற்றுற வில்லை யென்று வருத்தப்பட்டு, துக்க சாகரத் தாழ்ந்து, ஆவி துறந்தார்கள்.

சி. அரசியின் பாங்கிகளே, இவை யனைத்தும் நீங்கள் கேட்டீரா?

பா. ஆம், அரசே, தங்கள் சித்தம்.

சி. எனது கண்கள் செய்த பிழை யன் றிது; ஏனெனில் அதன் பார்வைக் கவள் கட்டழகி யாகவே தோற்றப்பட்டாள். அவளது முகஸ் துதியைக் கேட்ட என் செவிகளின் குற்றமு மன்று; வெளிக்குக் காட்டியதுபோல் உள்ளே நற்குண முடையவளென எண்ணிய என் னிதயத்தின் தவறு மன்று; அவளை நம்பி யிராவிட்டால் அது பாபமா யிருந்திருக்கும். ஆயினும், என் னரும் புதல்வியே! அதை என் பிழையென நீ கூறலாம்; உன் உணர்ச்சியினால் அதை ருஜுப்படுத்தலாம். ஈசன் எல்லாவற்றையும் சரிப்படுத்துவாராக!—

லோகசேனன், ஜயபாலன், ஜோசியன் முதலிய பாண்டிய சிறைகள் காவலுடன் வருகிறார்கள்.

பிறகு பாசதாமனும், அவன் பின்னால் ஹேமாங்கியும் வருகிறார்கள்.

சி. கப்பத்தின்பொருட்டு, லோகசேனா, இங்கு வருகிறா யில்லை இப்பொழுது; அனேக வீரர்களைப் பலி கொடுத்தேனும் சிம்

ஹளத்தார் அதைக் கழித்துவிட்டனர், இறந்த வீரர்களின் இனத்தார், மாண்டவர்கள் மனம் சந்தோஷமடையும்படி அவர்கள் சிறைகொண்ட உங்கள் ஆவியைப் போக்கும்படி எம்மிடம் முறையிட் டிருக்கின்றனர். அதற்கு நாம் இசைந் தோம். ஆகவே உனது ஸ்திதியைப்பற்றி எண்ணுவாய்.

லோ. ஐயா, யுத்தத்தின் அதிர்ஷ்டவசத்தைத் தாம் கருதவேண் டும்; அகஸ்மாத்தாய் ஜெயம் உமது பக்கமாயது; நாங்கள் ஜெயித்திருந்தால், எங்கள் ரக்தக் கொதிப்பு அடங்கின பொழுது, எங்களால் சிறையாக்கப்பட்டவர்களை வாளுக் கிரையாக்குவதாக நாங்கள் பயப்படுத்தியிருக்கமாட்டோம். எங்கள் உயிரைக் கொடுத்தே எங்கள் சிறையை மீட்க வேண்டுமென்று ஈசன் திருவுளம் அங்ஙன மிருந்தால் அங் ஙனமே ஆகுக! பாண்டிய சூரன் பாண்டிய வீரத்துடன் உயிர் விடுவதே போதுமானது. எங்கள் அரசர் இதை உயி ருள்ளளவும் மறக்கமாட்டார். இவ்வளவு என் சொந்த க்ஷேமத்தின்பொருட்டு. ஆயினும் இது ஒன்றுமாத் திரம் வேண்டுகிறேன்; என் வேலையா ளாகிய இச் சிறு வன், சிம்ஹளத் துதித்தவன். இவன் சிறையைமாத் திரம் மீட்க உத்திர வளியும். இத்தனைப் பரிவும், கடமைப் படி நடக்கும் குணமும், சுறுசுறுப்பும், வேலை செய்வதில் அன்பு பாராட்டுந் தன்மையும், உண்மையும், சாதுர்யமும், தாயைப்போல் ஆதரிக்கும் தன்மையும் உடைய வேலை யாளை, எந்த எஜமானும் பெற்றிலன் இதுவரையில். அவனது நற் குணத்தையும் எனது வேண்டுகோளையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கருதுங்கால், நீர் அதை வெறுத் திடமாட்டீர் எனத் தைரியப்படச் செய்கிற தென்னை; அவன் பாண்டியனிடம் ஊழியனானபோதிலும், சிம்ஹள வாசி ஒருவனுக்கும் சிறிதும் துன்ப மிழைத்தா னில்லை. அவனைமாத்திரம் காப்பாற்றும். வேறொருவனையும் காத் திடவேண்டாம்.

சி. நிச்சயமாய் இவனை இதற்குமுன் பார்த்திருக்கிறேன். அவன் முகம் அறிந்த ஜாடையா யிருக்கிறது எனக்கு. சிறுவனே, உனது பார்வையால் எனது கருணையைப் பெற்றாய். நீ எனக்குச் சொந்த மாய்விட்டாய். ஏனோ, எக் காரணம்பற்றியோ, 'உன் உயிர் வாழ், பிள்ளா'யென உரைக்கிறேன். உனது எஜமானனுக்கு நீ வந்தனம் செய்ய வேண்டியதில்லை; உயிர் வாழ்! எனது கொடைக்கும் உன் ஸ்திதிக்கும் ஏற்றதான எதையேனும் தானமாக சிம்ஹள நாதரிட மிருந்து கேட்பையாக, நான் அதைக் கொடுக்கிறேன். சிறைப்பட்டவர்களுள் எவனைக் கேட்டபோதிலும், அவன் எல்லோரையும்விட உத்தமனாயினும், கொடுக்கிறேன் உனக்கு.

ஹே. அடியேன் மஹாராஜாவுக்கு மிகவும் கீழ்ப்படிந்து வந்தனம் செய்கிறேன்.

லோ. குழந்தாய், என் னுயிரைக் கேள் என்று உனக்குக் கூற வேண்டிய நிமித்திய மில்லை. ஆயினும் அதை நீயே கேட்பா யென அறிவேன் நான்.

ஹே. அன்று! அன்று!—ஐயோ!—இன்னும் அவசியமான வேலை அருகி லிருக்கிறது. என் மரணத்தைப்போல் அத்தனை துக்ககரமான ஒன்றை என் னெதிரிற் காண்கிறேன். ஆகவே, என் எஜமானனே, உம துயிரை நீரே பார்த்துக்கொள்ளவேண்டும்.

லோ.

கிறான்! சிறுவர் சிறுமிகளை நம்பி சந்தோஷத்தை யடைபவர்களுடைய சுகம் இப்படித்தான் அழியும் அரை நொடியில்—ஏன் இவ்வாறு திகைத்து நிற்கிறான் இவன்?

சி. குழந்தாய், என்ன வேண்டு முனக்கு? உன்னைப் பார்க்கப் பார்க்க உன்மீது பிரிய மதிகரிக்கிறதெனக்கு. என்ன கேட்கலாமென்று எவ்வளவு வேண்டினும் யோசனை செய்

நீ கவனித்துப் பார்க்கும் இம் மனிதனை அறிவாயா நீ? சொல், அவன் உயிரைக் காப்பாற்ற விரும்புகிறாயா? அவன் உனக்கு உறவா, உன் சிநேகிதனா?

ஹே. அவர் ஒரு பாண்டிய நாட்டார், நான் உமக்கெப்படி பந்துவல்லவோ, அப்படித்தான் அவர் எனக்கு உறவன்று. நானாவது உமது பிரஜையாய்ப் பிறந்தபடியால், உமக்கு சற்று சமீபத்தில் இருக்கிறேன்.

சி. அவனை ஏன் அப்படிப் பார்க்கிறாய் ஆனால்?

ஹே. அரசே, நான் சொல்வதைச் செவி சாய்த்துக் கேட்க விருப்பமாயின், கொஞ்சம் இரகசியமாய்க் கூறுகிறேன்.

சி. ஆம், அப்படியே அதிக சந்தோஷத்துடன், மன முழு கவனத்துடன் கேட்கிறேன். உன் பெயரென்ன?

ஹே. அரசே, என் பெயர் பாடலன்.

சி. குழந்தாய், நீ என் பையனாயிருப்பாயாக, நான் உனது எஜமானாயிருக்கிறேன். வா ஒரு புறம் உலாவுவோம். சங்கோசமின்றிப் பேசு.

[சிம்ஹளநாதனும், ஹேமாங்கியும் ஒரு புறமாய்ப் போய் பேசுகிறார்கள்.]

பா. இச் சிறுவன் இறந்து எழுந்து வந்திருக்கிறானல்லவா?

ஆ. பாடலனாயிருந்து மரித்த, அந்த அருமையாம் அழகுடைச் சிறுவன் இவனை ஒத்திருப்பதுபோல், ஒரு மணல் மற்றொரு மணலை ஒத்திராது.—நீ என்ன நினைக்கிறாய்?

கி. அவனே! இறந்து உயிர் பிழைத்திருக்கிறான்!

பா. பொறுங்கள்! பொறுங்கள். இன்னும் பார்ப்போம். அவன் நம்மைப் பார்க்கிறானில்லை. பொறுத்திருங்கள். ஜீவகோடிகளுள் இருவர் ஒரே மாதிரியாக இருக்கலாம். அவனாயிருந்தால், எப்படியும் நம்முடன் பேசியிருப்பானென்று உறுதியாய்ச் சொல்வேன்.

சி. ஆயினும் அவன் மரித்ததை நாம் கண்டோமே.

பா. பேசாதிருங்கள். இன்னும் பார்ப்போம்.

ஷி. [ஒரு புறமாக] என் தலைவிதான். அவர்கள் உயிரோ டிருக்கிறார்கள். இனிமேல் நன்மையோ, தீமையோ, எது வந்தாலும் வரட்டும்.

சி. [ஹேமாங்கியுடன் முன்னால் வந்து] வா, நமது பக்கத்தில் நிற்பாய். உறக்கக் கேள் நீ வேண்டுவதை. ஐயா, [ஈயாகாமனுக்கு] இப்படி வந்து நில்லும். இச் சிறுவன் கேட்பதற்கு பதில் கூறும், ஒன்றும் ஒளியாது; இல்லாவிடின் நமது அரசின்மீதும், அதற்கோர் பெருமையைத் தருகிற நமது கருணையின்மீதும் ஆணையிட்டுக் கூறுகிறோம், எப்படியாவது உம்மைக் கொடிய வேதனையிற்படுத்தி உண்மையைப் பொய்யினின்றும் வெளிப்படுத்துவோம்.—உம்—கேளிவரை.

ஹே. நான் வேண்டுகிற வரம், இந்தப் பிரபு யாரிடமிருந்து இந்த மோதிரத்தைப் பெற்றாரென்பதைச் சொல்லவேண்டுமென்பதே.

பாச. [ஒரு புறமாக] அவனுக்கேன் அந்த விஷயம்?

சி. உமது விரலி லிருக்கும் அந்த வயிரம், அது எப்படி உம்முடைய தாயது சொல்லும்?

ஈ. அதைச் சொன்னால் உமக்கு வேதனை யுண்டுபண்ணும்; ஏன் அதைச் சொல்லா திருக்க வில்லையென்று பிறகு என்னை வேதனைப்படுத்துவீர்.

சி. என்ன! என்னையா?

ஈ. எதை அடக்கி வைப்பது எனக்கு வேதனையா யிருக்கிறதோ, அதை வெளியிடும்படி நிர்ப்பந்திக்கப்படுவது எனக்கு சந்தோஷமே. பாதக மிழைத்து இம் மோதிரத்தைப் பெற்றேன். நீர் இத் தேசத்தினின்றும் அரத்திய கேசரிநாத

ருடையது இம்மோதிரம். அவரைவிட உத்தமரான புருஷன் இதுவரையில் இத்திரிலோகங்களிலும் வாழ்ந்ததில்லை.—இன்னும் கேட்பீராயின் எனக்கிருக்கும் துக்கத்தைவிட உமக்குத் துக்கம் அதிகமாயிருக்குமென நினைக்கிறேன். அரசே, இன்னும் கேட்க விரும்புகிறீரா?

சி. இதைச் சார்ந்த எல்லாவற்றையும்.

ஈ. எவள்பொருட்டு என்னிதயமானது ரக்தத்தைச் சொரிகிறதோ, எவளை நினைப்பினும் என் வஞ்சக நெஞ்சம் பயமுறுகிறதோ, அப்படிப்பட்ட உலகில் ஒப்புயர்வில்லா உமது பெண்மணி!—ஐயோ! எனக்கு விடை யளியும்—எனக்கு மூர்ச்சை வரும்போ லிருக்கிறது.

சி. என் பெண்ணு? அவளைப்பற்றி என்ன? உன் மனத்தைத் தேற்றிக்கொள். நாம் இன்னும் கேட்குமுன் நீ மரிப்பதைவிட, சுபாவத்தின்படி உன் ஆயுட்காலமெல்லாம் நீ உயிர்வாழவேண்டுமென்று விரும்புவேன். கஷ்டப்பட்டாவது நடந்ததைச் சொல் அப்பா, சீக்கிரம்.

ஈ. ஒரு கால்—அச் சமயம் பாழாய்ப் போகுமாக!—மதுரைமாநகரில்—ஓர் மாளிகையில் நடந்த விருந்தில்—அம்மாளிகை அழிந்து போகுமாக!—நாங்கள் புசித்ததெல்லாம் விஷமாயிருந்திருக்கலாகாதா, இல்லாவிடின் நான் என் வாயிற் போட்டதாவது அங்ஙன மிருந்திருக்கலாகாதா!—உத்தமரான பாசதாமர்,—அவரைப்பற்றி நான் என் சொல்வது? அயோக்கியர்க ளிருக்குமிடம் இருக்கத் தகாதபடி அத்தனை அருங் குணம் வாய்த்தவர், கிடைத்தற் கரிய யோக்கியர்கட்குள் மிகச் சிறந்தவர் – எங்கள் பாண்டி நாட்டுப் பாவையரது, எங்களுள் அதிக நன்றாய்ப் பேசத்தகுந்தவனுடைய டம்பமான வார்த்தையையும் அற்பமானதாய்ச் செய்யத்தக்க, அத்தனை அழகையும், லட்சுமியின் வனப்பையும், ரதியின் கவினையும் மழுங்கச் செய்யத் தக்க அமரருலகத்திலும் கிடைத்தற் கரிய உருவத்தையும், ஆடவர்கள் பெண்டிரிடம்

விரும்பத் தக்க எல்லா நற்குணங்களையும் ஒருங்கு திரட்டிய அருங் கற்பையும், ஆண் மக்களுடைய மதியை மயக்கி தங்கள் வலைக்குட் சிக்கச் செய்ய வல்ல தோற்றத்தையும், நாங்கள் எடுத்து புகழ்ந் துரைக்கக் கேட்டவராய்—

சி. நான் நெருப்பின்மீது நிற்கிறேன், சமாசாரத்தைச் சொல் விரைவினில்!

ஈ. இதோ வந்துவிட்டேன்; விரைவில் துக்கத்தில் மூழ்கவேண்டுமென்று விருப்ப மிருக்கிறாற்போ லிருக்கிறது. இந்த பாசதாமர், ஒரு அரச குமரியின்மீது காதல் கொண்ட மேம் பட்ட கனவானுக்கே உசிதமானபடி—இதைக் கேட்டு, நாங்கள் புகழ்ந்தவர்களை இழித்துக் கூருமல்,—அவ்விஷயத் தில் பொறுமை யென்பதே உருக்கொண்டதுபோ லிருந்தார் —தன் காதலியை வர்ணிக்க ஆரம்பித்தார்—அவரது நாவினுல் எடுத் துரைக்கப்பட்ட அவளது அழகும் அருங் குணமும், நாங்கள் வீம்பாய்ப் பேசிய மடந்தையர்கள் மடப் பள்ளிக்கே ஏற்றவர்களென்று எண்ணும்படி செய்தது, அன்றேல் எங்களை எடுத்துக் கூற வகை யறியாக் குடியார் களுக்குச் சமான மானவர்க ளாக்கியது.

சி. பிறகு, பிறகு சமாசாரம்?

ஈ. உம்முடைய பெண்ணின் கற்பே. அங்குத்தான் ஆரம்பிக் கிறது. கற்பினில், அருந்ததியும் அவளுக்குப் பின்னிட்ட வளே என அறைந்திட்டார். அதைக் கேட்ட பாபி நான், அவர் புகழ்ந்ததை இகழ்ந் துரைத்து, அக் கற்பினை அழித் திடுவதாக, என் பொன்னை அவரது அருமையாம் விரலி லணிந்திருந்த இம்மோதிரத்திற் கெதிராகப் பந்தயம் வைத் தேன். பிறகு நான் உண்மையிற் கண்டபடி, அவளது கற்பில் ஊர்ஜ்ஜிதமான நம்பிக்கைவைத்த, உத்தமரான அச் சுத்த வீரன், இந்த மோதிரத்தைப் பந்தயமாய் வைக்க இசைந்தார்,—இது சூர்ய நாராயணரது விமானத்தில் ஜ்வ லிக்கும் வஜ்ர மாயினும், அதைப் பந்தயம் வைத்திருப்பார்,

அந்த விமானத்தின் விலை முழுதும் பெறத் தக்க அத்தனை விலையுயர்ந்த தாயினும், அதைப் பயமின்றிப் பந்தயம் வைத் திருக்கலாம் அவர். இக் காரியத்தின்பொருட்டு உடனே புறப்பட்டு இங்கு சிம்ஹளம் வந்தேன். வந்து, கற்பிற் கரசி யாகிய உம்முடைய பெண்ணிடமிருந்து, காதகத்திற்கும் காதலுக்குமுள்ள பெரும் வித்தியாசத்தைக் கண் டறிந் தேன். அச்சமயம் அரண்மனையில் என்னைப் பார்த்தது தங்க ளுக்கு ஞாபகம் இருக்கலாம். இவ்வாறு, என் ஆசை குறையா விட்டாலும், என் கோரிக்கை யெல்லாம் குன்றிப் போகவே, என் பாண்டி நாட்டு மூளையானது, மந்தமான இச் சிம்ஹளத்தில் பாதகமான சூழ்ச்சிசெய்ய ஆரம்பித்தது; அதற்கு அநுகூலமான சந்தர்ப்பங்களும் வாய்த்தன எனக் கு; சுருக்கிச் சொல்லுமிடத்து, எனது சூழ்ச்சி நன்றாய்ப் பலித்திட, உத்தமரான கேசரிநாதர் அவள் கற்பினில் வைத் திருந்த நம்பிக்கையானது நைந்துபோய்ப் பித்தம் பிடித் திடச் செய்யத் தக்க, கள்ளத்தனமான அறி குறிகளைக் கொண் டேகினேன். அவளது படுக்கை யறையிற் கட்டி யிருந்த திரைகள், படங்கள், முதலியவைகளைக் குறித்துக் கொண்டுபோனேன்; மிகுந்த திருட்டுத்தனமாய்ப் பெற்ற அவளது இந்த கை வளையையும் கொண்டுபோனேன்; அவ ளுடன் சம்பந்தப்பட்டு அவளது கற்பினை நான் அழித்த தாக அவர் உண்மையில் நம்பும்படியாக, அவளது அந்தரங்க மான அங்க மச்சத்தையும் அறிந்து சென்றேன். அதன் மேல் அவர்.—இப்பொழுதும் அவரை—என் கண்ணெதிரிற் காணுகிறேன்—என எண்ணுகிறேன்.—

பாச. ஆம்! [முன்னுக்கு வந்து] அப்படியே காணுகிறாய்! பாண் டிய பாதகா! அந்தோ! பாபி நான்! மட்டிலா மௌட் டீக மடையன்! கொடும் கொலை புரிந்த கொடியோன்! திருடன்! இவ்வுலகில் இதுவரையில் இருந்த, இப்பொழு திருக்கிற, இனி பிறக்கப்போகிற பாதகர்களுக் கெல் லாம் தக்க பெயர் எதுவோ, அப் பெயரிட் டழையும்

கள் என்னை ! எதை வேண்டினும் கூறும். ஆ ! கயிறு வது, கத்தியாவது, கடு விஷமாவது கொடுங்கள், நேர்மை யினின்றும் தவறு நியாயவாதியையும் கொடுங்கள்.—ஐயா ! அரசனே ! யுக்தியாய் யமவாதனை செய்யத்தக்க உமது தூதர்களை வரவழையும் உடனே ! உலகத்தில் வெறுக்கப் படும் பொருள்களை எல்லாம், அவைகளினும் இழிந்தவனாகி, அவைகள் மேலானவைகளென மதிக்கச் செய்திடும் நான் தான் பாசதாமன் !—உமது பெண்ணைக் கொன்றவன் ! பாத கனைப்போல் இதிலும் பொய் பேசுகிறேன்.—என்னைவிட குறைந்த பாதகன், தெய்வத்திற்கே துரோஹம் செய்யும் பாபி, ஒருவனைக்கொண்டு அதைச் செய்வித்தேன் ! அவள் கற்பிக் கோர் குடியிருப் பானவள்; அன்று, கற்பே உரு வெடுத்தவள் ! காறித் துப்பும், கல்லைவிட் டெறியும், களி மண்ணைப் பொழியும் என்மீது, தெருவில் திரியும் நாய் களை என்னைக் குலைக்க விடும், ஒவ்வொரு பாதகனும், இனி பாசதாமனென வழைக்கப்படட்டும். இனியாவது பாரினில் பாதகம் குறையுமாக !—ஹா ! ஹேமாங்கி ! என் ஆருயிர்க் காதலியே ! ஹா ! ஹேமாங்கி ! ஹேமாங்கி ! ஹேமாங்கி !

ஹே. பிராணநாதா ! பொறும் ! கேளும், கேளும் !

பாச. இதென்ன நாடகமா ஆடுகிறோம் ? பித்தம் பிடித்த பய லே ! போய் விழுந்துகிட அங்கே ! அதுதான் உன் பாகம் !

[ஹேமாங்கியைப் பிடித்துத் தள்ள, அவள் கீழே விழுகிறாள்.]

வி. ஐஐயோ ! உதவுங்கள் என் தலைவியாம் ராஜ குமாரிக்கு.— ஹா ! எஜமானனே ! இதுவரையில் ராஜ குமாரியைக் கொல் லவில்லை நீர். இப்பொழுதுதான் கொன்றீர் !—ஐயோ ! காப்பாற்றுங்கள் ! காப்பாற்றுங்கள் ! என் அருமைத் தலை வியை !

சி. உலகம் சுழல்கிறதா ?

பாச. நான் ஏன் இவ்வாறு நடுங்குகிறேன் ?

வி. அம்மணி! அம்மணி! கண் விழித்துப் பாரும்!

சி. இது உண்மையா யிருக்குமாயின், ஈசன் என்னை மகிழ்ச்சியினால் மாளும்படி திருவுளங்கொண் டிருக்கிறார்போலும்.

வி. அம்மணி, எப்படி யிருக்கிறது உமக்கு?

ஹே. போ, என் கண் ணெதிர் நில்லாதே! பாழும் பாதகா! எனக்குப் படு விஷத்தைக் கொடுத்தாயே! போ இவ்விடம் விட்டு! அரசர்க ளிருக்குமிடத்தில் நீ சுவாசமும்விட யோக்கியனல்ல.

சி. ஹேமாங்கியின் குரல்!

வி. அம்மணி! நான் உமக்குக் கொடுத்த பெட்டியில் சிறந்த வோர் ஔஷதம இருப்பதாக நான் எண்ணியிராவிட்டால், ஈசன் என்னை எரி வாய் நரகில் வீழ்த்துவாராக! மஹாராணியே அதை என்னிடம் கொடுத்தார்கள்

சி. இன்னும் ஏதாவது புதிய விஷயமோ?

ஹே அதனால் நான் இறந்தவ னானேன்.

கரு. ஈசனே!—மஹாராணியவர்கள் சொல்லியதில் ஒன்றைக் கூறுதுவிட்டேன்; அதனால் நீ குற்றமற்றவன் என்பது ருசுவாகும். "விசாகன், நான் சிறந்த ஔஷதமெனக் கொடுத்த மருந்தைத் தன் தலைவிக்குக் கொடுத்திருப்பானாயின், நான் எலிக்குப் பாஷாண மிட்டுக்கொல்வதுபோல், அவளும் கொல்லப்பட்டிருப்பாள்" என்று கூறினார்கள்.

சி. கருணையா, ஈதென்ன?

கரு. அரசே, பன் முறை மஹாராணியவர்கள் என்னைப் படு விஷங்கள் தனக்குச் செய்து தரும்பொருட்டு வேண்டினார்கள். ஒன்றுக்கும் உதவாத நாய் பூனை முதலிய அற்பப் பிராணிகளைக் கொன்று, அவற்றின் சக்தியை அறிய விரும்புவதாகக் கூறினார்கள். அவர்களுடைய கோரிக்கையின் கொடுமையைக் கருதியவனாய், உட்கொண்டவுடன் ஆருயிரை

சற்று நேரம் அடக்கி வைத்து, சிறிது பொழுதுக் கெல்லாம் ஐம் பொறிகளும் தத்தம் காரியங்களை ஆரம்பிக்கச் செய்யத் தக்க, ஒரு ஔஷதத்தைக் கலந்து கொடுத்தேன்.—அதைப் புசித்தீரா நீர் ?

ஹே. அதைத்தான் அருந்தியிருக்க வேண்டும், ஏனெனில், ஆருயிர் போனவள் போலவே கிடந்தேன் நான்.

பா. குழந்தைகளே ! அதில்தான் நாம் மோசம் போனோம்.

சி. ஆகையால் இதுதான் பாடலன்.

ஹே. உம்முடைய சொந்த மனைவியை ஏன் உதறித் தள்ளுகிறீர் ? உன்னத மாம் பாறையின்மீது தாம் இருப்பதாக எண்ணி மறுபடியும் உதறித் தள்ளும் என்னை.

பாச. [அவளைக் கட்டி யணைத்து] என் ஆருயிரே ! மரம் சாகுமளவும் அவ்விடமே யிருப்பாயாக, மதுரமாம் கனியைப்போல் !

சி. இதென்ன குழந்தாய் ! என்னுடலே ! என்னை ஒரு பொருட்டாக மதிக்க மாட்டாயோ இனிமேல் ? என்னுடன் பேசவும் மாட்டாயா ?

ஹே. [பணிந்து] அண்ணா, உமது ஆசீர்வாதம்.

பா. [கிரிதரன் ஆர்வராகனுக்கு] நீங்கள் இச் சிறுமியின்மீது ஆசைப் பட்டபோதிலும், அதற்காக உங்கள்மீது நான் குறை கூற வில்லை. அதற் கோர் இயற்கையாம் காரண மிருந்தது உங்களுக்கு.

சி. எனது கண்களினின்றும் விழும் ஜலமானது உனக்குக் கங்கா ஸ்நான மாகுக ! ஹேமாங்கி, உன் தாயார் இறந்துவிட்டாள்.

ஹே. அண்ணா, அதைக் கேட்க எனக்கு வருத்தமா யிருக்கிறது.

சி. அவளைப்பற்றி கருதவேண்டாம். அவளாலேயே நாம் எல்லாம் இவ்வாறு விந்தையாய்ச் சந்திக்கும்படி நேரிட்டது. ஆயினும் அவளது தம்பி போய்விட்டான், எப்படியோ, எங்கோ, ஒன்றும் அறியோம்.

அரசே ! இனி எனக்குப் பயமில்லாது உண்மையை உரைக்கிறேன். கலேபரர், எனது தலைவி காணாமற் போனவுடன், உருவிய கத்தியுடன் என்னிடம் வந்து, அவர்கள் சென்ற வழியைத் தனக்குத் தெரிவிக்காவிடின், க்ஷணத்தில் என்னைக் கொல்வதாகக் கோபாவேசம் கொண்டவராய் சத்தியம் செய்தார். அகஸ்மாத்தாய் எனது எஜமானன் எனக் கெழுதிய பொய்யான கடிதம் ஒன்று என் பையி லிருந்தது. அது அவர் அரச குமாரியைக் காங்கேயன்துறை யருகிலுள்ள மலைச் சாரலில் நாடிச் செல்லும்படி செய்தது. என்னிடமிருந்து எடுத்துச் சென்ற, என் எஜமான னுடையொன் றணிந்தவராய், அவளது கற்பை அழித்திடுவதாகச் சபதம் செய்து, அதி கோபமாய் விரைந்து சென்றார். பிறகு அவர் என்ன வாயினரோ எனக்குத் தெரியாது.

அக் கதையை நான் முடிக்கிறேன், அவ்விடம் நான் அவரைக் கொன்றேன்.

ஹா ! அங்ஙன மில்லா திருக்குமாக ! நீ எனக்குச் செய்த உபகாரத்திற்கு, என் வாயால் உனக்குக் கடின தண்டனை விதிக்க நான் விரும்ப வில்லை. அப்பா, வீர வாலிபனே ! அதனை இல்லை என்று மறுத்திடுவாய்.

நான் அதைச் சொல்லி யாயிற்று. நான் அவ்வாறுதான் செய்தேன்.

அவன் அரச குமாரன்.

மிகுந்த அவமரியாதை யுள்ளவன். அவன் எனக்குச் செய்த குற்றங்கள் அவனை அரச குமாரனாகக் காட்ட வில்லை. அலை கடலும் அவ்வாறு என்னைக் குறித்து இரைந்திருக்குமாயின், அதனையும் நான் எதிர்த்திடச் செய்யும்படியான, அத்தனைத் தூஷணையான வார்த்தைகளால் என்னைத் தூண்டினான். நான் அவன் தலையை வெட்டி எறிந்தேன். அவன் இவ்விடம் நின்று, நான் சொல்லும் கதையை தான் சொல்லா திருக்கிறானே என்று, நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன்.

சி. உன்பொருட்டு எனக்கு மிகவும் விசனமா யிருக்கிறது. உன் வாயினாலே உனக்குத் தண்டனை விதித்துக்கொண்டாய். ஆகவே, நீ நியாயத்திற் குட்பட வேண்டியவனே ; நீ இறந்தவனே !

ஹே. அத் தலையில்லா உடல் என் பிராணநாதருடையதென்று எண்ணினேன் நான்.

சி. குற்றவாளியைக் கட்டி நமது சமூகத்தினின்றும் அழைத்துச் செல்லுங்கள்.

பாச. பொறும், அரசே ! இவன் கொன்ற மனிதனைப்பார்க்கிலும் இவன் உயர்ந்தவனே ! உம்மைப்போல் உயர் குடிப் பிறப்புடையோனே. ஆயிரம் களேபரர்கள் உமக் கிழைந்த உதவியைவிட, இவ னொருவன் உமது நன்குமதிப்பைப் பெறத் தக்க உதவி புரிந்திருக்கிறான். [சேவகர்களுக்கு] கட்டாதீர்கள் அவன் கைகளை, அவைகள் கட்டப்படுவதற்குப் பிறந்தன வன்று.

சி. என்ன ! ஐயா, வயோதிக வீரனே ! நீர் செய்த உதவிக்கு வெகுமதியைப் பெறுமுன், என் கோபத்திற் கிடங் கொடுத்து, அதைக் கெடுத்துக்கொள்ளப்போகிறீரா என்ன? என்னைப்போல் உயர்ந்த வம்சத் துதித்தவனாக இவன் எப்படி ஆவான் ?

ஆ. அது விஷயத்தில் அவர் அதிகமாய்த்தான் கூறிவிட்டார்.

சி. அதற்காக நீ இறக்கவேண்டியதே.

பா. நாங்கள் மூவரும் மரிக்கிறோம் ஒன்றாய். ஆயினும் எங்களி லிருவர், இவனைப்பற்றி நான் உரைத்தபடியே உயர் குலத் துதித்தவரென ரூபிக்கிறேன்.—என் குழந்தைகளே ! எனக்கு அபாயகர மாயினும், நான் இவ் விஷயத்தை எடுத் துரைக்கவேண்டியவனே. ஆயினும், இது உங்களுக்கு நன்மை பயப்பதே யாகும்.

ஆ. உங்களுடைய அபாயம், எங்களுடையது மாகும்.

சி. நம்முடைய நலம், அவருடையதாம்.

பா. ஆனால் கேளுங்கள்—தங்கள் உத்திரவின்படி. மஹாராஜா, தங்களுக்குப் பாலராயன் என்னும் பிரஜை ஒருவன் இருந்தான்.

சி. என்ன அவனைப்பற்றி? நாட்டினின்றும் துரத்தப்பட்ட துரோஹியவன்.

பா. அவன்தான் இந்த வயோதிக வேடம் தரித்தவன். நாட்டினின்றும் துரத்தப்பட்டவனே; ஆயினும் எவ்வாறு துரோஹி என்பதை அறிகிலேன்.

சி. பிடித்துப் போங்கள் இவனை வெளியே! உலக முழுவதுமே அவனைக் காத்திட முடியாது.

பா. அவ்வளவு அவசரம் வேண்டாம். உம்முடைய பிள்ளைகளை வளர்த்த கூலி எனக்கு முன்பு கொடும். நான் அதைப் பெற்றவுடன், அட்சணமே ராஜாங்கத்திற்கு அதைப் பறித்தெடுத்துக் கொள்ளும்.

சி. என் பிள்ளைகளை வளர்த்ததற்கா!

பா. நான் மரியாதை யின்றி மடத்தனமாய்ப் பேசுகிறேன், இதோ முழந்தாளிட்டுப் பணிகிறேன். நான் எழுந்திருக்குமுன் என் பிள்ளைகள் உயர்ந்த பதவியைப் பெறச் செய்கிறேன். பிறகு வயோதிகனான தந்தையை நீர் இஷ்டப்படி தண்டியும். மஹாராஜா, என் பிள்ளைகள் என வெண்ணி, என்னைத் தந்தை யென வழைத்திடும், இச் சிறுவர்க ளிருவரும் என் குமாரர்க ளன்று. என் இறையே! இவ் விருவரும் உமது வயிற்றி லுதித்தவர்களே! உமது உதிரத்திற் பிறந்த உதிரமே!

சி. என்ன! என் பிள்ளைகளா?

பா. உமது தந்தைக்கு நீர் எப்படி தனயனோ, அப்படியே, நிச்சயமாய், உமது தனயரே! வயோதிக மார்க்கனான நானே, ஒரு காலத்தில் நீர் நாட்டைவிட்டுத் துரத்திய பால

ராயன். நான் செய்த குற்றமும், நான் ராஜத் துரோஹி எனத் தீர்மானிக்கப்பட்டதும், அதற்காகத் தண்டிக்கப்பட்டதும், எல்லாம் உமது மனம்போன போக்கே. இந்த இரண்டு அரும் அரச குமாரர்களை—இவர்கள் ராஜ வம்சத் துதித்தவர்களே—இந்த இருபது வருட காலமாக வளர்த்து வந்தேன். என்னால் என்ன கலைகளெல்லாம் கற்பிக்க முடியுமோ அவைகளெல்லாம் கற்றிருக்கின்றனர். நான் கற்றுணர்ந்தது, சமுகத்திற்கு நன்றாய்த் தெரியும். நான் துரத்தப்பட்டபொழுது, அவர்களைத் திருடும்பொருட்டு நான் மணந்த அவர்கள் தாதியாகிய மாயூரவல்லி, இச் சிறுவர்களைத் திருடினாள். அங்ஙனம் செய்யும்படி, நானே அவளை ஏவினேன். செய்யாதிருக்கும்பொழுது எதற்காகத் தண்டிக்கப்பட்டேனோ, அதைப் பிறகு செய்துமுடித்தேன்; உமக்கு நன்மை இழைத்ததற்காக நான் தண்டிக்கப்பட்டது, என்னை உமக்குத் துரோஹம் செய்யும்படி உந்தியது. உமக்கருமையாம் இவர்கள் காணாமற்போக, அதற்காக நீர் அதிகமாய்த் துக்கப்படுவீரெனும் எண்ணமானது, அவர்களைத் திருடும்படி என்னை அதிகமாய் உந்தியது. ஆயினும் அன்புடை அரசே! இதோ இருக்கின்றனர் உமது குமாரர்கள். உலகில் உத்தமரான உயிர் நண்பர்களிருவரை நான் இழக்கவேண்டும். தேவதைகளெல்லாம் அவர்களுக்கு ஆசீர் வசனத்தை அழகிய பனியைப்போல் அவர்கள்மீது பொழிவாராக! ஏனெனில் அவர்கள் ஆகாயத்தின்கண் அழகிய நட்சத்திரங்களாக இருக்கத் தக்க அருமை வாய்ந்தவர்கள்.

சி. உனது கண்ணீரானது உனது மனத்திலிருப்பதை எனக்கு நன்றாய் அறிவிக்கிறது, இப்பொழுது நீ சொல்லுகிற கதையைப்பார்க்கிலும், நீங்கள் மூவரும் எனக் கிழைத்த உபகாரம் அதிக ஆச்சரிய மானதே. என் பிள்ளைகளை இழந்தேன் நான். இவர்களே அப் பிள்ளைகளாயிருப்பார்க

ளாயின், இவர்களைவிட மேலான புத்திரர்களைப் பெற விரும்பும் வகை யறியேன்.

பா. கொஞ்சம் பொறும்—பாலதரனென நான் பெயர்வைத்த, உத்தம குணம் வாய்ந்த இச் சீமானே, உம்முடைய குமாரர்களில் உண்மையான கிரிதரன். எனது நடுவேலனும் இச் சீமானே, உமது இளைய குமாரனும் ஆர்வராகன். அவனது தாயாரான மஹாராணி, தன் கையால் தைத்த ஓர் நூதனமான வஸ்திரத்தில், இவனைச் சுற்றி யிருந்தது; இன்னும் இதை நன்றாய் ரூபிக்கும்பொருட்டு அதை நான் சுலபத்தில் உமக்குக் காட்டக் கூடும்.

சி. கிரிதரனுக்குக் கழுத்தில் கண்டவர்களெல்லாம் ஆச்சரியப் படும்படியான அழகிய வோர் மருள் இருந்தது.

பா. அந்தக் குமரனே இவன்; இதோ இன்னும் அவனிடம் அந்த இயற்கையின் அறிகுறி இருக்கிறது. தெய்வமே, இதை இவனுக்குக் கொடையா யளித்தது, இப்பொழுது இவனுக்குச் சாட்சியாய் ரூபிக்கும்பொருட்டு.

சி. ஹா! மூன்று மக்களைப்பெற்ற தாயானேனோ நான்? தான் பெற்ற பெரும் பேற்றினைக் குறித்து எந்தத் தாயும் இதை விட அதிக சந்தோஷப்பட்டிருக்கமாட்டாள். உங்களுக்குச் சொந்தமான உயர் பதவியினின்றும் நழுவிப்போய், அதி விந்தையாய் மறுபடியும் அப்பதவியை அடைந்தபடியால், இவ் வரசை யாளும்பொருட்டு சிரஞ்சீவிகளாய் வாழ்வீர்களெனப் பிரார்த்திக்கிறேன்!—ஹா! ஹேமாங்கி, இதனால் நீ ஒரு அரசை இழந்தாய்.

ஹே. அப்படி அன்று, அண்ணு; இதனால் நான் இரண்டு உலகங்களைப் பெற்றேன்.—ஹா! என் சகோதரர்களே! நாம் இவ் வண்ணம் ஒருங்கு சேரவேண்டுமென்று இருந்தது போலும். இனி எப்பொழுதும் என்னை யதார்த்தவாதி என்றழையுங்

ளர். நான் உங்களுடைய தமக்கையா யிருந்தபொழுது, நீங்கள் தம்பியென் றழைத்தீர்கள். நீங்கள் எனது தம்பிகளா யிருக்க, அப்படியே அழைத்தே னுங்களை.

சி. நீங்கள் இதற்குமுன் சந்தித்தீர்களா என்ன ?

ஆ. ஆம், அரசே.

கி. பார்த்தவுடன் பிரியங்கொண்டோம். அப்படியே வாழ்ந்தோம், அது மரித்ததாக எண்ணிய சமயம்வரை.

கரு. மஹாராணியின் ஔஷதத்தை உட்கொண்டபடியால்.

சி. இயற்கையின் அருங் குணமே குணம்! எல்லாவற்றையும் நான் எப்பொழுது கேட்டு முடிக்கப்போகிறேன்? இவ்வாறு துரிதமாய் எல்லாம் நடந்தேறியதின் விவரத்தை, நன்றாய்ப் பகுத்தறிதல், மிகவும் ஆச்சரியகரமா யிருக்கவேண்டும். எங்கே இதெல்லாம் நடந்தது? அங்கே எப்படி வாழ்ந்துவந்தாய்? நம்முடைய சிறையாகிய இப் பாண்டிருக்கு எப்பொழுது ஆளாய் அமர்ந்தாய்? உனது தம்பிமார்களிடமிருந்து எப்படிப் பிரிந்தாய்? எப்படி முதலில் அவர்களைச் சந்தித்தாய்? ஏன் அரண்மனையை விட்டோடினாய்? எங்கே ஓடினாய்? இவைகளும், நீங்கள் மூவரும் யுத்தத்திற்கு வந்த காரணமும், இன்னும் நான் அறியாமலிருக்கிற எத்தனையோ விஷயங்களும், அகஸ்மாத்தின் மேல் அகஸ்மாத்தாய் நடந்தேறிய அநேகங் கிளைச் சந்தர்ப்பங்களும், நான் கேட்டறியவேண்டும்; ஆனால் இப் பெரும் விஷயங்களை யெல்லாம் கேட்டறிய, நமக்கிது இடமுமல்ல, காலமு மல்ல. அதோ பார், பாசதாமன் ஹேமாங்கியை இணை பிரியாது நிற்கிறான்; அவளோ, சந்திரன் ஒளிவீசி எல்லோருக்கும் சந்தோஷ முண்டாக்குவதேபோல், தனது கண் பார்வையினால், அவளது கணவனையும், தம்பிமார்களையும், என்னையும், தனது பழய எஜமானனையும், சந்தோஷ

சாகரத்தில் மூழ்கச் செய்கிறாள். துக்கத்தினின்றும் மாறி சந்துஷ்டியை யடைந்தது எல்லோர் முகத்திலும் காணப்படு கிறது. இவ்விடம் விட்டுப் பெயர்வோம். கோயில்களி லெல்லாம் பூசனை செய்வோம்; யாக சாலைகளி லெல்லாம் ஹோமம் செய்வோம்.—[பாலராயனுக்கு] நீ எனது சகோதர னே; அங்ஙனமே இனி உன்னை என்றும் பாவிப்போம்.

ஹே. [பாலராயனுக்கு] நீரும் என் தந்தையே. இச் சுப காலத் தைக் காணும்பொருட்டு எனக் குதவி செய்தீர்.

சி. கட்டுப்பட்ட இவர்களைத் தவிர மற்றவர்களெல்லாம் மட் டில்லாச் சந்தோஷத்தை யடைந்தோம். அவர்களும் சந்தோ ஷமா யிருக்கட்டும்; அவர்களும் நமது சுகத்தை அனுபவிக் கட்டும்.

ஹே. எனது எஜமானரே, உமக்கு நான் இன்னும் ஊழியம் செய்கிறேன்.

பா. நீடூழி காலம் சுகமாய் வாழ்வாயாக!

சி. பெருமையுடன் உயிரைக் கருதாது போர் புரிந்த அந்த எளிய வீரன், இவ்விடத்திற் கழகா யமர்ந்து, ஓர் அரசனு டைய வந்தனத்தை வஹித்திருப்பான்.

பாச. அரசே, எளிய வேஷத்துடன் இம் மூவரையும் பின் தொடர்ந்த போர்வீரன் நானே! அச்சமயம் நான் அனு சரித்த எண்ணத்திற்கு அவ் வுடை எற்றதா யிருந்தது— ஈயாகாமா, நான்தான் அவன் என்பதை இவர்களுக்குத் தெரிவிப்பாய். உன்னைக் கீழே கிடத்தினேன்; உன்னைக் கொன்றிருக்கலாம் நான்.

நான் மறுபடியும் கீழ்ப்படிகிறேன். [முழந்தா ளிட்டு] அப்பொழுது உமது பலத்திற்குக் கீழ்ப்படிந்த வண்ணம், இப்பொழுது துயரத்தின் பாரத்தால் ஏங்கிய என் இதய

மானது என் முழந்தாள்களைக் கீழ்ப்படியச் செய்கிறது. பன்முறை உமக்குக் கொடுத்திருக்கவேண்டிய என் னுயிரை எடுத்துக்கொள்ளும்படி வேண்டுகிறேன் உம்மை. ஆயி னும் முதலில், இதோ உமது மோதிரம், இதோ காதல னுக்குக் கட்டுறுதி கூறியதில் கடுகளவும் மாருத கற்பிற் கரசியாம் காரிகையின் கைவளை.

பாச. பணிந்திடாதீர் என்னை. உம்மீது எனக் குள்ள ஸ்வதந்தரத் தையெல்லாம் உம்மைக் காப்பாற்றும்பொருட்டே உப யோகிப்பேன்; உமமீ துள்ள துவேஷமெல்லாம் உம்மை மன்னிக்கும்பொருட்டே உபயோகிப்பேன். வாழும்; ஏனை யர்களிடம் மேலாக நடந்துகொள்ளும்.

சி. தயாளமான தண்டனை; நமது மருமகனிடமிருந்து நாம் கருணையைக் கற்போம். மன்னிப்பே அனைவர்க்கும் நம் மறுமொழியாம்.

ஆ. ஐயா, எங்கள் பந்துவைப்போலவே, பக்கத்தில் நின் றாதவு னீர எங்களுக்கு; நீர் அங்ஙனமே ஆயது, எங்களுக்கு அதிக சந்தோஷத்தைத் தருகிறது.

பாச. உங்கள் ஊழியன், உத்தம குமாரரே—பாண்டிய நாட்டுப் பிரபுவே, அழையுமிப்படி உமது ஜோசியனை. நான் உறங் கியபொழுது, பரமேஸ்வரன் தனது விடைமீதேறி, என் தாய் தந்தையர் முதலானோர் உருவங்கள் புடைசூழ, என் முன் தோன்றியதாகக் கனவு கண்டேன். விழித்துப் பார்த்த பொழுது, இப் பட்டயம் என் மார்பின்மீது கிடக்கக் கண்டேன். அதன் உட்பொருள், அதி னின்றும் நான் ஒன்றும் அறிந்துகொள்ளக் கூடாதபடி, அத்தனைக் கடின மமைந்ததாயிருக்கிறது அதனை விரித் துரைக்கும் விஷ யத்தில் அவன் சாமர்த்தியத்தைக் காட்டட்டும்.

லோ. பீலி ரமணு!

ஜோ. இதோ, மஹாப்பிரபு.

லோ. இதைப் படித்து, இதன் பொருளை யுரை

ஜோ. [படிக்கிருன்.] "ஒரு சிம்ஹத்தின் குட்டியானது, தன்னைத் தானே அறியாது, தேடாது கண்டு, அழகிய காற்றின் கொடியால் அணைக்கப்படும்பொழுது, பெரிய வோர் ஆல மரத்தினின்றும் பெருங் கிளைகள் வெட்டப்பட்டு, அநேக வருட காலமாய் அழிந்து போய், மறுபடியும் உயிர்த்து, பழைய மரத்துடன் சேர்க்கப்பட்டு, புதிதாய் எப்பொழுது வளருமோ, அபபொழுதே, பாசதாமன் படும் துயரங்கள் முடிவு பெறும; சிம்ஹளம் அதிர்ஷ்ட முடைய தாகி, வள மையும் வாழ்வு முடையதாய்ப் பெருகி யோங்கும்."—கேசரி நாதரே, நீர் தான் இதில் கண்ட சிங்கக்குட்டி; கேசரிநாதன் என்கிற உமது பெயரின் சரியான அர்த்தம் அதைக் குறிக் கிறது; அழகிய காற்றின்கொடி உமது கற்புடை மகளே.

[சிம்ஹளநாகனுக்கு]

கொடி போன்றவர் என வர்ணிக்கிறோம் ஸ்திரீகளை; கொடி யிடையாா என்றும கூறுகிறோம்—ஆகவே காற்றின் கொடி என்பது கற்பிற் கரசியாம இப் பதிவிரதையே. [பாசதாம னுக்கு] இபபொழுது, இப் பட்டயத்தில் கூறி யுள்ளபடி யே, உமக்குத் தெரியாமலும், நீர் தேடாமலும், இவ் வழகிய காற்றின் கொடியால் அணைக்கப்பட் டிருக்கிறீர்.

சி. இதில் கொஞ்சம அர்த்தம இருக்கிறது.

ஜோ. ராஜாதிராஜனே, பெரிய வோர் ஆல மரம், என்பது உம் மைக் குறிக்கிறது உமமிடமிருந்து வெட்டப்பட்ட கிளை கள் என்பது, உம திரு குமாரர்களைக் குறிக்கிறது; அவர் கள், பாலராயரால் திருடப்பட்டவர்களாய், பல நாள் மடிந்ததாக எண்ணப்பட்டு, இப்பொழுது உயிர் பெற்ற வர்களாய், உன்னத விருட்ச மாகிய உம்முடன் சேர்க்

கப்பட்டார்கள். இதனால் சிம்ஹளத்திற்கு வளமையும் வாழ்வு முண்டாகும்.

சி. சரி, நமது சமாதானத்தை ஆரம்பிப்போம். காயார் லோக சேனரே, வெற்றி பெற்றவ ராயினும், நாம் செழியனுக்குக் கீழ்ப்படிந்து பாண்டியாதிபத்யத்திற்குப் பகுதிப்பட்டவ ராய், இதுவரையிலும் நமது கொடிய ராணியின் போதனை யினால் தவக்கப்பட்டு கட்டாது நின்ற, கப்பத்தை வழக் கப்படி வழங்க, வாக் களிக்கிறோம். அவளது கொடுஞ் செயல்களுக்காக, அவளையும் அவளது தம்பியையும், ஜக தீசன் தர்மப்படி பெருந் தண்டனைக் குட்படுத்திவிட்டார்.

ஜோ. தேவதைகளே இவ்வாறு எல்லாம் க்ஷேமமாய் சமாதான மாகவேண்டுமென்று தீர்மானித்து, இவ்வாறு இழைத் திருக்கின்றனபோலும். இப்பொழுதுதான் முடிந்த இந்த யுத்தம் ஆரம்பிக்குமுன், லோகசேனருக்குத் தெரிவித்த நான் கண்ட கனவானது, இந்த க்ஷணம், முற்றிலும் பூர்த்தி யாகிவிட்டது. ஏனெனில், பாண்டி நாட்டு மகரமானது, ஆகாயத்திற் கிளம்பி, தெற்கினின்றும் மேற்காகப் பறந்து, இங்கு வந்து ஆதித்யன் ஜோதியில் அப்படியே ஐக்கிய மா னது; இது மகரத்துவஜனை நமது கேசரிபாண்டியர், மேற்கு நாட்டில் பிரகாசிக்கின்ற சிம்ஹளநாதருடன் சமா தானமாகி ஒருங்கு சேர்வார், என்பதை முன்பே அறிவித் தது.

சி. தெய்வங்களுக்கு நாம் யாகங்கள் இயற்றிப் பூசிப்போம். நமது யாக சாலைகளிலிருந்து எழும் ஹோமப் புகையானது, அவர்களது நாசிக் கெட்ட, அதை அவர்கள் முகரட்டும். இந்த உடன்படிக்கையை நமது பிரஜைகளெல்லாம் அறியும் பொருட்டு பிரசுரம்செய்வோம். நாம் புறப்படுவோம்; பாண்டிய துவஜ படமும் சிம்ஹளத்து சிம்ஹத் துவஜமும் ஒன்றாய்ச் சிநேகமாகப் பறக்கட்டும். இப்படியே கண்டிநக

ரத்தைப் பிரதட்சணம் செய்வோம். பிறகு பரமேஸ்வரன் கோவிலுக்குச் சென்று, அங்கே நமது சமாதானத்தை அவர் சந்நிதானத்தில் ஊர்ஜிதப்படுத்துவோம்; பிறகு பெரும் விருந் துண்டு ஸ்திர மாக்குவோம்.—போவோம் வாருங்கள் அங்கு !—ரக்தம் படிந்த கைகளைக் கழுவுமுன், இம்மாதிரியான சமாதானத்தில் முடிந்த யுத்தமானது, எப்பொழுதும் நடந்ததில்லை இதுவரையில்.

[எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.